# ஐந்து பரிசுத்த தேவதைகள்
## (பர-சுக்ல-த்ரயர்கள்)
(மத்வ த்வைத சித்தாந்தத்தைத் தழுவி எழுதப்பட்ட நூல்)



கன்னட மூலத்தில்: வித்வான் பெம்மத்தி வெங்கடேஷாச்சார்

தமிழில்: 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்

**தொடர்புக்கு**:

**பெம்மத்தி வெங்கடேஷாச்சார்**
**91414 95120**

**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**
**89044 58276**

# பதிப்பாளரின் குறிப்பு

ஐந்து பரிசுத்த தேவதைகள் என்னும் இந்தப் புத்தகம் வெளியிடப்படுகிறது. லட்சுமிதேவி, பிரம்ம-வாயு, சரஸ்வதி-பாரதி இவர்களைப் பற்றி தேவையான அளவு விஷயங்களை இந்தப் புத்தகத்திலிருந்து நீங்கள் தெரிந்துகொள்ளலாம். பல புராணங்களின், உபநிஷத்களின் மற்றும் கிரந்தங்களின் ஆதாரங்களின் பேரில் இந்த ஐந்து தேவதைகளைப் பற்றி, அவர்களின் மகிமைகளைப் பற்றி இந்தப் புத்தகம் விளக்குகிறது. ரங்கவிட்டல கன்னட பத்திரிக்கையில் வெளிவந்த கட்டுரைகளை மீண்டும் ஒரு முறை சரிபார்த்து, வித்வான் பெம்மத்தி வெங்கடேஷாச்சார் இந்த புத்தகத்தைக் கொண்டு வந்திருக்கிறார்.

கிரந்தங்களை படிப்பதிலேயே தம்மை ஈடுபடுத்திக்கொண்டிருக்கும் ஆசாரியர், தேவதைகளின் விஷயத்தில் அனைவருக்கும் புரியுமாறு இந்தப் புத்தகத்தை மிகவும் சரளமாக எழுதியிருப்பது நாம் செய்த பாக்கியம் என்றே கருதவேண்டும். இத்தகைய ஞான காரியங்களில் ஸ்ரீபாதராஜ மடம் எப்போதும் முன்னிலை வகிக்கிறது. ஸ்ரீஸ்ரீபாதராஜர் தாம் அவதரித்ததிலிருந்து இன்று வரை இந்த ஞான காரியங்களை செவ்வனே நடத்தி வருகிறார். இந்த மடத்துடன் நாமும் இந்த சத்காரியத்தில் பங்கேற்று, இந்தப் புத்தகத்தை அச்சிட்டு வெளியிடுவது மிகவும் மகிழ்ச்சியே. ஸ்ரீபாதராஜரின் அருள் நம் அனைவரின்மேலும் எப்போதும் நிலைத்திருக்கட்டும் என்பதே நம் விருப்பம்.

இந்தப் புத்தகத்தைப் படிப்பவர்கள், இதை முழுமையாக புரிந்துகொண்டு, இன்னும் மேலதிக ஆராய்ச்சி செய்யவேண்டும். நம் தகுதியை இன்னும் மேற்கொண்டு எடுத்துச்செல்ல இது உதவியாக இருக்கும்.

பதிப்பாளர்.

# முன்னுரை

ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள் என்னும் புத்தகம் வெளிவந்துவிட்டது. கேள்வி-பதில் வடிவத்தில் இருந்த அந்தப் புத்தகத்தை பலரும் பாராட்டினார்கள். ஆகவே, தாரதம்யத்தில் வரும் அனைத்து தேவதைகளைப் பற்றியும் அதே கேள்வி-பதில் வடிவத்தில் புத்தகம் வெளியிடவேண்டும் என்று விருப்பம் எனக்கு வந்தது. அதன் முயற்சியாக, இந்தப் புத்தகத்தில், லட்சுமிதேவி, நான்முகப் பிரம்மன், முக்யபிராணதேவர், சரஸ்வதி மற்றும் பாரதிதேவிகளைப் பற்றி பல விஷயங்களை சொல்ல முயன்றிருக்கிறேன்.

நாராயணனிடமிருந்து, பாரதிதேவி வரை அவர்களின் மகிமைகளை பல ஆதாரங்களின்படி இங்கே சொல்லியிருக்கிறேன். இவர்களைப் பற்றி கட்டுரை வடிவில் சுருக்கமாக படித்தால் போதும் என்று நினைப்பவர்கள், இந்த முன்னுரையைப் படித்தாலே போதுமானது. பல மேலதிகத் தகவல்கள் வேண்டும் என்பவர்கள், 'ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள்' மற்றும் 'ஐந்து பரிசுத்த தேவதைகள்' என்ற இரு புத்தகங்களையும் முழுக்க படிக்கவேண்டும்.

## ஸ்ரீமன் நாராயணன்

அனைத்து நற்குணங்களும் நிரம்பியவரும், எந்தவித தோஷங்களும் இல்லாதவரே ஸ்ரீமன் நாராயணன். நாராயணனிடமிருக்கும் குணங்களை லட்சுமிதேவியும் முழுமையாகத் தெரிந்துகொள்வது சாத்தியமில்லை. இவரிடமிருக்கும் குணங்கள் அனைத்துமே முழுமையானவையாகும். மோத, பிரமோத முதலான அனந்த குணங்கள், விக்ஞான, பிரக்ஞான முதலான ஞான குணங்கள் என்று ஸ்ரீஹரியின் அனைத்து குணங்களும் முழுமையானவையாகும். அவரின் ஒவ்வொரு ரூபமும் பல ரூபங்களைக் கொண்டவையாகும்.

நாராயணனின் குணம், செயல் ஆகிய அனைத்தும் முழுமையானவை. ஞானமானது ஆனந்தமயமானதைப் போல, ஆனந்தமும் ஞானமயமானதாகும். வேதங்களிலிருக்கும் ஆனந்தம் முதலான சொற்கள், ஸ்ரீஹரியின் ஆனந்தம் என்னும் குணத்தையே நமக்கு அறிமுகப்படுத்துகிறது. எல்லா குணங்களும் அனைத்து காலங்களிலும் இருப்பவை, மாறாதவை. விளக்குவதற்கு சாத்தியம் இல்லாதவை.

ஸ்ரீஹரி அனைத்து சுபகாரியங்களின் பலன்களை ஏற்றுக்கொள்பவராக இருக்கிறார். எவ்வித தற்காலிக அல்லது லௌகிக சுகங்களையும் இவர் விரும்புவதேயில்லை. ஒரே நேரத்தில் பற்பல ரூபங்களைக் கொண்டவராகிறார். அவரது அவதாரங்கள் நித்யமானவை (அழியாதவை). விகாரம் இல்லாதவை (அழகானவை). அப்ராக்ருதமானவை (இயற்கையானதல்ல). சச்சிதானந்தமயமானவை. ஒவ்வொரு அவதாரமும் அந்தந்த காலத்திற்கேற்ப, நேரத்திற்கேற்ப அனந்த

அவதாரங்களானவை. உலகத்தைப் படைக்கும் பிரம்ம ருத்ரர்களையே நிர்வகிப்பவர் ஸ்ரீமன் நாராயணன்.

ஸ்ரீஹரி அணுவை விட அணுவாக சிறியதாக இருக்கிறார். பெரியதைவிட பெரியதாகவும் இருக்கிறார். பெரியது-சிறியது, தூர-அருகில், தெளிவான-தெளிவில்லாத என்று பல முரண்களாக (இரு விதமாகவும்) இருக்கிறார். இவை அனைத்தும் ஸ்ரீஹரியின் ஒப்பில்லா சக்தியினால் உண்டாகின்றன. ஆனால் இவரது பலவித ரூபங்களில் எவ்வித வேறுபாடுகளும் இருப்பதில்லை.

எப்படி சூரியனிடம் இருட்டிற்கு வேலையில்லையோ, அப்படி அனைத்து நற்குணங்களும் நிரம்பியவரான ஸ்ரீஹரியிடம் எவ்வித தோஷத்திற்கும் வேலையில்லை.

உலகத்தில் இருக்கும் பொருட்களைப் போல, ஸ்ரீஹரி வேறுபாடுகளைக் கொண்டவரல்ல. அவர் வேறுபாடுகள் இல்லாதவர், ஆனாலும் பல்வேறு ரூபங்கள் எடுத்து, வெவ்வேறாகக் காட்டிக்கொள்பவர். இத்தகைய அற்புத சக்தியை வேறு எங்கும் / யாரிடமும் காணமுடியாது. ஸ்ரீஹரியின் ஒவ்வொரு உறுப்புகளும்கூட தனித்தனி ரூபமாகவே ஆகியிருக்கிறது. ஒவ்வொரு உறுப்புகளுக்கும் அனைத்து வேலைகளையும் செய்யும் திறன் இருக்கின்றது. இத்தகைய சிறப்பு மிக்க ஸ்ரீஹரி, உலகத்தின் உள்ளும் வெளியேயும் வியாபித்திருக்கிறார். ஆனாலும், தனக்கும் உலகத்திற்கும் சம்பந்தமே இல்லாததுபோல் தனித்திருக்கிறார். இந்த உலகத்தை ஸ்ரீஹரியின் ஸ்வரூபம் என்று அறியக்கூடாது. ஸ்ரீஹரியும் இந்த உலகத்தின் ஸ்வரூபம் என்று அறியக்கூடாது. உலகத்தில் இருக்கும் அனைத்துப் பொருட்களின் வேலைக்கும் இவரே காரணமாக இருக்கிறார். அனைத்து எழுத்துக்களும் இவரையே குறிக்கின்றன. இதுவே ஸ்ரீஹரியின் விபூதி ரூபத்தின் சிறப்பு ஆகும்.

அனைவரின் முழிப்பு ஆகிய நிலைகளுக்கு இவரே தூண்டுகோலாக இருக்கிறார். அனைவரின் அனைத்து செயல்களும் ஸ்ரீஹரியின் இச்சைப்படியே நடக்கின்றன. ரமா, பிரம்மா முதலான தேவதைகளும்கூட ஸ்ரீஹரியின் கண்ணசைவின்படியே நடக்கும்படி, சுதந்திரம் இல்லாதவர்களாக இருக்கின்றனர். ஸ்ரீஹரியின் முழுமையான பிரதிபிம்பமாக (பிரதிபலிப்பு) இருக்கின்றனர். பொருள், செயல், காலம், உலகம், ஜீவன், கடமை, வாழ்க்கை, முக்தி ஆகிய அனைத்துமே ஸ்ரீஹரிக்கு கீழ்ப்படிந்தே இருக்கின்றன. அவரது கட்டளைப்படியே நடக்கின்றன. அவரின் அருளினாலேயே இவை செயல்படுகின்றன. இவர் விரும்பவில்லை என்றால் அவை இருப்பதில்லை. இந்த உலகத்தை படைத்ததால் ஸ்ரீஹரிக்கு எவ்வித பயனும் இல்லை. தன் லீலைகளைக் காட்டுவதற்காக அனைத்தையும் செய்கிறார். ஸ்ரீஹரியிடம் எதையும் / யாரையும் வேறுபடுத்திப் பார்க்கும் தோஷங்கள் இருப்பதில்லை. அந்தந்த பொருட்களின் சுபாவம் / தகுதிக்கேற்ப, அந்தந்த பொருட்களை கட்டுப்படுத்துகிறார்.

அஞ்ஞானம், துக்கம், கவலை ஆகிய தோஷங்கள் இவரிடம் அறவே இருப்பதில்லை. பற்பல உலகங்கள், இவரின் சரீரத்தில் இருக்கும் முடிகளில் இருக்கும் ஒரு சிறு துகளுக்கு ஒப்பானவை. உலகத்தின் படைப்புத் தொழிலை ஸ்ரீஹரியானவர் எப்படி செய்கிறார் என்பதை பிரம்மன் முதலான தேவதைகளும்கூட சரியாகப் புரிந்து கொள்வது சாத்தியம் இல்லை. ரமாதேவியாலும்கூட இது சாத்தியம் இல்லை. பற்பல உலகங்களில், பற்பல ரூபங்களினால் நிலைத்திருந்து, பற்பல லீலைகளைப் புரிந்து, தன் இஷ்டப்படி பற்பல ரூபங்களை நிறுத்துகிறார். இதுவே இவரது விளையாட்டு.

லட்சுமிதேவியுடனேயே எப்போதும் இருக்கிறார். லட்சுமிதேவிக்கு எப்போதும் இவரது இன்மை இருப்பதில்லை. அனைத்து இடங்களிலும் இருப்பவர், அனைத்தையும் நிர்வகிப்பவர், அனைத்து சுப - பதார்த்தங்களையும் ஸ்வீகரிப்பவராக ஸ்ரீஹரி இருக்கிறார். இவரது குணங்களை, மகிமைகளை முழுவதுமாக அறிவதற்கு சாத்தியமே இல்லை. ஸ்ரீஹரியை முழுவதுமாக அறிந்தவர் என முன்னர் யாரும் இருந்திருக்கவில்லை; தற்போதும் இல்லை; பின்னரும் யாரும் வரப்போவதும் இல்லை. எண்ணிக்கை இல்லாத காலங்களில் ஸ்ரீஹரியே சர்வோத்தமனாக இருக்கிறார். மிகவும் ஆச்சரியமான சக்திகளைக் கொண்டவர், அதி அற்புதமான சக்தி ஸ்வரூபன் இவரே.

இத்தகைய ஸ்ரீஹரியானவர், அனைத்து சாத்விகர்களுக்கும் மோட்சத்தைக் கொடுத்து, எண்ணிக்கையில்லாத சுகங்களைக் கொடுத்து அருள் பாலிக்கிறார்.

## மகாலட்சுமி

பிரம்ம வாயுகளைவிட மகாலட்சுமி கோடி குணங்கள் அதிகம் கொண்டவர். விஷ்ணுவின் நற்குணங்களை ஒவ்வொரு கணமும் நினைத்துக் கொண்டே இருப்பவர். தினமும் புதிதுபுதிதாக காணும் குணங்களை வியப்புடன் பார்த்து, மகிழ்ச்சிக்கடலில் மூழ்கிக் கொண்டிருப்பவர். மறுபடி ஸ்ரீஹரியின் குணங்களின் தியானத்திலேயே இருந்து, மறுபடிமறுபடி அதையே கண்டு வியப்பில் மூழ்குகிறார். எந்தவிதமான தற்காலிக குணங்களையும் கொண்டவரல்லர். விஷ்ணுவைப் பற்றிய ஞானத்தை ஒவ்வொரு நொடியும் பெற்றுக்கொண்டிருப்பவர். ஸ்ரீஹரியின் அருளால், படைத்தல், காத்தல், அழித்தல், ஞானம், அஞ்ஞானம், பந்தம், மோட்சம் முதலானவைகளை தன் பார்வையாலேயே நடத்தி வருபவர். வசு, ருத்ர, ஆதித்ய முதலான தேவதைகள் செய்யும் பூஜைகளை ஏற்றுக்கொள்பவர். சம்சாரிகளுக்கும் முக்தர்களுக்கும் அனைத்து வித உதவிகளையும் செய்யத் தகுந்தவர் இவரே.

இத்தகைய ரமாதேவியை சர்வ-சுதந்திரள் (தன்னிச்சையாக அனைத்தையும் செய்பவர்) என்று எப்போதும் எண்ணக்கூடாது. ஸ்ரீஹரிக்கு கட்டுப்பட்டே, அனைத்து திறனையும் பெற்றிருப்பவர். அழகானவர், குறை எதுவும் இல்லாதவர், சர்வமங்கள ரூபம் கொண்டவர், அனைத்து சுபகாரியங்களையும் ஏற்றுக்கொள்பவர் இவரே.

எப்போதும் ஸ்ரீஹரியுடனேயே இருப்பவர். ஸ்ரீஹரிக்கு, லட்சுமிதேவியைவிட மிகவும் பிரியமான பொருள் என்று வேறு எதுவும் இல்லை. அந்தந்த தேசத்திற்கு, காலத்திற்கு ஏற்றாற்போல், ஸ்ரீஹரிக்கு சமமாக அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவர். ஆகையாலேயே, சமனா என்று அழைக்கப்படுபவர். அணுவை விட சிறியதாகவும், பெரியதைவிட பெரியதாகவும் ரூபத்தைக் கொண்டவர். ஸ்ரீஹரியை பற்பல ரூபங்களினால் பூஜிப்பவர் இவர். ஸ்ரீஹரி எந்தவித நற்செயல்களை செய்தாலும், தானும் அனைத்து விதங்களிலும் அவரை அனுசரித்துப் போகிறார்.

எண்ணிக்கையற்ற கல்யாண குணங்களைக் கொண்டவராக இருக்கிறார். பிரம்மாதி தேவதைகளைவிட அதிகமான மகிமைகளைக் கொண்டவர். தர்க்கங்களுக்கு அப்பாற்பட்டவர், புத்தியினால் அறியப்பட முடியாதவராக பெரும் மகிமைகளைக் கொண்டவர். தியானத்திற்கு யோக்கியமான ரூபத்தை எடுத்திருக்கிறார். தனது அற்புதமான சக்தியினால், அனைத்து தர்மங்களையும் காக்கிறார்.

விஷ்ணுவை மட்டுமே புகழும் சில வேதங்களைத் தவிர, மற்ற வேதங்கள் அனைத்தாலும் புகழப்படுபவர். இந்த மகாலட்சுமியானவர், ருக்மிணி, சத்யபாமா, சீதா ஆகிய பற்பல அவதாரங்களை எடுத்திருக்கிறார். இவரின் மகிமைகளை சொல்லி முடிப்பதற்கு, தேவதைகள், ரிஷிகள், கந்தர்வர்கள் என யாராலும் சாத்தியமில்லை.

## பிரம்ம-வாயுதேவர்

பிரம்ம பதவிக்கு தகுதியானவர்கள் ருஜுஜீவிகள் எனப்படுகின்றனர். ருஜுஜீவிகளுக்கு பரமோத்ஸாஹ என்னும் ஒரு வேறுபாட்டினை விட்டுவிட்டால், வேறு எந்த வேறுபாடுகளும் இருப்பதில்லை. அனைத்து நல்ல லட்சணங்களுடன் கூடியவர்கள். அனைத்து உலகத்தையும் ஆள்பவர்களாக இருக்கின்றனர். ஸ்ரீஹரியின் விருப்பத்தில் இவர்களின் தேகங்கள் அழிகின்றன. அனைத்து உலகங்களையும் எந்நேரமும் நினைத்துப் பார்க்கும் திறன் படைத்தவர்கள். இவர்களது அறிவு ஆகாயத்தைப் போல மிகவும் பரந்திருந்திருந்தாலும், ஸ்ரீஹரியைப் பற்றி முழுவதுமாக தெரிந்திருப்பவர்கள் அல்லர். இவர்களது அறிவு அனாதி நித்யவாக (தொடக்கம் இல்லா காலத்திலிருந்து, முடிவில்லா காலம் வரை) இருக்கிறது. முக்தர்கள் ஆகும்வரை ஸ்ரீஹரியைப் பற்றிய ஞானமானது தொடர்ந்து வளர்ந்துகொண்டே இருக்கிறது. முக்தியில் மட்டும் அந்த அறிவு ஒரேமாதிரியாக இருக்கிறது. ருஜுகளின் பரோக்ஷஞானமானது தொடக்கம் இல்லா காலத்திலிருந்து முழுமையாக இருக்கிறது. வேதங்களைவிட அதிகமான ஞானத்தைப் பெற்று மிகவும் திறமையாளர்களாக ஆகின்றனர்.

வாயுதேவர் அனைத்து ஜீவர்களுக்கும் அபிமானியாக இருக்கிறார். ஜீவஸ்வரூபங்களை நிர்வகிப்பவராக இருக்கிறார். புத்தி, பலம், தைரியம், ஸ்தைர்யம், ஞான, வைராக்ய, பக்தி ஆகிய குணங்களுக்கு அபிமானியாக

இருக்கிறார். ஜீவர்களின் ஆனந்த-அனுபவத்திற்கும், அவர்களை மோட்சத்திற்குக் கொண்டுபோவதற்கும் அபிமானியாக இருக்கிறார். மற்றும் ஜகத்குருகளாகவும் இருக்கிறார். அசையும் மற்றும் அசையா பொருட்கள் அனைத்திற்கும் அபிமானியாக இருக்கிறார். மஹத் தத்வம் முதலான அனைத்து தத்வங்களுக்கும் அபிமானியாக இருக்கிறார். இந்திரியங்களின் வேலைகளை அந்தந்த இந்திரியங்களின் அபிமானியானவர்களின் மூலமாக செய்விக்கிறார்.

ஆவஹ, விவஹ, சம்வஹ, பராவஹ, ப்ரவஹ, உத்தவ, பரிவஹ ஆகிய ரூபவிசேஷங்களினால் லோகங்களை காக்கின்றனர். அண்டோகதத்தில் கூர்மரூபியாக இந்த உலகத்தை காக்கின்றனர். பஞ்சபேதங்கள், பஞ்சதன்மாத்ரங்கள், அனைத்து ஜீவர்களின் நடவடிக்கைகளும் இந்த பிரம்ம வாயுகளாலேயே நடக்கின்றன. ரமா நாராயணரின் அருளினால் அனைத்து செயல்களையும் செய்பவர்களாக இருக்கின்றனர். பிராணாபானாதி ரூபங்களினால், நாதக்ருகல ஆகிய ரூபங்களைக் கொண்டிருக்கின்றனர்.

அனைத்து தேவதைகளுக்கும் அவரவர் பதவிகளைக் கொடுத்து, அவர்களின் வேலைக்கேற்ப அதிகாரங்களை வழங்குகின்றனர். அனைவருக்கும் ஜீவனைக் கொடுப்பவர்கள் மட்டுமல்லாமல், முக்தியையும் கொடுப்பவர்களாக இருக்கின்றனர். முக்தஜீவர்களுக்கு முடிவில்லாத மகிழ்ச்சியைக் கொடுப்பவர்களாக இருக்கின்றனர். சூரியன், சந்திரன், அக்னி, பர்ஜன்ய, பிருத்வி, அன்னாதிகளில், அனைத்து திசைகளில், அனைத்து தேவதைகளில், ரிஷிகளில், பிருஹதி முதலான சந்தஸ்களில் நிலைத்திருக்கிறார்கள்.

விஷ்ணுவின் அனிருத்த முதலான ரூபங்களுடன், பிராணாதி ஐந்து ரூபங்களில் வியாபித்து, அனைத்தையும் அவர் ஆணையினால் நடத்தி, ஜாக்ரதாதி (முழிப்பு) முதலான அனைத்து நிலைகளுக்கும் அதிபதியாக இருக்கின்றனர். ரமா நாராயணருக்கு மட்டுமே இவர்கள் கீழ்ப்படிகின்றனர். சுபபதார்த்தங்களை மட்டுமே ஸ்வீகரிப்பவராக இருக்கின்றனர். 72,000 நாடிகளில் 77,000 ரூபங்களினால் நிலைத்திருக்கின்றனர். நாராயணர் மற்றும் மகாலட்சுமியை புகழும் வேதமந்திரங்களை விட்டு, மற்ற அனைத்து வேத மந்திரங்களினாலும் புகழப்படுபவர். பற்பல ரூபங்களை எடுத்திருக்கின்றனர். உலகத்தை வழிநடத்துபவர்களாக இருக்கின்றனர். மொத்தம் மூன்று கோடி ரூபங்களை எடுத்து உலகில் உள்ள சஜ்ஜனர்களுக்கு அருள்கின்றனர்.

பிராணாபானாதி ஐந்து ரூபங்களினால், நாக கூர்மாதி ஐந்து ரூபங்களினால், மொத்தம் பத்து ரூபங்களை தரித்து, ஆத்யாத்ம, அதிபூத, அதிதைவங்களில் நிலைத்திருக்கின்றனர். இந்த வாயுதேவருக்கு, ஹனுமந்தன், பீமசேனர், பூர்ணப்ரக்ஞர் என்று மூன்று அவதாரங்கள் இருக்கின்றன. இந்த அவதாரங்கள், பல (வலிமை), குணம் ஆகியவற்றால் மூலரூபத்திற்கு சமமாகவே இருக்கின்றன. பிரம்மனுக்கு மட்டும் பூமியில் அம்ச-அவதாரமே இருப்பதில்லை. இவர்களது தேகமானது பிராக்ருதமாக (இயற்கையான) இருந்தாலும், சுத்த சத்வாத்மகவாக இருக்கின்றது. மகாபிரளயத்தில் மட்டுமே நாசம் அடைகிறது. கர்வம், கோபம்

ஆகிய தோஷங்களிலிருந்து எப்போதுமே தூரமாக இருக்கிறார். வாயுதேவரை வேதங்கள் அமிர்தம் என்று புகழ்கிறது. பிரளய காலத்தில் அனைவரும் தூங்கும் நிலையில் இருக்கும்போது, இவர் மட்டும் முழித்திருந்து, ஸ்ரீஹரியின் நற்குணங்களைப் பாடியவாறு இருக்கின்றார். ஸ்ரீஹரியை மகிழ்ச்சிப்படுத்தவேண்டியே அனைத்து செயல்களையும் செய்கிறார். இவரின் சாதனையை மெச்சி, ஸ்ரீஹரியானவர் இவருக்கு சஹபோக என்னும் சுகத்தைக் கொடுக்கிறார். வாயுதேவரே முந்தைய கல்பத்தில் பிரம்மதேவராக வருகிறார். அனைவருக்கும் குருவாகி, மோட்சத்திற்கு அழைத்துப் போகிறார்.

## சரஸ்வதி - பாரதி தேவியர்

பிரம்மனின் மனைவி சரஸ்வதி. வாயுதேவரின் மனைவி பாரதிதேவி. இவர்களது தேகம் ப்ராக்ருதமாக இருந்தாலும்கூட, சுத்த-சாத்வீகாத்மகமாக இருக்கிறது. சர்வ-சத்குண-பரிபூர்ணமானவர்கள். எவ்வித தோஷமும் இல்லாதவர்கள். பிரளய காலத்தில் இவர்களின் தேகம் அழிகின்றன. ருத்ர-இந்திரன் முதலான தேவர்களால் வணங்கப்படுபவர்கள். சரஸ்வதிதேவி, ப்ரக்ருதிக்கு அபிமானினியாக இருக்கிறார். மஹத் தத்வம் முதலான தத்வங்களை உருவாக்குபவராக இருக்கிறார். அவற்றின் அழிவிற்கும் இவரே காரணமாகிறார். வாயுதேவரைவிட பிரம்மன் பதவியில் சிறிதளவு அதிகமான இடத்தில் இருப்பதைப்போல, சரஸ்வதிதேவியும் பாரதிதேவியைவிட பதவியில் சிறிதளவு அதிக இடத்தைப் பெற்றிருக்கிறார். யோக்யதையில் (தகுதி) இருவரும்கூட சமமானவராகவே இருக்கின்றனர். சரஸ்வதி - பாரதிதேவியின் மகிமைகள் எண்ணிப் பார்க்கமுடியாத அளவிற்கு அதிகமானவை. சிரத்தை, திருப்தி, சுகபோகம், குருபக்தி, ஹரிபக்தி போன்ற சுபதர்மங்களுக்கு அபிமானினியாக இருக்கின்றனர். பிரம்ம-வாயுகள் வேதங்களால் புகழப்படுவதைப்போல, இவர்களும் புகழப்படுகின்றனர். வேதங்களுக்கு அபிமானினிகளாக இருக்கின்றனர். பிரம்மரின் அர்த்தநாரி உடலின் இடதுபாகத்தில் நிலைத்திருக்கும் சரஸ்வதி, பிற ரூபங்களைவிட உத்தமளானவர். 32 லட்சணங்களைக் கொண்டு, வேதாபிமானி என்று பெயர்பெற்ற சரஸ்வதி பாரதியரின் மகிமை ஒப்பற்றது.

## இந்தப் புத்தகத்தைக் குறித்து

மகாபாரதம் கிரந்தம் முழுக்கவே பீமசேனதேவரின் புகழையே சொல்கிறது. ராமாயணம் ஹனுமனின் மகிமையை புகழ்கிறது. மத்வவிஜயம் ஸ்ரீமதாசார்யரை பாடுகின்றது. இந்த மூன்று கிரந்தங்களிலும் ஹனும-பீம-மத்வ என்னும் மூன்று அவதாரங்களின் கதையும் விளக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது. லட்சுமிதேவியின் கதையானது எல்லா ஸ்ருதி-இதிகாச புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. சரஸ்வதி - பாரதிதேவியரின் கதைகூட அப்படியே. இந்த சிறிய புத்தகங்களில் மேற்சொன்ன அனைத்து கிரந்தங்களின் சாரத்தையும் கொண்டுவருவது கடினமான காரியம். அப்படி அவற்றை கொண்டுவரும் முயற்சியையும்கூட நான் செய்யவில்லை. அப்படி செய்வது முடியாத விஷயம். பரசுக்லத்ரயரைப் பற்றி

யாருக்கு தெரிந்து கொள்ளவேண்டுமென்று ஆசை இருக்கிறதோ, அப்படிப்பட்டவர்களுக்கு ஒரு சிறிய அறிமுகத்தை இந்தப் புத்தகம் தரும். சொல்லிய விஷயங்களுக்கு ஆதாரபூர்வமாக விளக்குவதற்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இதில் சொல்லப்பட்டிருக்கும் ஒவ்வொரு தேவதையைப் பற்றியும் தனியான புத்தகமே எழுதும் அளவிற்கு விஷயங்கள் உள்ளன. லட்சுமிதேவியைப் பற்றி இதில் மிக சுருக்கமாகவே சொல்லப்பட்டிருக்கிறது. படிப்பவர்கள் மேற்சொன்ன விஷயங்களை நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

மகாபாரதம், ராமாயணம், பாகவதம், உபநிஷத்களில் இருக்கும் விஷயங்கள் மற்றும் ஆதாரங்கள் இந்தப் புத்தகத்தில் கையாளப்பட்டிருக்கின்றன. ஆனாலும், மேலும் படிக்க ஆர்வம் உள்ளவர்கள், மூலகிரந்தங்களையே நாடவேண்டும். இந்தப் புத்தகம் ஒரு சிறிய அறிமுகம் மட்டுமே என்பதை நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

‘ஸ்ரீஹரியின் 40 அவதாரங்கள்’ என்னும் புத்தகத்தைப் போலவே இதிலும் கேள்வி - பதில் வடிவமே உள்ளது. ஒவ்வொரு விஷயமும் அறிஞர்களிடம் கேட்டுத் தெளிந்தபிறகே சொல்லப்பட்டிருக்கிறது. இதில் உள்ள அனைத்து கட்டுரைகளும், ரங்கவிட்டல கன்னடப் பத்திரிக்கையில் ஏற்கனவே வெளிவந்து, பல்லாயிரம் பேர் படித்திருக்கின்றனர்.

## நன்றி நவிலல்

ரங்கவிட்டல கன்னட பத்திரிக்கைக்கு என் நன்றி. இத்தகைய கட்டுரைகளை எழுதத்துவங்கிய ரங்கவிட்டல பத்திரிக்கையினால்தான். பற்பல சாதகர்கள் இவற்றை படிப்பதற்கு உதவிய பத்திரிக்கையும் ரங்கவிட்டலதான்.

இந்தக் கட்டுரைகளை எழுதுவதற்கு உதவியாக இருந்த பாகவதாதி புராணங்கள், பல தாச சாகித்ய புத்தகங்கள், பன்னஞ்சே கோவிந்தாசார்யரின் சொற்பொழிவுகள் மற்றும் பல அறிஞர்களின் வழிகாட்டுதல்களுக்கும் என் மனப்பூர்வமான நன்றி.

ரங்கவிட்டல கன்னட பத்திரிக்கையில் பல நாட்களாக எனக்கு எழுத வாய்ப்பளித்த, என்னை எப்போதும் நட்புடன் பார்க்கும் திரு லட்சுமி நாராயணாச்சாரின் ஊக்கத்தை என்னால் மறக்கவே முடியாது. சுமார் 12,000 பக்கங்கள், 12 பாகங்களை உடைய ‘பரிபூர்ணசந்திரிகா’ என்று நான் எழுதிய ஒரு பெரிய புத்தகத் தொகுப்பினை, என் மேல் உள்ள பாசத்தினால் அச்சிட்டு வெளிவர உதவியுள்ளார். இவற்றை உலகத்திற்குப் பரப்பும் மிக முக்கியமான சேவையை செய்திருக்கிறார். இவருக்கு நான் என்றென்றும் கடன்பட்டுள்ளேன். இவருக்கு என் ஆயிரமாயிரம் வணக்கங்கள்.

இந்தப் புத்தகத்தை முழுவதுமாக படித்துப் பார்த்து பிழைகளை நீக்க உதவிய நண்பர்கள், அறிஞர்கள் மற்றும் பலருக்கு என் நன்றிகள்.

ராமகிருஷ்ணப்பா த்வைத வேதாந்த பாடசாலை மற்றும் நரசப்பா சீதாராமய்ய பாடிகார்ட் டிரஸ்ட் என்ற இந்த இரண்டு நிறுவனங்களின் மூலமாக பீமண்ண பாடிகார்ட் அவர்கள் இந்தப் புத்தகத்தை வெளிக்கொண்டு வந்திருக்கிறார். சிறந்த ஹரிபக்தர், அனைவருக்கும் உதவும் மனப்பாங்கினைக் கொண்டவரான பீமண்ண அவர்கள், களங்கமற்ற உள்ளமுடையவர். விதியின் விளையாட்டில், இவரது மனைவியான விஜயா அவர்கள், ப்ரயாக க்ஷேத்திரத்தில் 7-8 மாதங்களுக்கு முன் இறைவனடி சேர்ந்தார். எப்போதும் ஸ்ரீஹரியின் சிந்தனையிலேயே நேரம் கழித்த திருமதி. விஜயா அவர்களுக்கு இந்தப் புத்தகத்தைப் படிப்பதன் மூலம் கிடைக்கும் ஞானத்தின் பலன் கிடைக்கட்டும் மற்றும் சத்கதி கிடைப்பதற்கு உள்ள அனைத்து தடைகளும் நீங்கட்டும் என்று வேண்டிக்கொள்கிறேன். அவரின் சாதனையால், அவருக்கு மோட்சமும் கிடைக்கட்டும் என்று ஸ்ரீஹரிவாயுகுருகளிடம் பக்திபூர்வகமாக வேண்டிக்கொள்கிறேன். பீமண்ணருக்கும் ஸ்ரீஹரி ஆயுள், ஆரோக்கியத்தைக் கொடுத்து, இன்னும் பற்பல நற்காரியங்களில் அவர் ஈடுபடுமாறு ஸ்ரீஹரி அருளட்டும் என்று வேண்டுகிறேன். இவர்களின் வாரிசுகளும் பல நற்காரியங்களைச் செய்யுமாறு ஸ்ரீஹரி அருளட்டும் என்று வேண்டுகிறேன்.

அச்சுக்கோர்ப்பதற்கு உதவிய நாகலதா, K.கிரி அவர்களுக்கு பற்பல நன்றிகள். உதவிய அனைத்து நண்பர்களுக்கும் என் மனமார்ந்த வணக்கங்கள்.

வித்வான் பெம்மத்தி வெங்கடேஷாச்சார்

***

# மொழிபெயர்ப்பாளரின் குறிப்பு

சென்ற புத்தகமான ஸ்ரீஹரியின் 40 அவதாரங்களைப் போலவே இந்தப் புத்தகமும் கேள்வி பதில் வடிவிலேயே எழுதப்பட்டுள்ளது. தாரதம்யத்தில் ஸ்ரீமன் நாராயணனுக்கு அடுத்தபடியாக வரும் பர-சுக்ல-த்ரயர்களைப் பற்றி பல அரிய தகவல்கள் இதில் உள்ளன. எனினும், ஆசிரியர் சொல்வதைப் போல இது ஒரு அறிமுக முயற்சி மட்டுமே. மேலதிக விவரங்களை இன்னும் பல புத்தகங்களைப் படித்தோ, அறிஞர்களிடம் கேட்டறிந்தோ தெரிந்து கொள்ளவேண்டும்.

இந்தப் புத்தகத்தை தமிழில் மொழிபெயர்க்க எனக்கு வாய்ப்பளித்த திரு. பெம்மத்தி வெங்கடேஷாச்சாருக்கு மனமார்ந்த நன்றிகள்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

# மகாலட்சுமி

**கேள்வி: லட்சுமியை வணங்கினால் வேண்டியதெல்லாம் கிடைக்கும். காசு-பணம், வீடு-நிலம், ஆஸ்தி-பாஸ்தி, மனைவி-மக்கள், வேலை-வாழ்க்கை இவற்றில் எது வேண்டுமென்றாலும் லட்சுமியையே வணங்கவேண்டும். ஆகையால், நாம் அனைவரும் லட்சுமியின் பக்தர்களாகி வாழ்க்கையை மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகிறோம். ஆனால், லட்சுமியை வணங்குவதே தவறு என்று கற்றறிந்த அறிஞர்கள் கூறுகின்றனர். இது சரியா?**

பதில்: லட்சுமியை மட்டும் தனியாக பூஜிப்பது கண்டிப்பாக தவறு. அதனால் நமக்கு பலன்கள் கிடைத்தாலும், அவை துக்கத்திற்கு வழிவகுக்கும். விஷ்ணுவுடன் மட்டுமே லட்சுமியை வணங்க வேண்டும். அப்போது அவர் மகிழ்ச்சியடைந்து மேலும் அதிகமான சுகங்களைக் கொடுக்கிறார். அதுமட்டுமல்லாமல், வெறும் ஐஹிக (சம்சார / தற்காலிக) சுகங்களை வேண்டி, லட்சுமியை வணங்கினீர்கள் என்றால், துக்கத்தின் குழியில் விழுவது கண்டிப்பாக நடக்கும் என்று ஸ்ரீகிருஷ்ணனே சொல்கிறார். 'க்லேஷோS திகதர ஸ்தேஷாம் அவ்யக்தா ஸக்த சேதஸாம்'.

**கே: அப்படியென்றால் நம் தேவைகளுக்காக லட்சுமியை வணங்குவதே தவறா?**

ப: 'விஷ்ணுனா ஸஹிதா த்யாதா ஸாபி துஷ்டிம் புராம் ப்ரஜேத்' என்ற வாக்கியத்தின்படி, வெறும் லட்சுமியின் பூஜைவிட, தன் கணவரான விஷ்ணுவையும் சேர்த்து பூஜித்தால், லட்சுமி எப்போதுமில்லாத மகிழ்ச்சியை அடைவார்.

**கே: தர்மங்கள், சம்பிரதாயங்களை தவறாது பின்பற்றுவதால், எனக்கு திருமணமே அமைவதில்லை. தர்மத்தைக் கடைபிடிக்கக்கூடிய ஒரு பெண், திருமணத்திற்கு கிடைப்பது மிகவும் கடினமாக உள்ளது. லட்சுமியை பூஜிப்பதினால் எனக்கு இந்த பிரச்னை தீருமா?**

ப: ஹரிபக்தரான உங்களைப் போன்றவர்களின் பிரச்னைகளை தீர்த்துவைப்பதற்கென்றே, லட்சுமியானவர் - சீதா, ருக்மிணி, பத்மாவதி போன்ற அவதாரங்களை எடுத்து, தன் கணவரை திருமணம் செய்திருக்கிறார். மிகுந்த பக்தியுடன் நீங்கள் ஒரு வேலை செய்யுங்கள். தினமும் காலை விடியும் வேளையில், பாகவதம் பத்தாம் ஸ்கந்தத்தில் இருக்கும் ருக்மிணி கல்யாணத்தை பாராயணம் செய்யுங்கள். மாலையில் சந்தியா நேரத்தில் பாகவதம் எட்டாம் ஸ்கந்தத்தில் இருக்கும் லட்சுமி கல்யாணத்தை பாராயணம் செய்யுங்கள். மதிய

நேரத்தில், தாத்பர்ய நிர்ணயத்தில் இருக்கும் சீதா கல்யாணத்தை பாராயணம் செய்வது, இன்னும் அதிக நலம் பயக்கும். மிகுந்த பக்தியுடன், ஒருமனதுடன் இந்த வேலைகளைச் செய்துபாருங்கள். பகலானது, இரவாவது எவ்வளவு நிச்சயமோ, உங்களுக்கு நற்பலன் கிடைப்பதும் அவ்வளவே நிச்சயமானதுதான். லட்சுமியின் மகிமையை அறிந்து நீங்களே மகிழ்ச்சியடைவீர்கள்.

**கே: தினந்தோறும் லட்சுமி சோபானையை பாராயணம் செய்தே வருகிறோம். ஆனாலும் நாம் நினைத்ததைப்போல் வரன் அமையவில்லை. இதன் பரிகாரமாக நாமும் பாகவத பாராயணத்தை செய்யலாமா?**

ப: பெண்கள் பாகவத பாராயணத்தை செய்யலாகாது. அதற்குப் பதிலாக - காலை மற்றும் மாலை வேளைகளில், வீட்டில் ஸ்ரீஹரியின் முன் நெய் தீபம் ஏற்றி, உங்களின் வேண்டுதல்களை அவரிடம் ஒப்பித்து, மிகுந்த பக்தியுடன் லட்சுமி சோபான பாடலைப் பாடுங்கள். உங்கள் வேண்டுதல்கள் நிறைவேறுவது நூற்றுக்கு நூறு சதவிகிதம் உறுதி.

**கே: லட்சுமிதேவியை வணங்குவதற்காக என்ன ஸ்லோகங்களை, பாடல்களை சிறார்களுக்கு கற்றுத்தரவேண்டும்?**

ப: லட்சுமி சோபான, துர்கா சுளாதி, ஸ்ரீஷகுணதர்பண, ஹரிதாசர்கள் இயற்றியிருக்கும் ஸ்ரீனிவாஸ கல்யாண, தத்வசுவ்வாலியில் துர்கா ஸ்துதி மற்றும் ருக்மிணி விலாஸ, வெங்கடேச பாரிஜாத, லட்சுமி லீலாம்ருத - இவை அல்லாது, லட்சுமியைக் குறித்த ஹரிதாசர்கள் இயற்றியிருக்கும் பற்பல பாடல்களைச் சொல்லித் தரலாம். இவற்றை சிறார்களுக்கு கற்றுத்தந்தே ஆகவேண்டும். நீங்களும்கூட தினந்தோறும் சொல்லலாம்.

**கே: சிலர் துர்கா சப்தசதியை பாராயணம் செய்யலாம் என்கிறார்கள். சிலர் செய்யக்கூடாது என்கிறார்கள். 700 ஸ்லோகங்களில் லட்சுமியின் கதை இருக்கிறது. இதை பாராயணம் செய்யலாமா கூடாதா?**

ப: தவறு இல்லை. ஆனால், ஸ்ரீஹரியை விட்டுவிட்டு, லட்சுமியை மட்டும் முதலிலிருந்து இறுதிவரை வர்ணிக்கும்போது, ஸ்ரீஹரியை மறந்ததாக ஆகிவிடுகிறது. அதனாலேயே, சில ஹரிபக்தர்கள் சப்தசதி பாராயணம் செய்வதை விட்டிருக்கிறார்கள். ஆனால், ஸ்ரீஹரியின் மகிமைகளை மறக்காதவர்கள், சப்தசதியை பாராயணம் செய்வதால், அவர்கள் வேண்டுவது அனைத்தும் கண்டிப்பாக நடக்கும் என்பதில் சந்தேகமில்லை.

**கே: சண்டிகா ஹோமம், துர்காநமஸ்கார ஆகிய லட்சுமி பூஜையின்போது நாம் என்னவென்று நினைத்து வணங்கவேண்டும்?**

ப: லட்சுமிதேவியின் மூலம் ஸ்ரீஹரியையே வணங்கவேண்டும். அனைவரின் தாய் தந்தையான லட்சுமி நாராயணரின் பூஜை என்று நினைக்கவேண்டும். ஸ்ரீஹரியை

மறந்து லட்சுமியையே நினைத்து செய்யும் சண்டிகா ஹோமம், துர்காநமஸ்கார ஆகியவை அசுப பலன்களையே கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

**கே: லட்சுமி தத்வத்தைப் பற்றி சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: இரண்டாம் கக்ஷையில் (தாரதம்ய வகுப்பில்) வரும் ரமாதேவி நித்யமுக்தர் (எப்போதும் முக்தி நிலையில் இருப்பவர்) ஆவார். எல்லா இடங்களிலும், எல்லா காலங்களிலும் ஸ்ரீஹரியுடனேயே வாசம் செய்பவர். ருஜுகளைவிட கோடி குணங்கள் அதிகம் கொண்டவள். இவரைவிட விஷ்ணு எண்ணிக்கையற்ற குணங்கள் அதிகம் கொண்டவர். ஜயந்தி, ஜானகி, சத்யபாமா, ருக்மிணி ஆகிய பற்பல அவதாரங்களைக் கொண்டவர். மூல ரூபம் மற்றும் அவதார ரூபங்களில் எவ்வித பேதமும் இல்லாதவர். ஸ்ரீஹரியை மட்டும் போற்றக்கூடிய வேதங்களைத் தவிர, மற்ற அனைத்து வேதங்களாலும் போற்றப்படுபவர்.

அழிவில்லாத, ஞானானந்தமயமான சரீரத்தைக் கொண்டவர். எப்போதும் விஷ்ணுவைப் பூஜித்துக்கொண்டு, அவருடனேயே இருப்பவர். விஷ்ணு இல்லாமல் லட்சுமியை துதித்தால், அது லட்சுமிதேவிக்குப் பிடிப்பதில்லை.

**கே: துளசி சாட்சாத் லட்சுமி ரூபமில்லை. ஷண்மஹிஷியரில் ஒருவரான ஜாம்பவதியே துளசி. ஆனால் நீங்கள் துளசியையே லட்சுமிரூபம் என்கிறீர்கள். இது எப்படி சரியாகும்?**

ப: லட்சுமியுடையதே ஆன துளசி ரூபம் ஒன்று இருக்கிறது. இதைத் தவிர, லட்சுமியே, சம்பிகை, மல்லிகை, தாமரை முதலான ரூபங்களை எடுத்து, ஸ்ரீஹரியை பூஜிக்கிறார். இதையும் தவிர, ஜாம்பவதியின் துளசி ரூபமே வேறு இருக்கிறது. அதிலும்கூட லட்சுமியின் விசேஷ சன்னிதானம் இருப்பதால், ஸ்ரீஹரியுடன் துளசியையும் பூஜை செய்யும் வழக்கம் இருக்கிறது.

**கே: ஸ்ரீதேவி, பூதேவி, துர்காதேவி - இந்த ரூபங்களைப் பற்றி சுருக்கமாகச் சொல்லவும்.**

ப:

ஸ்ரீதேவி: நாராயணனின் வலது பக்கத்தில் இருப்பவர். விஷ்வனின் மனைவி. ஜாக்ர-அவஸ்தையின் (முழித்திருத்தல்) அபிமானி. பிரளய காலத்தில் ஜல ரூபத்தில் எல்லா இடங்களிலும் வியாபித்திருப்பவர். தன் அருளினாலேயே, பிரம்ம ருத்ராதிகளை பிறக்கச் செய்தவர். 'ஸ்ரீயத்கடாக்ஷ்ய பலவத்யஜிதம் நமாமி'. படைத்தலுக்குத் தேவையான இச்சா சக்தி ஸ்வரூபம் கொண்டவர். ஸ்ரீஹரியின் இதயத்தில் எப்போதும் நிலைத்திருப்பவர். சாட்சாத் ருக்மிணியாக அவதரித்தவர். ஸ்ரீஹரி ஏந்தியிருக்கும் சங்கு என்றால் அது இவர்தான்.

பூதேவி: நாராயணனின் இடது பக்கத்தில் இருப்பவர். தைஜஸனின் மனைவி. ஸ்வப்ன-அவஸ்தையின் (கனவு நிலை) அபிமானி. பிரளய காலத்தில் ஆல இலையின் ரூபத்தில் இருப்பவர். படைத்தலுக்குப் பிறகான காத்தல் வேலையை செய்பவர். தன் அருளினால் அனைவரையும் காப்பவர். படைத்தலுக்குத் தேவையான க்ரியா-சக்தி ரூபமானவர். சீதா, சத்யபாமா ஆகிய அவதாரங்களை எடுத்திருப்பவர். ஸ்ரீஹரி ஏந்திருக்கும் தாமரை மலர் இவரே.

துர்காதேவி: நாராயணனின் எதிரில் இருப்பவர். ப்ராக்ஞனின் மனைவி. ஸுஷுப்தி-அவஸ்தையின் (தூக்க நிலை) அபிமானி. பிரளய காலத்தில் இருட்டாக அவதரிப்பவர். படைத்தல்-காத்தலுக்குப் பிறகு, அனைவரையும் அழித்தல் வேலையைச் செய்பவர். படைத்தலுக்குத் தேவையான ஞான-சக்தி ஸ்வரூபமானவர். கிருஷ்ணாவதாரத்தின் காலத்தில் துர்கையாக அவதரிப்பவர். ஸ்ரீஹரி ஏந்தியிருக்கும் சக்கரம் இவரே.

**கே: ஸ்ரீஹரியின் மார்பில் ஸ்ரீதேவி இருக்கிறார் என்றீர்கள். ஆனால், தனது தத்வப்ரதீப கிரந்தத்தில் த்ரிவிக்ரம பண்டிதர், லட்சுமி, ஹரியின் மார்பில் இல்லை, தொடையில் அமர்ந்திருக்கிறார் என்கிறாரே?**

ப: ஸ்ரீஜயதீர்த்தர் தனது பூஜையில், ஸ்ரீஹரியின் இதயத்தில் ஸ்ரீதேவியையும், தொடையில் லட்சுமியையும் கண்டார். த்ரிவிக்ரம பண்டிதர், இதயத்தில் லட்சுமியையும், தொடையில் ஸ்ரீதேவியையும் கண்டார். இப்படி பூஜிப்பதில் வித்தியாசமே தவிர, வேறொன்றும் இல்லை. லட்சுமியின் பல்வேறு ரூபங்களில் எந்த வித்தியாசமும் இல்லை. அவை அனைத்திலும் மிகவும் அற்புதமான சக்தியும் உள்ளது. லட்சுமி ரூபத்தை ஸ்ரீஹரியின் இதயத்தில் நினைக்கும்போது, ஸ்ரீதேவியின் ரூபத்தை தொடையில் நினைக்கவும். ஸ்ரீதேவியின் ரூபத்தை இதயத்தில் நினைக்கும்போது, லட்சுமியின் ரூபத்தை தொடையில் நினைக்கவும்.

**கே: ஸ்ரீபூதுர்காவின் ரூபங்களை விளக்கியதைப் போல, லட்சுமி ரூபத்தின் மகிமைகளைப் பற்றியும் சற்று விளக்குங்கள்**.

ப: பாற்கடல் கடையும்போது அமிர்தம் வருவதற்குமுன், அங்கிருந்து உதித்தவர் லட்சுமி. நாராயணன் ஒருவரையே நினைத்து, அவரைத் தவிர மற்ற அனைத்தும் தோஷம் நிரம்பியவை என்பதை நிரூபித்து, நாராயணனின் கழுத்தில் மாலை அணிவித்தார். இவரின் எட்டு ரூபங்களை விசேஷமாக பூஜிக்கிறார்கள்.

1. ஆதிலட்சுமி
2. வித்யாலட்சுமி
3. சௌபாக்யலட்சுமி
4. அம்ருதலட்சுமி
5. காமலட்சுமி
6. சத்யலட்சுமி
7. போகலட்சுமி

8. யோகலட்சுமி

இந்த எட்டு ரூபங்களினால் நாராயணனை வணங்குகிறார்.

**கே: என்னுடைய வியாபாரம் செழித்து வளர ஏதேனும் மந்திரத்தை சொல்லிக் கொடுங்கள்.**

ப: கீழுள்ள மந்திரத்தை 108 முறை ஜெபிக்கவும். நினைத்த காரியங்கள் நிறைவேறுவதில் சந்தேகமில்லை.

லட்சுமீம் லட்சண சம்பன்னாம் லட்சணாக்ரஜ காங்க்ஷிணீம் |
லட்சயாமி க்ஷணம் லட்சவித்ததாத்ரீம் கடாட்க்ஷைத: ||

**கே: ஸ்ரீஹரியின் தொடையில் அமர்ந்திருக்கும் மற்றும் அவருக்கு மிகவும் நெருங்கிய லட்சுமியின் ரூபம் எது?**

ப: யக்ஞ என்னும் ரூபத்தில் லட்சுமிதேவி, ஸ்ரீஹரியின் தொடையில் அமர்ந்திருக்கிறார். வேதா என்னும் ரூபத்தில், சற்று தூரத்தில் நின்று ஸ்தோத்திரம் செய்கிறார். தக்ஷிணா என்னும் ரூபத்தில் ஸ்ரீஹரியின் இடதுபக்கத்தில் மிகவும் அருகில் நின்று மிகுந்த சுகத்தை அனுபவிக்கிறார்.

**கே: ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு லட்சுமியின் ரூபமும் ஸ்ரீஹரியின் இடது பக்கத்தில் நின்றிருக்கின்றன என்று சொல்கிறார்கள். இப்படியிருக்கும்போது, தக்ஷிணா என்னும் ரூபத்திற்கு அதிக சுகம் கிடைப்பது எப்படி சாத்தியம்?**

ப: 'விசிஷ்டா தக்ஷிணா சுகே' என்று பாகவத தாத்பர்யத்தில் சொல்லியிருப்பதைப்போல, 'தக்ஷபாகே ஸ்திதா சதா' என்று ஐதரேய பாஷ்யத்தில் சொல்லியிருப்பதைப்போல, தக்ஷிணா என்னும் ரூபத்திற்கு மட்டும் அதிக சுகம் கிடைப்பது சாத்தியமே.

**கே: ஸ்ரீஹரியின் பல்வேறு ரூபங்களில் எந்த வித்தியாசமும் இல்லை. இதைப்போலவே லட்சுமியின் பல்வேறு ரூபங்களிலும் எந்த வித்தியாசமும் இல்லை என்று சொன்னீர்கள். ஆனால் இப்போது தக்ஷிணா என்னும் ரூபத்திற்கு மட்டும் அதிக விசேஷம் / சிறப்பு என்று எப்படி சொல்ல முடியும்?**

ப: ஸ்ரீஹரியின் அனைத்து ரூபங்களும் பரிபூர்ணமே ஆகியிருந்தாலும், ராம கிருஷ்ண முதலான ரூபங்களினால் பல(bala) காரியமும், தத்த வியாச முதலான ரூபங்களினால் ஞான காரியமும் செய்வதைப்போல, லட்சுமிதேவியின் தக்ஷிணா ரூபத்திற்கு அதிக சுகம் என்று சொல்வது ஸ்ரீஹரியின் லீலைகளில் ஒன்று. இருக்கும் வேறுபாடுகளுக்கெல்லாம் லட்சுமிதேவியே பிரதிநிதி என்றாலும்,

இவரது பற்பல ருபங்களில் எவ்வித பேதமும் இருப்பதில்லை என்பதை அறியவேண்டும்.

**கே: நாராயணனின் கால் நகத்தின் நுனியில் இருக்கும் துகளின் ஒரு பாகத்தில் உள்ள அவரது குணங்களை அநாதி காலங்களிலிருந்து (தொடக்கம் இல்லாத காலங்களிலிருந்து) எண்ணிக்கொண்டே இருக்கிறார். ஆனால், அதை இன்னும் எண்ணி முடிக்கவில்லை என்று மத்வவிஜயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் பொருள் என்ன?**

ப: ஸ்ரீஹரியின் ஒவ்வொரு அவயவங்களிலும், ஒவ்வொரு துகள்களிலும் பற்பல குணங்கள் நிரம்பியிருக்கின்றன. ஆகையால் அந்த ஒரு துகளை, லட்சுமிதேவி முழுமையாக அறிவதற்கு சாத்தியமில்லை. ஸ்ரீஹரியின் மகிமையே மிகவும் அற்புதமானது. இந்த பொருளிலேயே மத்வவிஜயகாரரும் சொல்லியிருக்கிறார்.

**கே: விஷ்ணுஸ்துதியில் த்ரிவிக்ரம பண்டிதர், 'நவ நவ சுவிசேஷோபலம்பேன' என்னும் ஸ்லோகத்தில், ஸ்ரீஹரியின் விஷயத்தில் லட்சுமி எப்போதும் புது விஷயங்களைக் கற்றுக்கொண்டே இருக்கிறார் என்கிறார். அப்படியென்றால், லட்சுமிதேவிக்கும் ருஜுயோகிகளுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை என்றாகிறது. ருஜுயோகிகளுக்கும் ஸ்ரீஹரியைப் பற்றி அறிவு வளர்ந்துகொண்டே இருக்கிறது அல்லவா?**

ப: 'பிரம்மாதீனாம் அப்ராப்தஞானம் உத்பத்யதே ஸ்ரீயஸ்து ஸர்வதா வித்யதே இதி விவேகே?' என்று ஈசாவாஸ்ய உபநிஷத் பாஷ்யத்தில் சொல்லியிருப்பதைப்போல், லட்சுமியின் ஞானம் அழிவில்லாதது என்கிறார்கள்.

**கே: அப்படியென்றால், லட்சுமிதேவியானவர், ஒவ்வொரு கணமும் ஸ்ரீஹரியின் குணங்களைக் கண்டு, வியப்படைகிறார் என்பதற்கு என்ன பொருள்?**

ப: லட்சுமிதேவி நித்யமுக்தர் ஆவார். சம்சார வாழ்க்கை அவருக்கு இல்லை. ஒவ்வொரு கணமும், ஸ்ரீஹரியின் குணங்களை அறிந்து மகிழ்ச்சி அடைபவர். புதுப்புது குணங்களை அறிந்து, மகிழ்ச்சியடைந்து, அதன்மூலமாக அவர் புதிய நிலை எதையும் அடையப்போவதில்லை என்றாலும், வியப்படைவதை நிறுத்துவதில்லை என்று அறியவேண்டும்.

**கே: 'தத: சஹஸ்ரகுணிதா ஸ்ரீ:' என்று கீதா தாத்பர்யத்தில் சொல்லியிருப்பதைப்போல, பிரம்ம வாயுகளைவிட, லட்சுமிதேவி ஆயிரம் குணங்கள் அதிகம் கொண்டவள் என்று தெரியவருகிறது. ஆனால், தாரதம்ய-பத்யத்தில், 'கோடி குணகளிந்ததிக ஷக்தளு ஸ்ரீரமா' என்று புரந்தரதாசர் கூறுகிறார். இவற்றில் எது சரி?**

ப: கோடிகுணாதிக - என்பதே சரி. கீதா தாத்பர்யத்தில் சொல்லப்பட்டிருக்கும் 'சஹஸ்ர' என்னும் சொல்லிற்கு 'கோடி' என்று பொருள் கொள்ளவேண்டும்.

**கே: மோட்சமானது சிதாத்மகமானது என்று சில இடங்களிலும், லட்சும்யாத்மக என்று சில இடங்களிலும், அழிவில்லாத சத்யாத்யமக-ஜடம் என்றும், ஞானாத்மகம் என்றும் சில இடங்களில் சொல்லியிருக்கின்றனர். இவற்றில் எது சரி, எது தப்பு?**

ப: இவற்றை கூர்ந்து கவனிக்கவேண்டும். ஸ்ரீஹரி வசிக்கும் கோயில், அவர் அணியும் ஆடை- அணிகலன்கள் மற்றும் உணவுகள் அனைத்தையும் லட்சும்யாத்மக என்று சொல்லலாம். ஆனால், மற்ற அனைத்தையும் லட்சும்யாத்மக என்றால், முக்தஜீவர்கள் அனுபவிக்கும் விஷயங்கள்கூட லட்சும்யாத்மகமே என்று சொல்வது போலாயிற்று. இது ஒரு வகையில், லட்சுமிதேவிக்கு அபசாரம் செய்தது போலவே ஆகிறது.

**கே: அனைத்து கிரந்தங்களிலும் லட்சும்யாத்மக என்றே சொல்லியிருக்கிறார்கள். யுக்திமல்லிகையில் ஸ்ரீவாதிராஜர், சிதாத்மக என்று சொல்கிறார். இவர் சொன்னதை தவறு என்று சொல்லலாமா?**

ப: மோட்சமானது லட்சும்யாத்மக அல்லது சிதாத்மக என்று சொன்னால், அது லட்சுமியிடமிருந்து மட்டும் சம்மதம் பெற்றது என்று பொருள். பிற தேவதைகளும்கூட பல விஷயங்களுக்கு அபிமானி தேவதைகளாக இருக்கின்றனர். மோட்சத்தில் இதர தேவதைகள் யாருமே அபிமானிகளாகாமல், லட்சுமிதேவி மட்டும் அபிமானினி ஆகியிருக்கிறாள். இந்த நுட்பமான விஷயத்தை நாம் கண்டிப்பாக அறிந்திருக்கவேண்டும்.

**கே: சத்தத்வ-ரத்னமாலா கிரந்தத்தில் மோட்சத்தை லட்சும்யாத்மக என்று சொல்லியிருக்கின்றனர். ஆனால் நீங்கள் அதற்கு எதிர்ப்பதமாக ஜடம் என்கிறீர்கள். இது எப்படி?**

ப: சத்தத்வ-ரத்னமாலாவை இயற்றியவர், மோட்சத்தை லட்சும்யாத்மக என்று உறுதியுடன் சொல்லவில்லை. பல-ப்ரகரணத்தில் 534-535 ஸ்லோகத்திற்கு உரை எழுதுகையில், மோட்சம் லட்சும்யாத்மக என்னும் விஷயத்தை விளக்கியிருக்கிறார். லட்சுமியின் ஸ்வரூபமான ஜல-பானாதிகளை முக்தஜீவர்கள் பயன்படுத்தினால், லட்சுமியை பயன்படுத்தியதாக ஆயிற்றல்லவா? என்று கேள்வி கேட்டுக்கொண்டு, தாயின் மடியில் இருக்கும் குழந்தை அவளிடம் பால் குடிப்பதைப்போல, லட்சுமிதேவி அனைவருக்கும் பாதுகாவலராக இருப்பதால், அவரது ஸ்வரூபமான ஜல-பானாதிகளை முக்தஜீவர்கள் பயன்படுத்திக் கொள்கின்றனர் என்று பதில் அளிக்கிறார். பிறகு அங்கிருக்கும் பொருட்கள் அனைத்தும் சுத்த-சத்யாத்மக என்றே தெளிவாக கூறுகிறார். அதனால், தாய் என்னும் உதாரணத்தை வைத்துக்கொண்டு, மோட்சமானது லட்சும்யாத்மக என்று சொல்லும் மற்றொரு சாராரும் உள்ளனர். ஆனால் அதைவிட, சுத்த-சத்யாத்மக என்று சொல்வதே அனைத்து விதங்களிலும் சரியானதாக இருக்கும்.

**கே: மோட்சத்தை ஜடம் என்பவர்களைப் பற்றி? அது ஜடம் என்றால், இந்த உலகத்திற்கும், மோட்சத்திற்கும் என்ன வித்தியாசம்?**

ப: மோட்சமும் மோட்சத்தில் இருக்கும் பொருட்கள் அனைத்தும் லட்சுமி ஸ்வரூபமாவதற்கு சாத்தியமே இல்லை. அதுவே மற்ற தேவதைகளின் ஸ்வரூபம் என்றுவிட்டால், மோட்சமே அநித்ய (தற்காலிகமானது) என்று ஆகிவிடும். ஆகவே, அதை ஜடம் என்றே சொல்லவேண்டும்.

**கே: மோட்சத்தை ஜடம் என்றால், அது வாழ்க்கையைப் போல அழியக்கூடியதா?**

ப: ஜடம் என்று சொன்னபடியால், அதுவே இறுதி முடிவு என்று சொல்வதற்கில்லை. வர்ணங்கள், வேத, அவ்யாக்ருத ஆகாசம் இவைகள் அனைத்தும் ஜடமே ஆகிருந்தாலும் அவை அழியக்கூடியது இல்லை என்பது நிரூபணமாகிருக்கிறது. அதைப்போலவே மோட்சமும்கூட அழியாத ஜடம் என்று சொல்வதற்கு எந்த பிரச்னையும் இல்லை.

**கே: மோட்ச மற்றும் போகப் பொருட்கள், ஆடை அணிகலன்கள், இவை அனைத்தும் அழியாத ஞானஸ்வரூபம் என்று சொல்லலாம் அல்லவா? மற்றும் இவை அனைத்தும் ஜடம் என்றுவிட்டால், ஸ்ரீஹரி இருக்கும் இடம், அவர் அணிந்திருக்கும் ஆபரணங்கள், பயன்படுத்தும் பொருட்கள் அனைத்தும்கூட அழியாத ஜடரூபமாகவே இருக்கிறது அல்லவா?**

ப: மோட்சம் மற்றும் அங்கிருக்கும் பொருட்களை ஞானானந்தாத்மக என்று சொல்வதற்கு தகுந்த ஆதாரம் இல்லை. சேதனர்கள் ஞானஸ்வரூபம் ஆகமுடியுமே தவிர, கற்பதின் மூலம் ஞானஸ்வரூபம் ஆவதற்கு சாத்தியம் இல்லை. ஸ்ரீஹரியின் ஸ்தானம் மற்றும் அவரின் ஆபரணங்கள், லட்சும்யாத்மக என்று சொல்வதற்கு ஆதாரங்கள் உள்ளன. லட்சுமிதேவியே தன் வெவ்வேறு ரூபங்கள் மூலமாக வீடு, ஆசனம், பாதுகை, ஆடை, ஆபரணம், உணவு, இந்த அனைத்து ரூபங்களையும் எடுத்து ஸ்ரீஹரியின் சேவையை செய்துவருகிறார்.

**கே: ஸ்ரீஹரி தானே தன்னுடைய ஆடை, அணிகலன்களாக இருக்கிறார், தானே தன்னுடைய நகைகளாக இருக்கிறார் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. ஆனால் நீங்கள் அவை லட்சும்யாத்மக என்று சொல்கிறீர்களே?**

ப: ஆம். ஸ்ரீஹரிக்கு தன்னுடைய ஸ்வரூபத்தினால் ஆன ஆடை மற்றும் ஆபரணங்கள் உள்ளன. ஆனால், லட்சுமிக்கு மகிழ்ச்சி தரவேண்டும் என்பதற்காக அவரையும் தன்னுடைய ஆபரணங்களாக தரித்துள்ளார்.

**கே: ஸ்ரீஹரிக்கு இப்படி சொல்லமுடியும் என்றால், அவரின் பிரதிபிம்பர்களான மற்ற ஜீவிகளுக்கும் தங்களின் ஸ்வரூபத்தினால் ஆன ஆபரணங்கள் உள்ளன என்று சொல்லமுடியும்தானே?**

ப: ஆம். கண்டிப்பாக சொல்லமுடியும். ஒவ்வொரு முக்தருக்கும், தங்களின் ஸ்வரூபத்தினால் ஆன, ஆபரணம், ஆடை மற்றும் தாங்கள் நினைத்த ரூபத்தை தரிக்கும் சாமர்த்தியம் இருப்பதால், தங்களின் மனைவியை ஆடை, ஆபரணம், வீடு இத்தகைய ரூபங்களில் தரிக்கும் வாய்ப்பு உண்டு. இந்த கோணத்தில், மோட்சம் சிதாத்மக என்று சொல்லலாம். ஆனாலும் இத்தகைய சக்தி அனைவருக்கும் எப்போதும் இருப்பதில்லை. தாரதம்யத்தைப் பொறுத்தே அமைகிறது.

**கே: ஸ்ரீஹரி, லட்சுமியை தன் ஆபரணங்களாக தரித்திருக்கும்போது, லட்சுமியும் ஸ்ரீஹரியை ஏன் தன் ஆபரணங்களாக தரித்திருக்கக்கூடாது?**

ப: ஆம். லட்சுமியின் மாங்கல்ய சரடில் கேசவன், தாலியில் நாராயணன், பதக்கங்களில் மாதவன், சம்பிகைப்பூவில் கோவிந்தன், ரத்ன குண்டலங்களில் விஷ்ணு, மாணிக்க நகைகளில் மதுசூதனன், வளையல்களில் த்ரிவிக்ரமன், நாமங்களில் வாமனன் - இப்படி லட்சுமிதேவியின் ஆபரணங்களில் ஸ்ரீஹரியின் ரூபங்கள் இருப்பதாக தாசராயர் வர்ணிக்கிறார்.

**கே: தேவபூஜையின் சந்தர்ப்பத்தில் லட்சுமிதேவையை எப்படி சிந்தனை செய்யவேண்டும்?**

ப: ஸ்ரீஹரிக்கு உபசார பூஜைகளைச் செய்வதற்கு அதிகாரம் இருப்பது, ஸ்ரீலட்சுமிக்கு மட்டுமே. பிரம்மன் முதலான தேவர்கள் அனைவரும் லட்சுமிதேவிக்கு உதவி செய்பவர்கள் மட்டுமே. தேவதைகள், ருஜுகள், கந்தர்வர்கள் ஆகியவரின் பற்பல சேவைகளின் நடுவில், லட்சுமிதேவி மிகவும் விமரிசையாக ஸ்ரீஹரியை பூஜிப்பவர். இதை அப்படியே நினைத்துக் கொள்வதே நம் கடமை ஆகும். இதைத்தவிர, நாம் செய்யும் அனைத்து பூஜைகளும் வெறும் பாவனை மட்டுமே.

**கே: நம் நற்காரியங்கள் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கும்போது, லட்சுமிக்கும் சேர்த்து சமர்ப்பிக்க வேண்டுமா, இல்லையா?**

ப: நாம் செய்யும் அனைத்து காரியங்களையும் வாயுதேவருக்கு சமர்ப்பிக்கவேண்டும். வாயுதேவர், லட்சுமிதேவியின் மூலமாக ஸ்ரீஹரிக்கு அவற்றை சமர்ப்பிக்கிறார் என்று சிந்தனை செய்யவேண்டும். லட்சுமிதேவியே ஸ்ரீஹரியின் நேரடி பிரதிபிம்பராக இருக்கிறார். ஆகையால், அவரை விட்டு எதையும் நேரடியாக ஸ்ரீஹரியாக சமர்ப்பிக்கக்கூடாது.

**கே: லட்சுமியின் சன்னிதானம் இருக்கும் இடங்கள் எவை?**

ப: அவ்யக்ததத்வ, ஸ்ரீஹரியின் பூஜை பாத்திரங்கள், நெய், வீட்டில் நிலைப்படி, சாணம், செல்வம், தாமரை, கமலாக்ஷிமணி, மஞ்சள், குங்குமம், அந்தி நேரங்கள்,

சுமங்கலி, தாம்பூலம் இத்தகைய பொருட்களில் லட்சுமிதேவியின் விசேஷ சன்னிதானங்கள் உள்ளன.

**கே: லட்சுமியின் ரூபங்கள் எவை?**

ப:
கேசவனுக்கு ஸ்ரீ, நாராயணனுக்கு லட்சுமி, மாதவனுக்கு கமல என்று 24 ரூபங்களுக்கும், மத்ஸ்யாதி தசாவதாரங்களுக்கு வேதா முதலிய ரூபங்கள், விஸ்வாதி ஆயிரம் ரூபங்களுக்கு ஸ்ரீ ஆகிய தனித்தனி ரூபங்கள் உள்ளன. வாசுதேவனுக்கு மாயா, சங்கர்ஷணனுக்கு ஜயா, ப்ரத்யும்னனுக்கு க்ருதி, அனிருத்தனுக்கு சாந்தி என்ற பல ரூபங்களை எடுத்து, இந்த உலகத்தின் ஸ்ருஷ்டிக்கு காரணமானவர்.

**கே: தினந்தோறும் இப்படி நினைப்பதால் லட்சுமிதேவிக்கு மகிழ்ச்சி கிடைக்குமா?**

ப:
நானா குஸுமகளிந்த மாடித மாலெய ஸ்ரீநாரி தன்ன கரதல்லி ।
பேன கந்தரன த்ரிவிக்ரமராயன கொரளின மேலிட்டு நமிஸிதளு ॥

லட்சுமிதேவி சுயம்வரத்திற்குத் தயாரானார். லட்சுமி என்றால் அனைத்து அழகு லட்சணங்களையும் கொண்டவர். நிரந்தரமாக அழகான உடலைப் பெற்றவர். அனைத்து ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவர். வெளிப்புற அழகுடன், மனதிலும் நற்குணங்கள் நிரம்பியவர். பற்பல பூக்களால் செய்யப்பட்ட மாலையை, நானே சர்வோத்தமன் என்று நிரூபித்த ஸ்ரீஹரியின் கழுத்தில் போட்டு, அவரை வணங்கினார். லட்சுமிநாராயணரின் இந்த அழகான காட்சியின் சிந்தனையை நாம் தினந்தோறும் நினைப்போமாக.

**கே: இதிலிருந்து தெரியும் முக்கியச் செய்தி என்ன?**

ப: கணவன் உயிரோடு இருந்தால் மனைவிக்கு - தாலி, மஞ்சள், குங்குமம், வளையல், தோடு, இவை அனைத்தும் இருக்கின்றன. இவை இருந்தால் மட்டும் மனைவியானவள் பாக்கியசாலி என்று சொல்லிவிட முடியாது. கணவனின் பிரியம் கண்டிப்பாக இருக்கவேண்டும். இதுவே உண்மையான மாங்கல்யம். இது மட்டும் இல்லையென்றால், மனைவி அணிந்திருக்கும் தோடு, மாங்கல்யம் இவை அனைத்தும் வெறும் பொருட்களே. மாங்கல்யத்திற்காக உலகத்தின் அரசியான ஸ்ரீமகாலட்சுமியின் கருணையைப் பெறவேண்டும். அதற்காக லட்சுமிநாராயணரின் பாதங்களை என்றைக்கும் சரணடைய வேண்டும்.

**கே: லட்சுமியின் கதையை சுருக்கமாகக் கூறவும்?**

ப: பாற்கடலைக் கடையும்போது லட்சுமிதேவி அதிலிருந்து தோன்றினார். சமுத்திரராஜனின் மகளான இவரை அனைத்து ருஜுகள், தேவதைகள், நதி அபிமானி தேவதைகள் அனைவரும் திரண்டு வந்து, தங்கக் கலசத்தின் மூலம் அபிஷேகம் செய்தனர். பசுக்கள் பஞ்சகவ்யத்தையும், வசந்தகாலம் தேனையும், பூதேவி தான்யங்களையும் அபிஷேகத்திற்காக கொடுத்தனர். கந்தர்வர், அப்சரஸ் முதலானவர்கள் நடனமாடினர். வேதாபிமானிகள் மங்கள வாத்தியங்களை இசைத்தனர். முனிவர்கள் வேத மந்திரங்களை ஓதினர். திக்கஜர்கள் சுத்தமான நீரினால் ஸ்நானம் செய்வித்தனர். சமுத்திரராஜன், இரு பட்டுச் சேலைகளுடன், வைஜயந்தி மாலையையும் கொடுத்தான். விஸ்வகர்மன் அனைத்து ஆபரணங்களைக் கொடுத்தான். சரஸ்வதி முத்து மாலையையும், பிரம்மன் தாமரையையும், நாகங்கள் கர்ண குண்டலங்களையும் கொடுத்தனர்.

புண்யாஹவாசனம் மிகவும் விமரிசையாக நடந்தது. சுயம்வர மாலையைப் பிடித்து, சபையில் அமர்ந்திருக்கும் அனைத்து தேவதைகள், முனிவர்கள், கந்தர்வர், மனுஷ்யோத்தமர்கள் இவர்கள் அனைவரில் யார் உத்தமர் என்று உலகத்திற்கு தெரிவிக்கவேண்டும் என்று நினைத்தார். இவர்கள் அனைவரிடமும் காமாதி தோஷங்கள் இருந்தன என்று அறிந்தார். ஸ்ரீமன் நாராயணன் மட்டுமே தோஷமற்றவர், குணபரிபூர்ணர் என்று தீர்மானித்தார். அனைவரிலும் உத்தமரான நாராயணனே, தனக்கு கணவன் என்றும், அவருக்கே தான் நியதபத்னி என்றும் அறிந்து, அவரின் கழுத்தில் மாலை அணிவித்தார். உலகத்திற்கே அதிபதியான ஸ்ரீஹரி, லட்சுமிதேவியை தன் இதயத்திலேயே அமர்த்திக் கொண்டார். ஸ்ரீஹரியின் இதயத்தில் அமர்ந்த ஸ்ரீதேவி, அனைத்து தேவதைகளுக்கும், ரிஷி, முனி, கந்தர்வ ஆகியவர்களை தன் கருணைப் பார்வையால் பார்த்தார். அனைவரும் அனைத்துவித செல்வங்களையும் அடைந்தனர். அப்போது தேவதைகள் ஸ்ரீசூக்தம் ஆகியவற்றைச் சொல்லி புஷ்பவ்ருஷ்டி செய்தனர். இத்தகைய லட்சுமியின் கருணைப்பார்வை நம் மேலும் விழுமாறு, நாம் அவரை வணங்கி தன்யாராவோமாக.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கும் லட்சுமிதேவியின் தியானரூபம் எது?**

ப:

கௌசேய பீத வஸநாம் அரவிந்த நேத்ராம்
பத்மத்வயாபய வரோத்யத பத்ம ஹஸ்தாம் ।
உத்யச்சராத்க ஸத்ருஷாம் பரமாங்க ஸம்ஸ்தாம்
த்யாயேத் விதீஷ நத பாத யுகாம் ஜனித்ரீம் ॥

மஞ்சள் வண்ணத்தில் 2 பட்டு ஆடைகள் உடுத்திருப்பவர். தாமரை இதழ்களைப் போன்ற 2 கண்கள் உடையவள். 2 தாமரைகள், அபய, வர சின்னங்களை 4

கைகளிலும் ஏந்தியிருப்பவர். ஸ்ரீஹரியின் தொடையில் அமர்ந்திருப்பவர். பிரம்ம, ருத்ராதி தேவர்களால் வணங்கப்படும் இரு பாதங்களை உடையவர். உலகத்திற்கே தாய் அவர். இவ்வாறான லட்சுமிதேவியை தியானிப்போமாக.

**கே: நாம் நினைத்து பூஜிப்பதற்கு, மிகவும் சிறந்த லட்சுமியின் ரூபம் எது?**

ப: நம் வலது கண்ணில் ஸ்ரீஹரி விஸ்வ நாமகனாக நிலைத்திருக்கிறார். இவரைச் சார்ந்து, ரஜ்ஜு ருபத்தில் லட்சுமியும் நிலைத்திருக்கிறார். இவரையே அம்ப்ரிணி என்று உபநிஷத்கள் சொல்கின்றன. வலது கண்ணில் அம்ப்ரிணியை நினைத்து பூஜிப்பதால் அறிவுத்திறன் வளரும். மற்றும் நம் இதய கமலத்தில் நிலைத்திருக்கும் ப்ரக்ஞ என்னும் ஸ்ரீஹரிக்கு, ரமாதேவி தன் ஓரக் கண்களாலேயே தீப ஒளியைக் காட்டுகிறார். இந்த அழகினைக் கண்டு தன்யராவோமாக.

***

# ருஜு ஜீவிகள்

**கேள்வி: ருஜு ஜீவிகள் என்றால் யார்?**

பதில்: பிரம்மபதவிக்கு யோக்யரான ஜீவர்கள், ருஜுகள் என்று அழைக்கப்படுகின்றனர். இவர்கள் அநாதி காலத்திலிருந்து (துவக்கம் இல்லாத காலத்திலிருந்து) தோஷங்கள் இல்லாதவர்கள். நற்குணங்கள் நிரம்பியவர்கள். ஸ்ரீஹரியை வணங்குவதில் மிகுந்த உற்சாகம் அடையாதவர்கள் என்னும் தோஷத்தைத் தவிர, வேறு எந்த தோஷங்களும் இல்லாதவர்கள். உலகத்தின் படைத்தல், காத்தல் ஆகியவற்றை தம்முடைய வாழ்க்கையில் செய்கிறார்கள். உலகத்தைப் பற்றிய மொத்த அறிவையும் பெற்றிருக்கிறார்கள். இவர்களின் அறிவானது, மோட்சத்திற்குப் போகும் வரைக்கும் தொடர்ச்சியாக வளர்ந்து கொண்டேயிருக்கிறது.

**கே: உலகத்தின் விஷயங்களைப் பற்றிய மொத்த அறிவையும் பிரம்மதேவர் பெற்றிருக்கிறார் என்றால், ஸ்ரீஹரிக்கும் இவருக்கும் என்ன வித்தியாசம்?**

ப: ஸ்ரீஹரி மற்றும் லட்சுமி இவர்கள் இருவர்களைத் தவிர மற்ற அனைத்து விஷயங்களிலும், ருஜுகள் மொத்த அறிவைப் பெற்றிருக்கிறார்கள். ஆனாலும்கூட, அவற்றைப்பற்றி சிந்தித்தால் மட்டுமே, அவற்றின் முழுத்தகவல்களைப் பற்றி தெரிந்துகொள்கிறார்கள். ஆனால், லட்சுமிதேவி அவற்றைப்பற்றி சிந்திக்கவில்லை என்றாலும் அனைத்தையும் அறிந்திருக்கிறார். இந்த வேறுபாட்டினை நாம் கண்டிப்பாக அறிந்திருக்கவேண்டும். அதைப்பற்றி சிந்திக்கவில்லை என்பதால் மட்டும், அது அஞ்ஞானம் என்று சொல்லமுடியாது.

**கே: அப்படியென்றால், சிந்தனை செய்யாத நேரங்களில், ருஜுகள் அஞ்ஞானிகள் என்று ஆகிறது. ஏதோ ஒரு கணத்தில் இவர்கள் அஞ்ஞானிகளே என்றாலும், இவர்களில் 'சதுர்தச லோக குருத்வ' (பதினான்கு லோகங்களுக்கும் குரு என்னும் பதவி) வருவதற்கு எப்படி சாத்தியம்?**

ப: சிந்தனை செய்யவில்லை என்றாலும், ஒரு பொருளைப் பற்றிய அறிவு இல்லையென்றால் மட்டுமே, குருத்வ'த்திற்கு பங்கம் வருகிறது. எப்போது வேண்டுமென்றாலும் அந்த அறிவை பயன்படுத்திக்கொள்ளும் சாமர்த்தியம் இருந்தால், குருத்வ'த்திற்கு எந்தப் பிரச்னையும் வருவதில்லை. எப்போது வேண்டுமானாலும் அவர்கள் அந்த அறிவைப் பெறும் திறன் உள்ளவர்கள் ஆகையால், அவர்களுக்கு அஞ்ஞான தோஷம் வருவதில்லை.

**கே: சம்சாரத்தில் இருக்கும் பிரம்மாதி தேவர்களுக்கும், மோட்சத்தில் இருக்கும் பிரம்மாதி தேவர்களுக்கும் என்ன வித்தியாசம்? சார்வக்ஞத்வ (அனைத்து அறிந்தவர்கள்) என்பது இந்த இருவருக்கும் பொருந்தும்தானே?**

ப: அனுவியாக்யான கிரந்தத்தில் ஸ்ரீமதாசார்யர் இதற்கு பதிலளிக்கிறார். 'ருஜுணாம் ஏக ஏவாஸ்தி பரமோத்ஸாஹ வர்ஜனம்'. இந்த வாக்கியத்தின்படி ருஜுகளுக்கு 'பரமோத்ஸாஹ வர்ஜனம்' என்ற ஒரே ஒரு தோஷம் உள்ளது. இந்த தோஷமானது மோட்சத்தில் இருக்கும் பிரம்மாதி தேவர்களுக்கு இல்லாத காரணத்தினால், சம்சாரத்தில் இருக்கும் பிரம்மாதி தேவர்களுக்கும், மோட்சத்தில் இருக்கும் பிரம்மாதி தேவர்களுக்கும் வித்தியாசம் உள்ளது.

**கே: 'பரமோத்ஸாஹ வர்ஜனம்' என்றால் சுகத்தை அனுபவிக்கும்போது, ருஜுகள் மகிழ்ச்சி அடையமாட்டார்கள் என்றுதானே பொருள்? இது எப்படி தோஷமாகும்?**

ப; ஸ்ரீஹரிக்கு செய்யப்படும் அனைத்து பூஜைகளிலும் அதிகப்படியான மகிழ்ச்சி இருப்பதில்லை என்பதே இதன் பொருள். மோட்சத்தில் இருக்கும் பிரம்மாதி தேவர்கள் ஸ்ரீஹரிக்கு செய்யப்படும் அனைத்துவித பூஜைகளிலும் மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றனர். இது ருஜுஜீவிகளுக்கு இருப்பதில்லை. பால் பொங்கி வரும்போது எப்படி அதிக அளவாகக் காணப்படுகிறதோ, அதைப்போல மோட்சஜீவிகளுக்கு இருக்கும் உற்சாகமும் அதிகரிக்கிறது. ஆனால், இந்த அதிகப்படியான உற்சாகமானது சம்சாரத்தில் இருக்கும்போது அவர்களுக்கு இருப்பதில்லை. இந்த ஒரே ஒரு வித்தியாசத்தைத் தவிர, வேறு எந்த வித்தியாசமும் ருஜுகளில் இருப்பதில்லை எனத் தெரிய வேண்டும்.

**கே: ருஜுகளுக்கு எப்போது அபரோக்ஷம் (முக்தி நிலை) கிடைக்கிறது?**

ப: தேவதைகளுக்கு அபரோக்ஷ ஞானம் கிடைத்தபிறகு, தேவதா பதவி கிடைக்கிறதென்பது தெரிந்த விஷயம். ஆனால் ருஜு ஜீவிகளுக்கு அப்படியல்ல. இவர்கள் நித்ய-அபரோக்ஷிகள் (என்றைக்கும் அபரோக்ஷிகள்). ஆகையால் இவர்களை என்றைக்குமான அபரோக்ஷி ஞானிகள் என்று அழைக்கின்றனர். ருஜு பதவிக்கு வந்தபிறகு விசேஷ-அபரோக்ஷ-ஞானிகள் என்று அழைக்கப்படுகின்றனர்.

**கே: ருஜுஜீவிகள் 200 கல்பங்களாக சாதனை செய்துவருகின்றனர். அதற்கு முன்னர் அவர்கள் அஞ்ஞானிகளாக இருந்தனரா?**

ப: தவறு. அனைத்து ருஜுஜீவிகளும் அனாதி-காலத்திலிருந்து அபரோக்ஷ ஞானிகளாகவே இருக்கின்றனர். சாதாரண அபரோக்ஷம் இருப்பதனால், ஞானிகள் பூர்ணவாதத்திற்கு கவனம் கொடுப்பதில்லை என்று சொல்லக்கூடாது. செல்வச் செழிப்பான துவாரகா நகரத்தை ஸ்ரீகிருஷ்ணன் மேலும் செழிப்பாக்கினான் என்பதுபோல, ருஜுகளின் ஞானமானது முதலிலேயே முழுமையாக இருந்தாலும் மறுபடி மேலும் வளர்ந்தது.

**கே: ருஜுஜீவிகளின் காலம் 200 பிரம்மகல்பத்தின் அளவு என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. வேறு சில இடங்களில் இது 100 கல்பங்கள் என்று சொல்கின்றனர். இதில் எது சரி?**

ப: ஒவ்வொரு ருஜுஜீவிகளுக்கும் 200 கல்ப சாதனை இருக்கிறது. முதல் 100 கல்பங்களில் ஹரி தியானத்தில் மட்டுமே ஈடுபட்டிருக்கின்றனர். இவர்கள் அனைவருக்கும் ருஜு என்றே பெயர் இருக்கிறது. பிறகு 101வது கல்பத்திலிருந்து பிரம்மபதவிக்கு தேவையான விசேஷ சாதனை துவங்குகிறது. 101வது கல்பத்திலிருந்து கல்கி, சுதேஜ ஆகிய பெயர்களை பெறுகின்றனர். 99வது கல்பத்தில் வாயு என்ற பெயரையும், 100வது கல்பத்தில் பிரம்மா என்ற பதவியையும் பெறுகின்றனர்.

**கே: பிரளயகாலத்தில் ருஜுஜீவிகளுக்கு சுஷுப்தி (தூக்க நிலை) இருக்கிறதென்று 'சுஷுப்தி ஸம்ஸ்தான் ப்ரம்மாதிகான் கலிபரான் மனுஜான் தத்யைக்ஷத்' என்று ஸ்ரீமதாசார்யரே சொல்லியிருக்கிறார். ஆகையால் இவர்களுக்கு அனைத்து நேரங்களிலும் ஸ்ரீஹரியின் சிந்தனை இருக்கிறது என்று எப்படி சொல்கிறீர்கள்?**

ப: 'சுஷுப்தி ஸம்ஸ்தான் பிரம்மாதிகான்' என்ற வாக்கியத்தில், பிரம்மாதிகான் என்றால், 'பிரம்மனிடமிருந்து தொடங்கி அனைவரும்' என்று அறியவேண்டும். பிரம்மனை இங்கு விட்டுவிடக்கூடாது. இப்படி 'எதிலிருந்து' என்று சொல்கிறோமோ, அதை விட்டுவிடாமல் 'அதிலிருந்து' என்று பொருள் கொள்வதற்கு 'அதத்குண சம்விஞ்ஞான' என்று பெயர்.

**கே: அப்படியென்றால், ஐதரேய பாஷ்யத்தில் 'சுப்தாஸ்தத்ர யதோ ஜீவா: ப்ரஹ்ம ருத்ர புரஸ்ஸரா:' என்று பிரம்மருத்ரர் முதலான அனைவரும் தூங்குவதாக தெளிவாக சொல்லியிருக்கிறாரே? இதை எப்படி பொருள் கொள்ளவேண்டும்?**

ப: ஸ்ருஷ்டிகாலத்தில் பிரம்மன் ஸ்ரீஹரியின் விஷயத்தில் மட்டுமல்லாமல், உலகத்தின் விஷயங்களிலும் அனைத்தையும் அறிந்தவராக இருக்கிறார். ஆனால், பிரளயகாலத்தில் வெறும் ஸ்ரீஹரியைப் பற்றிய சிந்தனைகளில் மட்டும் இருக்கிறார். ஆகையால், பிரம்மன் தூக்க நிலையில் இருக்கிறார் என்றால், தியானத்தில் இருக்கிறார் என்று மட்டுமே பொருள். ஆனால் மற்ற ஜீவர்கள் தூக்க நிலையில் இருக்கிறார்கள் என்றால், ஸ்ரீஹரியைக்கூட மறந்திருக்கின்றனர் என்று பொருள்.

**கே: அப்படியென்றால் பிரம்மதேவரின் சரீரம் சுத்த-சாத்வீகாத்மக தேகம் இல்லையா?**

ப: முக்தியில் இருக்கும் பிரம்மதேவரின் சரீரம் மட்டுமே சுத்த-சாத்வீகாத்மக தேகம் ஆகும். சம்சாரத்தில் இருக்கும் பிரம்மதேவரின் சரீரம் சுத்த-சாத்வீகாத்மக தேகம் இல்லை. ஆகையாலேயே, ஹரிகதாம்ருதசாரத்தில் அவருக்கு 'சத்வப்ரசுர' என்னும் பெயரை வழங்கியிருக்கிறார்கள். 'சத்வசஸ்த்வ மஹாசத்வ சூக்ஷ்மசத்வஷ்ச துர்முக:' என்னும் ஆதாரத்திலிருந்து இந்திராதி தேவதைகளின் சரீரம் சாத்விகமாக இருக்கிறது என்று தெரியவருகிறது. இவரைவிடவும், கருட, சேஷாதிகளின் சரீரம் இன்னும் சாத்விகம். பாரதி சரஸ்வதியரின் சரீரம் மகாசாத்விகமானது. பிரம்ம வாயுகளின் சரீரம் சூக்ஷ்ம-சாத்விகமானது என்று அறியவேண்டும். 99% சத்வகுணம் இருந்து, மீதி 1%ல் - 90% ரஜோகுணம் மற்றும் இதில் மீதி 10%ல் தமோகுணங்கள் உள்ளன. இவை இரண்டும் இருந்தாலும், அவை எந்த (அவற்றின்) வேலையையும் செய்வதில்லை.

**கே: வெறும் பிரம்மவாயுகளின் சரீரம் மட்டுமே இப்படியா அல்லது அனைத்து ருஜுகணஸ்தர்களின் சரீரமும் இப்படியே சொல்லவேண்டுமா? இந்த ருஜுகணர்களிடம் ஏதேனும் வித்தியாசம் உண்டா?**

ப: அனைத்து ருஜுகணர்களின் சரீரமும் இப்படிதான் இருக்கிறது. 100 பேர் உள்ள ருஜுகளில் எந்தவித தாரதம்யமும் இல்லை. ஆனால் பதவியைப் பொறுத்தவரை, வாயுதேவர் அனைவரையும்விட உத்தமராக உள்ளார். அவரைவிட பிரம்மதேவர் உத்தமராக உள்ளார். சாதனை மற்றும் பதவி ஆகியவற்றின்படி ருஜுகணத்தின்-அரசர் என்று இவர்களை பெயரிட்டு அழைக்கின்றனர். வேதங்களில் போற்றப்படும்போதும், அபிமானியாக இருப்பதில், குணங்கள் நிரம்பியவற்றில் அனைத்து ருஜுகணர்களும் சமமாகவே இருக்கின்றனர்.

**கே: பிரம்மதேவர் சர்வக்ஞர் (அனைத்தையும் அறிந்தவர்) ஆனபிறகு, ஸ்ரீஹரியைப் பற்றிய அனைத்து விஷயங்களையும் தெரிந்துகொள்கிறாரா?**

ப: பிரம்மதேவருக்கு ஸ்ரீஹரியைப் பற்றிய கருத்துகளில் அஞ்ஞானம் இல்லாதிருந்தாலும், சிற்சில விஷயங்களில் (அபாவரூப) அஞ்ஞானம் இருக்கின்றது. லட்சுமிதேவியைப் போலவே இவருக்கும் ஸ்ரீஹரியைப் பற்றிய விஷயங்கள் அனைத்தும் தெரிவதில்லை. ஆகவே, லட்சுமிதேவிக்கு அபாவரூபமான அஞ்ஞானம் எப்படி இருக்கிறதோ, அதைப்போலவே இவருக்கும் அபாவரூபமான அஞ்ஞானம் உள்ளது என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

**கே: பிரம்மதேவரின் லிங்கசரீரம் தக்தபடாயமாக இருக்கிறது என்கிறார்கள். இதற்கு என்ன பொருள்?**

ப: ஒரு துணியை நெருப்பில் சுட்டால் எப்படி இருக்கிறதோ, அதைப்போல இவரது லிங்கதேகமும் உள்ளது என்று பொருள். ஆனாலும்கூட எந்த செயலையும் செய்வதில்லை என்பது இதன் கருத்து. அதைப்போலவே இவரது லிங்கதேகமும்கூட இவர்மேல் எந்த மாற்றத்தையும் கொண்டு வருவதில்லை.

**கே: அபரோக்ஷ ஞானிகளின் சரீரம்கூட தக்தபடாயமாக இருக்கிறது என்கிறார்கள். அப்படியென்றால் பிரம்மதேவரின் சரீரத்திற்கு என்ன விசேஷம் உள்ளது?**

ப: அபரோக்ஷ ஞானிகளின் சரீரம் தக்தபடாயமானதாக மாறுவது, அவர்கள் அபரோக்ஷ ஞானம் பெற்றபிறகு. ருஜுகள் அனாதி (துவக்கம் இல்லாத) காலத்திலிருந்து அபரோக்ஷ ஞானிகள் ஆவர். கூடவே, 'தக்தபடாயமான' நிலையில் தாரதம்யம் உள்ளது. ஆகையால், இருவரின் லிங்கதேகத்தையும் சரிசமம் என்று பார்க்கக்கூடாது.

**கே: ருஜுகளில் ஒவ்வொருவருக்கும் எவ்வளவு தேகங்கள் உள்ளன? அனைவருக்கும் இது ஒரே மாதிரியாக இருக்கும்தானே?**

ப: ஜீவாச்சாதிக, பரமாச்சாதிக என்று இரு தேகங்கள் உள்ளன. ஜீவாச்சாதிக என்றால் பாவரூப அஞ்ஞானம் என்று பொருள். இது பிரம்மனின் உபதேசத்தால் நாசமடைகிறது. பரமாச்சாதிக, ஸ்ரீஹரியின் விருப்பத்தின் பேரில், அடுத்த கல்பத்தின் துவக்கத்தில் ஸ்ரீஹரியின் மூலமாகவே நாசமடைகிறது. ஆனால், பிரம்மதேவருக்கு பாவரூப-அஞ்ஞானமே இல்லாததால், ஜீவாச்சாதிக என்னும் தேகமே இருப்பதில்லை. பிரம்மனின் கீழ் கட்டுப்பட்டு இருக்கும் அஞ்ஞானமானது, அவரை எந்தவிதத்திலும் பாதிப்பதில்லை.

**கே: வாயுதேவரை குருவாக நினைப்பதே நம்மில் வழக்கமாக உள்ளது. பிரம்மனை குருவாக நினைப்பது வழக்கத்திலேயே இல்லை. பெரிய தத்வஞானிகள், தபஸ்விகள் கூட பிரம்மதேவரை விட்டுவிடுகிறார்கள். பிரம்மதேவரைக் குறித்து ஜெபம், பூஜை, பாராயணம், நமஸ்காரம், விசேஷ ஆராதனைகளை செய்வதும்கூட நம்மில் இல்லை. இது தப்பில்லையா?**

ப: பிரம்மதேவரை எப்போதும் நினைத்திருக்கவே வேண்டும். 'பரசித்தவ்ருத்தேர ப்ரத்யக்ஷர்வாத்' என்ற வாக்கியத்தின்படி சாதகர்கள் (சாதனை / நற்செயல்களை செய்பவர்கள்) நினைப்பது, மற்றவர்களுக்கு தெரிந்திருப்பதில்லை. அவர்கள் சிந்திப்பதே இல்லை என்பதும் ஆதாரமில்லாதது. பிராணதேவருக்கு சிலை வைத்து பூஜிப்பது உண்டு, அவதாரங்கள் உண்டு, சர்வமூலத்தை இயற்றியிருப்பதால் விசேஷமாக அவரை பூஜிக்கவேண்டியது நம் கடமை. இதற்கேற்பவே தத்வஞானிகள் பூஜிக்கிறார்கள். பிரம்மதேவருக்கு சிலை வைத்து பூஜிப்பது இல்லை. அவதாரங்கள் இல்லை. மனிதனால் உருவான, யாராலும் உருவாகாத வேதங்களை உலகிற்கு பிரம்மரூபத்தினால், சனகாதிகள், நாரதரின் மூலமாக உபதேசித்திருப்பதால், அந்த வேதங்களைப் படிப்பது, அவற்றைக் கேட்பது

இவையே பிரம்மதேவரின் பூஜையாக கருதப்படுகிறது. இதுவே பிரம்மனுக்கு விஷ்ணு உபதேசித்த தந்த்ரசார சங்க்ரஹம் என்று ஸ்ரீமதாசார்யர் சொல்கிறார். தந்த்ரசாரத்தில் சொல்லியிருப்பதை நாம் வழக்கத்திற்குக் கொண்டுவந்தால், அது பிரம்மதேவரின் தந்த்ரசார சங்க்ரஹத்தின் மந்திரங்களுக்கு பிரம்மதேவரே ரிஷி.

இதை நினைத்தபிறகே அந்த மந்திர ஜெபத்தை செய்யவேண்டும். துவாதச (12) குருகளை வணங்கும்போது பிரம்மதேவரை கட்டாயம் வணங்கவேண்டும். பீடாவரண பூஜையிலும் அந்தந்த இடங்களில் இவரது பூஜை உண்டு. யக்ஞ யாகங்களிலும் விதிப்படி இவரது பூஜை இருக்கிறது. சாஸ்திரத்தின்படி பிராணதேவர் மற்றும் பிரம்மதேவரின் பூஜை அந்தந்த விதிகளின்படி கட்டாயம் செய்யவேண்டும். சாதகர்களின் வாழ்வில் இவை அனைத்தும் பின்னிப் பிணைத்திருக்கின்றன என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

**கே: அப்படியென்றால், வாயுதேவரைப் போலவே பிரம்மதேவரும் ஜகத்குருவாக இருக்கிறார் அல்லவா? குருகளின் அனைத்து லட்சணங்களையும் பெற்றிருக்கிறார் அல்லவா?**

ப: ஆம். பிரம்மதேவர் மற்றும் வாயுதேவர் இருவருக்கும் ஸ்ரீஹரியே ஜகத்குரு என்னும் பதவியை அளித்திருக்கிறார். மேலும் தாத்பர்ய நிர்ணயத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருப்பதைப் போல், உத்தமமான குருவிடம் இருக்கும் அனைத்து லட்சணங்களையும் பிரம்மதேவர் பெற்றிருக்கிறார். 96 அங்குலங்கள் உடைய தேகத்தைக் கொண்ட 32 லட்சணங்களையும் பெற்று, எந்தவொரு விஷயத்திலும் சந்தேகம் இல்லாமல், மற்றவர்களின் சந்தேகங்களை தீர்க்குமாறு - இப்படி அனைத்து லட்சணங்களும் பிரம்ம வாயுகளிடம் முழுவதுமாக நிரம்பியிருக்கின்றன.

**கே: ஸ்ரீஹரிக்கும் அவரின் அவதாரங்களுக்கும் எந்தவித வித்தியாசமும் இல்லை. அவருடைய சக்திக்கும் (வீர்யம்) அவருக்கும் எந்தவித வித்தியாசமும் இல்லாதபோது இதை லட்சுமியின் கர்ப்பத்தில் ஏற்றுக்கொள்வதற்கு எப்படி சாத்தியமாயிற்று?**

ப: ஜடமான மஹத்தத்வத்தை சரியாக ஜோடித்து, பிரம்மதேவரின் பிறப்பிற்காக, அதை பயனுள்ள சக்தியாக மாற்றி, தன் ஒரு ரூபத்தினால் அதில் நுழைந்து அங்கு வியாபித்தார். இதுவே ஸ்ரீஹரியின் வீர்யம் எனப்படுகிறது. இந்த வீர்யத்தை மகாலட்சுமியின் கர்ப்பத்தில் தரித்து, அதில் நான்முகப் பிரம்மனின் சேதனனை (ஜீவனை) சேர்க்கிறார். ஒரு ஆண்டுகாலம் அதை தன் கர்ப்பத்திலேயே தரித்து வளர்க்கிறாள் லட்சுமி. ஆகையால், ஸ்ரீஹரியின் வீர்யம் உருமாறுகிறது என்று தெரிந்து கொள்ளக்கூடாது. இந்த ஆதாரத்தையே பாகவத தாத்பர்யத்தில் ஸ்ரீமதாசார்யர் நிரூபிக்கிறார்.

**கே: நான்முகப் பிரம்மன் ஸ்ரீஹரியின் முகத்திலிருந்து பிறந்தார் என்று சில இடங்களில் சொல்கிறார்கள். ஆனால், பிருஹதாரண்ய உபநிஷத்தில், ஸ்ரீஹரியிடமிருந்து உருவான கர்ப்பத்தை ரமாதேவி ஒரு ஆண்டுகாலம் தரித்து, பிரம்மனை பிறப்பித்தாள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் எது சரி?**

ப: பிரம்மாண்டத்தின் வெளி ஸ்ருஷ்டியில், ஸ்ரீஹரியின் நாபிக்கமலத்திலிருந்து பிரம்மன் பிறந்தார். பிரம்மாண்டத்தின் உள் ஸ்ருஷ்டியில், ரமாதேவியின் கர்ப்பத்திலிருந்து பிறந்தார். ஆகையால் இதில் வேறுபாட்டிற்கு வாய்ப்பே இல்லை.

**கே: அதே பிருஹதாரண்ய உபநிஷத்தில், முதலில் வாயுதேவரைப் பெற்றார் பிறகு பிரம்மதேவரை பெற்றார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியென்றால், பிரம்மனை விட வாயுதேவரே உத்தமமானவர் அல்லவா?**

ப: பிரம்ம-வாயுகளை விஷ்ணு ஒரே நேரத்தில் பிறப்பித்தார். பிரம்ம பதவிக்கு செல்பவர் என்று சில நேரங்களில் வாயுதேவரின் பிறப்பு முதலில் நடந்தது என்று சொல்கிறார்கள். பிரம்மபதவியின் மகத்துவத்தை தெரிவிப்பதற்கு சில நேரங்களில் பிரம்மனின் பிறப்பு முதலில் நடந்தது என்று சொல்கிறார்கள்.

**கே: பிரம்மாண்டத்தின் வெளியே ஸ்ரீஹரியின் நாபிக்கமலத்திலிருந்து பிரம்மன் பிறந்தார். அதைப்போலவே சரஸ்வதியும் பிறந்தாரா?**

ப: மஹத்தத்வம் பிறந்தபோது இவர்கள் இருவரும் கணவன் - மனைவியாகவே பிறந்தனர். பிரம்மாண்டத்தின் உள்ளே மறுபடி தன் முகத்திலிருந்து சரஸ்வதியை பிரம்மன் படைத்தார்.

**கே: கஸ்யப-வினதெயரிடம் கருடன் பிறந்தார். கஸ்யப-கத்ருவிடம் சேஷன் பிறந்தார். ருத்ரர் பிரம்மனிடம் பிறந்தார். இப்படியிருக்கும்போது மூவரும் பிரம்மனின் மகன்கள் என்று எப்படி சொல்லமுடியும்?**

ப: பிரம்மாண்டத்தின் உள் ஸ்ருஷ்டியில் கஸ்யபரிடம் கருடாதிகள் பிறந்தனர். ஆனால், பிரம்மாண்டத்தின் வெளி ஸ்ருஷ்டியில் அனைவரும் பிரம்மனின் மக்களாகவே பிறந்தனர். அனைத்து தேவதைகளும், பிரம்மனின் உடலிலிருந்தே ஒரு முறை பிறந்திருக்கின்றனர். பிரம்மாண்டத்தின் உள் ஸ்ருஷ்டியில், அந்தந்த தேவதைகள் வெவ்வேறு தம்பதிகளிடம் பிறந்திருக்கின்றனர். பாகவதத்தில் மொத்தம் 14 வகையான ஸ்ருஷ்டிகளை சொல்லியிருக்கின்றனர்.

**கே: பிரம்மதேவரின் உடலிலிருந்து தேவர்கள் எப்படி பிறந்தனர்?**

ப: பிரம்மதேவரின் கண்ணிலிருந்து சூரியன், காதிலிருந்து சந்திரன், மார்பிலிருந்து யமதர்மன், வாயிலிருந்து அஸ்வினி தேவதைகள், நாக்கிலிருந்து வருணன், மனதிலிருந்து இந்திர காமன், புத்தியிலிருந்து சௌபர்ணி, வாருணி, பார்வதி ஆகியோர், அவரது அகங்காரத்திலிருந்து கருட சேஷ ருத்ரர்கள் - இப்படியாக அனைவரும் பிறந்தனர். மரீசி, அங்கீரஸ, அத்ரி, புலஸ்த்ய, புலஹ, க்ரது ஆகியோரும்கூட பிரம்மதேவரின் மானஸ புத்திரர்கள் ஆவர்.

**கே: தேவர்கள் அனைவரும் பிரம்மனின் உடலிலிருந்து பிறந்தவர்கள். அதுபோலவே, மனிதர்களும் பிறந்தனரா?**

ப: பிரம்மனின் முகத்திலிருந்து தேவதைகள், மார்பிலிருந்து பித்ருகள், கீழ்-பாகத்திலிருந்து மனிதர்கள், முதுகிலிருந்து அசுரர்கள் பிறந்தனர் என்று ஹரிவம்சம் சொல்கிறது.

**கே: பிராமணர்கள் ஸ்ரீஹரியின் முகத்திலிருந்து பிறந்தவர்கள் என்று புருஷசூக்தம் சொல்கிறது. ஆனால் ஸ்ருஷ்டி-ப்ரக்ரியவில் (நடைமுறையில்) பிராமணர்கள் பிரம்மனின் முகத்திலிருந்து பிறந்தவர்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் எது சரி?**

ப: புருஷசூக்தத்தில் சொல்லியவாறு ஸ்ரீஹரியின் முகத்திலிருந்து ஒரு முறை பிராமண ஜாதி உருவானது. மறுபடி அதே பிராமண ஜாதி, பிரம்மனின் முகத்திலிருந்து இன்னொரு முறை பிறந்தது. பிராமண ஜாதியின் அபிமானியான ப்ருகு முனிவர், பிரம்மனின் முகத்திலிருந்து முதலில் தோன்றுகிறார். மறுபடி வாயுதேவரின் முகத்திலிருந்து, பின்னர் ருத்ரதேவரின் முகத்திலிருந்தும் பிறக்கிறார். இது போல் பலமுறை ஸ்ருஷ்டி நடைபெற்றது என்று ஷாட்குண்ய என்னும் கிரந்தம் தெரிவிக்கிறது.

**கே: ருத்ராதி தேவதைகளுக்கு சிலசமயங்களில் ‘அஹம் பிரம்மாஸ்மி’ என்னும் கர்வம் வந்துவிடுகிறது என்று புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதைப்போல, நான்முகப் பிரம்மனுக்கும் சிலசமயங்களில் கர்வம் வருகிறது என்றே சொல்லவேண்டும். ஏனென்றால் இவரே அசுரர்கள் செய்யும் தவங்களுக்கு மெச்சி அவர்களுக்கு வரம் அளிக்கின்றார். விஷ்ணு த்வேஷிகளுக்கு வரம் அளித்ததால் தான் ஸ்ரீஹரியை விட சிறந்தவன் என்ற நினைப்பு வந்திருக்கலாம் என்று சொல்லலாமா?**

ப: ருஜுகளுக்கு என்றைக்குமே கர்வம் வருவதற்கு சாத்தியமே இல்லை. அசுரர்களுக்கு வரம் அளித்ததால் கர்வம் வந்தது என்று அறியக்கூடாது. மூன்றுவித ஜீவர்களுக்கும் அவர்வர்கள் செய்த சாதனைகளுக்கேற்ப, ஸ்ரீஹரியின் கட்டளையின் பேரிலேயே வரம் அளிக்கிறார். அவர்கள் செய்த தவத்திற்காக

சிறிதளவும் மகிழ்ச்சியடையாமல், ஸ்ரீஹரியின் கட்டளையின் பேரிலேயே வரத்தை அளிக்கிறார். ருத்ராதி தேவர்களாவது அசுரர்களின் தவத்தை மெச்சியதாக சிறு தோஷங்கள் இருக்கலாம். ஆனால் ருஜுஜீவிகளிடத்தில் அத்தகைய தோஷங்கள் சாத்தியமே இல்லை.

**கே: குதிரையின் வாலில் ஒரு மயிரை ஆயிரம் பாகங்களாகப் பிரித்தால், அதன் ஒரு பாகத்தை விட சிறியது நம் ஜீவன். பிரம்மதேவருக்கும்கூட அவ்வளவே அளவுதான். இப்படியிருக்கும்போது பிரம்மதேவரை வியாப்தர் (அனைத்து இடங்களிலும் இருப்பவர்) என்று சொல்வது எப்படி சாத்தியம்?**

ப: ஒரு துளி கஸ்தூரியானது வீட்டில் அனைத்து இடங்களிலும் பரவி வீடு முழுக்க மணக்க வைப்பதைப் பார்க்கிறோம். அதைப்போலவே பிரம்மதேவரும் நம் ஜீவனைப் போன்ற அளவே உள்ளவராக இருந்தாலும், பிரம்மாண்டத்தின் உள் அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறார். அவர் இல்லாத இடமே இல்லை. பதினான்கு உலகங்களிலும் அவரது அம்சம் பரவியிருக்கிறது. இப்படி சொல்லியவுடன், அவரது அம்சத்திற்கும், ஸ்வரூபத்திற்கும் வேறுபாடு இருக்கிறது என்று சொல்லக்கூடாது. ஸ்ரீஹரியின் அற்புத சக்தியினாலும், விசேஷ பலத்தினாலும், பிரம்மதேவருக்கு இத்தகைய சாமர்த்தியம் கைகூடியிருக்கிறது.

**கே: பிரம்மவாயுகளுக்கு ஸ்ரீஹரி சஹபோகம் (சரிசமமான அந்தஸ்து) அளித்திருக்கிறார் என்கிறார்கள். அப்படியென்றால், ஸ்ரீஹரி அனுபவிக்கும் ஞானானந்தம் மற்றும் லட்சுமி போகங்களை இவர்களுக்கும் கொடுத்திருக்கிறாரா?**

ப: கண்டிப்பாக இல்லை. அந்தந்த கல்பங்களில் அந்தந்த ஜீவர்கள் எந்த சத்கர்மங்களை பின்பற்றி அவற்றை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கிறார்களோ, அதை தான் ஏற்றுக்கொள்வதோடு பிரம்மவாயுகளுக்கும் அவர்களின் தகுதிக்கேற்ப கொடுக்கிறார் என்பதே இதன் பொருள். தவிர, தன்னுடைய சுகங்களை, லட்சுமி போகங்களை பிரம்மவாயுகளுக்குக் கொடுக்கிறார் என்று பொருள் அல்ல. மேலும் அனைத்து கல்பங்களில் சாதனை செய்த ஜீவர்களின் புண்ணியங்களின் பலன்களை பிரம்மவாயுகளுக்குக் கொடுப்பதில்லை.

எந்த கல்பத்தில் எந்த ஜீவர்கள் பிரம்மதேவருக்குக் கீழ்ப்படிந்து சாதனைகளை செய்கின்றனரோ, அந்த ஜீவரின் புண்ணியத்தின் பலன்களை மட்டும் அந்த கல்பத்தின் பிரம்மனுக்கு கொடுக்கிறாரே தவிர, முந்தைய / பிந்தைய கல்பத்தின் ஜீவர்கள் செய்த புண்ணியத்தின் பலன்களை எப்போதும் கொடுப்பதில்லை. இது மிகவும் நுண்ணிய விஷயமாகும்.

**கே: நம் தேகத்தில் ஸ்ரீஹரியை எப்படி காணவேண்டும்? காம-க்ரோதங்களால் நிரம்பிய இந்த தேகத்தில் அனைத்து இடங்களிலும் கலிபிரவேசம் இருக்கிறதல்லவா?**

ப: நம் தேகத்தில் நாம் ஸ்ரீஹரியை தியானிக்க வேண்டும். அதுவும் இதயத்தில். அங்கே முக்கியமான மூன்று நாடிகள் உள்ளன. அவை அஹம் நாடி, சத்வ நாடி மற்றும் ஆத்ம நாடி ஆகும். அஹம் நாடியில் அஹங்காரதத்வத்தின் அபிமானியான ருத்ரர், சத்வ நாடியில் சித்தத்திற்கு அபிமானியான பிரம்மன், ஆத்ம நாடியில் புத்தியின் அபிமானியான பிருஹஸ்பதியும் நிலைத்திருக்கிறார்கள். இந்த சத்வ நாடியை சுஷும்னா நாடி என்றும் அழைக்கிறார்கள். இந்த சுஷும்னா நாடியில் பிரம்மனின் விசேஷ சன்னிதானம் இருப்பதினால் கலிபிரவேசத்திற்கு சாத்தியம் இல்லை. சஞ்சலமான நம் மனதை, சுஷும்னா நாடிக்குள் நுழைத்தால், தொந்தரவில்லாத தியானத்தை செய்வதற்கு சாத்தியம் ஆகின்றது. ஆகையால், சுஷும்னா நாடிக்கு பிரம்ம நாடி என்றும் பெயர் வந்திருக்கிறது.

**கே: பிரம்மதேவரை நாம் தபஸ்விகள் என்று அழைக்க வேண்டுமா? அல்லது யோகி என்று அழைக்க வேண்டுமா? அல்லது சிறந்த பிராமணர் என்று அழைக்க வேண்டுமா?**

ப: பிரம்மதேவரை பக்தியோகிகளில் மிகச் சிறந்தவர் என்று அழைக்கவேண்டும். சாதகர்களில் (நற்செயல்களை செய்பவர்களில்) ப்ரதீகாலம்பனர், அப்ரதீகாலம்பனர் என்று இரு வகையினர் உண்டு. மனுஷ்யோத்தமர் (மனிதர்களில் சிறந்தவர்கள்) அனைவரும் ப்ரதீகாலம்பனர் அல்லது கர்மயோகிகள் என்று அழைக்கப்படுகின்றனர். இவர்களைவிட அப்ரதீகாலம்பனர்கள் சிறந்தவர்களாக இருக்கின்றனர். அனைத்து இடங்களிலும் ஸ்ரீஹரியை பூஜிக்கும் திறன் / வல்லமை படைத்தவர்களை அப்ரதீகாலம்பனர்கள் என்று அழைக்கிறார்கள். இவர்களில் ஞானயோகிகள் மிகச் சிறந்தவர்கள் ஆவர். இந்த ஞானயோகிகளைவிட, விஞ்ஞானயோகிகள், விஞ்ஞானயோகிகளைவிட பக்தியோகிகள் சிறந்தவர்கள் ஆகின்றனர். பக்தியோகிகளில் பிரம்மதேவரே மிகச் சிறந்தவர் என்று அபரோக்ஷ தாரதம்ய சந்தியில் ஸ்ரீஜகன்னாததாசர் தெரிவிக்கிறார். மேலும் பிரம்மவாயுகள் மிகச்சிறந்த பக்தர்களாக இருக்கின்றனர் என்றும் அறியவேண்டும்.

**கே: மரணம் அடையும்போது, பிரம்ம நாடியின் மூலமாக உயிர் போகவேண்டும் என்கிறார்களே? இது நமக்கு எப்போது சாத்தியம்?**

ப: சுஷும்னா நாடியின் இதயப் பகுதியில், எட்டு இதழ்களைக் கொண்ட தாமரையில் ஸ்ரீஹரியை எந்நேரமும் தியானிக்க வேண்டும். இதற்கு பிரம்மனின் பூரண அருளைப் பெறவேண்டும். பற்பல பிறவிகளில் இந்த தியானத்தைச் செய்துவந்தால், ஸ்ரீஹரியின் தரிசனம் கிடைக்கிறது. சாதனைகள் முடிந்தபிறகு நம் தேகத்தில், பிரம்ம நாடியின் மூலமாகவே உயிர் பிரிகின்றது. மற்ற பிறவிகளில் பிரம்ம நாடியின் மூலமாக உயிர் பிரிவது கஷ்டமாகிறது. பிரம்ம நாடியின் மூலமாக உயிரை விடும் ஜீவனானது, தலையிலிருக்கும் ஆயிரக்கணக்கிலான தாமரையிலிருக்கும் பிரம்ம-ரந்திரத்தின் முலம் வெளியேறுகிறது. மேலும் அப்படி வெளியேறும்போது, ஸ்ரீஹரியைக் குறித்து, 'நீ ஈசன். நான் உனக்கு தாசன்'

என்னும் எண்ணம் மேலோங்கி இருக்கவேண்டும். இதுவே நாம் செய்யும் சாதனையின் கடைசி படியாகும்.

**கே: ருஜுஜீவிகளுக்கு ஏன் அதிக பிராரப்தம்?**
(பிராரப்தம் = முந்தைய பிறவிகளிலிருந்து சேகரிக்கப்பட்ட புண்ணியங்கள்).

ப: ருஜுஜீவிகளின் ஒரு கல்பத்தின் அளவு சாதனை ஒரு மனிதனின் ஆயுளுக்கு சமம் எனக் கருதப்படுகிறது. அதிலும்கூட, நாம் முழுமையாக நூறு ஆண்டுகள் சாதனை செய்வதில்லை. பிரம்மனின் பார்வையில் மிகச் சில நிமிடங்கள் அல்லது சில நொடிகளிலேயே நம் சாதனை முடிந்துவிடுகிறது. ஆகையால், ஜீவர்களின் சாதனை மிகவும் குறைவானதாகும். அதனால், ஜீவர்களின் பிராரப்தமும் குறைவாகவே இருக்கின்றது. இப்படி தாரதம்யத்தின்படி, அவர்களின் ஆண்டுகள் அதிகரிக்கும்போது, ருஜுஜீவிகளுக்கு அவர்களின் பிராரப்தமும் அதிகரிக்கின்றது. ருத்ரதேவருக்கு 80 கல்பத்தின் பிராரப்தம் இருந்தால், ருஜுஜீவிகளுக்கு 200 கல்பத்தின் பிராரப்தம் இருக்கின்றது. அதிக ஆண்டுகளின் பிராரப்தம், அவர்களின் தாரதம்யத்திற்கேற்ப, சிறந்த அறிவினை அவர்களுக்குக் கொடுக்கின்றது.

**கே: ருஜுஜீவிகளின் பிம்பாபரோக்ஷம் (முக்தி நிலை) எப்படி இருக்கிறது?**

ப: 'சௌரிசூர்யன தெரதி ப்ரம்ஹசமீரகாயத்ரி கிரிகளொளு தோருவுது அஸ்பஷ்டரூபதி முக்திபரியந்த'

எரியும் ஒரு விளக்கை பார்ப்பது சாத்தியம். ஆனால் சூரியமண்டலத்தை நம் கண்களால் பார்ப்பது சாத்தியமில்லை. அப்படியே ருஜுஜீவிகள், தங்களின் பிம்பரூபத்தை தெளிவாகப் பார்க்கின்றனர். எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களை சூரியமண்டலத்தைப் போல சுலபமாக பார்க்கமாட்டார்கள். இதுவே ருஜுஜீவிகளின் சிறப்பு. பிம்பாபரோக்ஷம் ஆனபிறகு, ருஜுஜீவிகள் மட்டுமே ஸ்ரீஹரியின் தரிசனத்தை எந்நேரமும் மிகத் தெளிவாக காணும் சக்தியை பெறுகின்றனர். நமக்கு பிம்பாபரோக்ஷம் ஆகும்போது, ஒரு நொடியும்கூட ஸ்ரீஹரியின் தரிசனம் கிடைப்பதில்லை.

**கே: 100 பேர் ருஜுஜீவிகள் யார்? அவர்களைப் பற்றி எங்கே சொல்லப்பட்டிருக்கிறது?**

ப:
1. கல்கி 2. சுசேத 3. தாஸ 4. தர்ம 5. அதர்மகண்டன 6. வர்சஸ்வி 7. கஷண 8. ஸாது 9. மஹிபதி 10. சத்தர்மக்ஞ 11. தர்மஜ 12. ஸம்பூர்ண 13. ஷுசி 14. வைக்ருத 15. அஞ்சன 16. ஸர்ஷப 17. கர்பட 18. ஷ்ரத்தா 19. ஸந்த்யாத 20. விக்ஞான 21. மகாவிக்ஞான 22. கீர்த்தன 23. ஸங்கீர்ண 24. கத்த 25. மஹாபுத்த 26. ஜய 27. ஸுமஹத்தர 28. சுவீர்ய 29. மேதாவி 30. விஜய 31. ஜய 32. ரந்திம்ன 33. மனு 34. மோத 35. ப்ரமோத 36. ஸந்த 37. அனந்த 38. ஸந்துஷ்ட 39. சார்வங்க 40. சாரு 41. ஸுபாஹு 42. சாருபத 43. சுலோசன 44. சாரஸ்வத 45. சுவிர 46. கபி 47. ப்ராக்ஞ

48. அலம்பட 49. ஸர்வக்ஞ 50. ஸர்வஜித் 51. மித்ர 52. பாபநாஷன 53. தர்மவினீத 54. ஷாரத 55. ஓஜ 56. ஸுதபஸ்வி 57. ப்ரம்மதேஜஸ்ஸு 58. தானசுசீல 59. யக்ஞசுகர்த 60. யஜ்வீ 61. யாகவர்தக 62. ப்ராண 63. த்ராண 64. அமர்ஷ 65. உமதேஷ்ட 66. மாரக 67. காலக்ரீடன 68. சுகர்ம 69. சுகாலக்ஞ 70. காலசூசக 71. கலிசம்ஹர்த 72. கலி 73. கால 74. ரேத 75. சதாரத 76. சுலப 77. சஹோ 78. சதாகபி 79. கத்ய 80. ஞான 81. தஷகுல 82. ஸ்ரோதவ்ய 83. சங்கீர்திதவ்ய 84. மந்தவ்ய 85. கவ்ய 86. த்ரஷ்டவ்ய 87. சக்ய 88. கந்தவ்ய 89. க்ரவ்ய 90. ஸ்மர்தவ்ய 91. சேவ்ய 92. சுபவ்ய 93. ஸ்வர்கவ்ய 94. பாவ்ய 95. ஞாதவ்ய 96. வக்தவ்ய 97. கவ்ய 98. லாதவ்ய 99. வாயு 100. பிரம்ம

ஹரிகதாம்ருதசாரத்தில் 21ம் சந்தியில் ருஜுஜீவிகளின் பட்டியலைக் கொடுத்திருக்கிறார். இதனை தினந்தோறும் நினைத்துக் கொண்டு, இப்பிறவியை அர்த்தமுள்ளதாக மாற்றிக்கொள்வோம்.

ஈ ருஜுகளொளகொப்ப ஸாதன
னூரு கல்பதி மாடி கரெஸுவ
சாருதர மங்களசுநாமதி கல்பகல்பதலி ।
ஸூரிகளு சந்துதிஸி மந்திஸெ
கோரதுரிதகளளிது போபுவு
மாரமண ஸம்ப்ரீதநாகுவ சர்வகாலதலி ||22||

பாஹி கல்கி சுதேஜதாசனே
பாஹி தர்மாதர்மகண்டனே
பாஹி வர்சஸ்வி கஷண நமோ சாது மஹிபதியே ।
பாஹி சத்தர்மக்ஞ தர்மக்ஞ
பாஹி சம்பூர்ண ஷுசி வைக்ருத
பாஹி அஞ்சன சர்ஷபனே கர்படனெ ஷ்ரத்தாஹ்வ ||23||

பாஹி ஸந்தாத்ய விக்ஞானனே
பாஹி மஹவிக்ஞான கீர்த்தனே
பாஹி சங்கீர்ணாக்ய கத்தனே பாஹி புத்த ஜய ।
பாஹி சுமஹத்தர சுவீர்யனே
பாஹி யாம் மேதாவி விஜய ஜய
பாஹி மாம் ரந்தீம்ன மனு மாம் பாஹி மாம் பாஹி ||24||

பாஹி மோத ப்ரமோத சந்தஸ
பாஹி ஆனந்த சந்துஷ்டனே
பாஹி மாம் சார்வங்க சாரு சுபாஹு சாருபத ।
பாஹி பாஹி சுலோசனனே மாம்
பாஹி சாரஸ்வத சுவீரனே
பாஹி ப்ராக்ஞனே கபியலம்பட பாஹி சர்வக்ஞ ||25||

பாஹி மாம் சர்வஜித் மித்ரனே
பாஹி பாபவினாசகனே மாம்
பாஹி தர்மவினேத ஷாரத ஓஜ சுதபஸ்வீ ।
பாஹி மாம் தேஜஸ்வி நமோ மாம்
பாஹி தானசுஷீல நமோ மாம்
பாஹி யக்ஞ சுகர்த யஜ்வீ மாகவர்தகனே ||26||

பாஹி ப்ராண த்ராண அமர்ஷீ
பாஹி மாம் உபதேஷ்ட மாரக
பாஹி காலக்ரீடன சுகர்தா சுகாலக்ஞ ।
பாஹி காலசுசோசகனே மாம்
பாஹி கலிசம்ஹர்த கலி மாம்
பாஹி கால ஷ்யாமரேத சதாரத சுபலனே ||27||

பாஹி பாஹி சஹோ சதாகபி
பாஹி கம்யஞான தஷகல
பாஹி மாம் ஸ்ரோதவ்ய நமோ சங்கீர்தவ்ய நமோ ।
பாஹி மாம் மந்தவ்ய கவ்யனே
பாஹி மாம் த்ரஷ்டவ்ய சக்யனே
பாஹி மாம் கந்தவ்ய க்ரவ்யனே பாஹி ஸ்மர்தவ்ய ||28||

பாஹி ஸவ்ய சுபவ்ய நமோ மாம்
பாஹி ஸ்வர்கவ்ய நமோ பாவ்யனே
பாஹி மாம் ஞாதவ்ய நமோ வக்தவ்ய கவ்ய நமோ ।
பாஹி மாம் லாதவ்ய வாயுவே
பாஹி ப்ரம்ம ப்ராஹ்மணப்ரிய
பாஹி பாஹி சரஸ்வதீபதே ஜகத்குருவர்ய ||29||

வாமனபுராணதலி பேளித
ஈ மஹாத்மர பரமமங்கள
நாமகள சம்ப்ரீதிபூர்வக நித்ய ஸ்மரிசுவர ।
ஸ்ரீமனோரமனவரு பேடித
காமிதார்தகளித்து தன்ன த்ரி
தாமதொளகனு தினதலிட்டா னந்தபடிசுவனு ||30||

***

# பிரம்மதேவர்

**கேள்வி: நம் அனைவருக்கும் மிகவும் பிரியமான மோட்சத்திற்கு அழைத்துச்செல்பவர் நான்முக பிரம்மன். இவர் நமக்கு எப்படி எப்போது மோட்சத்தைக் கொடுக்கிறார்?**

பதில்: நாம் அபரோக்ஷ ஞானிகளாகி, நம் பிராரப்த கர்மங்களை தீர்த்துக்கொள்ள வேண்டும். பிறகு சத்யலோகத்தில், பிரம்மதேவரின் உபதேசத்திற்காக பலகாலம் காத்திருக்க வேண்டும். பிரம்மகல்பத்தின் இறுதியில், பிரம்மதேவர் அனைவரையும் அழைத்து, அவரவரின் தகுதிக்குத் தக்கவாறு உபதேசம் செய்கிறார். அவரது உபதேசமே இறுதியானது. ஆகையால் இவரே உத்தமோத்தம குரு ஆகிறார். பிறகு, விரஜா நதியருகில் அழைத்துப்போய், அவருடன் ஸ்நானம் செய்விக்கிறார். அப்போது, ஆதியிலிருந்து நம்முடனேயே இருந்த லிங்கதேகம் பங்கமாகிறது. பிறகு மோட்சத்திற்கு அழைத்துப் போகிறார்.

**கே: பிரம்மகல்பத்தில் இறுதியில், விரஜா நதியில் ஸ்நானம் செய்த உடனேயே நமக்கு மோட்சம் கிடைப்பதில்லையா?**

ப: இல்லை. 'அவ்வளவுதானே, மோட்சம் கிடைத்தாயிற்று' என்று தீர்மானமாக நம்பியிருந்தாலும், அப்போதே ஸ்ரீஹரி மோட்சத்தைக் கொடுப்பதில்லை. பிரளய காலம் முழுவதும் முடிந்தபிறகு, அடுத்த கல்பத்தின் துவக்கத்தில் ஸ்ரீஹரி மோட்சத்தைக் கொடுக்கிறார். ஆகையால் மோட்சம் கிடைப்பதற்கு லிங்கதேகம் மட்டுமே தடையல்ல. 'ஸ்ரீஹரியின் விருப்பம்' என்னும் இன்னொரு விஷயமும் இதற்கு தடையாக இருக்கிறது. இந்த கல்பத்தின் இறுதியில் லிங்கதேகம் நாசமானாலும்கூட, ஸ்ரீஹரியின் விருப்பம் என்னும் விஷயம் அடுத்த கல்பத்தின் துவக்கத்தில்தான் கிடைக்கும். அதன்பிறகு ஜீவனுக்கு மோட்சம் கிடைக்கிறது. ஆகையால், பிரம்மதேவர், ஸ்ரீஹரியின் கட்டளைப்படி, விரஜா நதியில் ஸ்நானத்தை செய்வித்து, வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து விடுவிக்கிறார். பிறகு ஸ்ரீஹரி மோட்சத்தைக் கொடுக்கிறார்.

**கே: நம்மைப் படைத்தவர் பிரம்மதேவர். நம்மை சாதனை (நற்செயல்கள்) செய்ய வைத்தவரும் அவரே. இறுதியில் நமக்கு உபதேசம் செய்வித்து, விரஜா நதியில் ஸ்நானம் செய்வித்து, வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து நாம் விடுபடவும் அவரே உதவுகிறார். இப்படியிருக்கும்போது, வாயுதேவரை ஏன் நாம் குரு என்று நினைத்து வணங்கவேண்டும்? நம் சாதனைகளுக்கு வாயுதேவர் எப்படி முக்கியமான காரணம் ஆகிறார்?**

ப: நம் சாதனைகளுக்கு பிரம்மதேவர் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவே வாயுதேவரும் முக்கியப் பாத்திரத்தை வகிக்கிறார். வாயுதேவரை பூஜிக்காமல்,

பிரம்மதேவரிடமிருந்து உபதேசம் பெறுவது சாத்தியமே இல்லை. இதைப் பற்றிய ஆதாரங்களை பின்வரும் பகுதியில் பார்க்கலாம்.

**கே: நான்முக பிரம்மன், பூலோகத்தில் எவ்வளவு முறை அவதரித்திருக்கிறார்? ஸ்ரீஹரி, ராம கிருஷ்ண அவதாரங்களை எடுத்தபோது, பிரம்மனும் கூடவே அவதரித்தாரா? மற்றும் அவரின் அம்சாவதாரங்கள் எவ்வளவு? அவரின் விசேஷ ரூபங்கள் எவ்வளவு உள்ளன?**

ப:
'பிரம்மா சதுர்முகோ தாதா விதாதா விதிரேவ ச ।
கர்தா விரிஞ்சோ பூதேஷ: ஷதானந்தஷ்ச தா நவ ॥

பிரம்மா, சதுர்முக, தாத்ரு, விதாத்ரு, விதி, கர்த்ரு, விரிஞ்ச, பூதேஷ, ஷதானந்த - என்று பிரம்மதேவரின் ஒன்பது ரூபங்களை பாகவத தாத்பர்யத்தில் ஸ்ரீமதாசார்யர் எழுதியிருக்கிறார். பூஜை செய்யும்போது இந்த ஒன்பது ரூபங்களையும் நாம் கண்டிப்பாக நினைக்க வேண்டும். இவற்றைத் தவிர இன்னும் பல ரூபங்கள் உள்ளன. ஆனால் ஸ்ரீஹரியின் விருப்பத்திற்கேற்ப, நான்முக பிரம்மனுக்கு அவதாரங்கள் இல்லை.

**கே: அத்ரி, அனுசூயா தம்பதியினரிடம் பிரம்மதேவர் சோம என்னும் ரூபம் கொண்டு அவதரித்தார். 'சோமோSபூத் பிரம்மணோம்Sஷேன தத்தோ விஷ்ணோஸ்து யோகவித் । துர்வாஸ: ஷங்கரஸ்யாம்Sஷோ நிபோதான்கிரஸ: ப்ரஜா ॥' என்று பாகவதத்தின் நான்காம் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியிருக்கும்போது அவருக்கு அவதாரமே இல்லை என்று எப்படிச் சொல்கிறீர்கள்?**

ப: 'சோமோSபூத் பிரம்மணோம்Sஷேன' என்னும் வாக்கியத்திற்கு, ஸ்ரீமதாசார்யர் 'ப்ரஹ்மணோ நாவதாரோSஸ்தி ஸன்னிதானம் து கேவலம்' என்று பதில் அளித்திருக்கிறார். பிரம்மதேவருக்கு அவதாரம் இல்லாத காரணத்தினால், சோமனிடத்தில் பிரம்மனின் சன்னிதானம் இருப்பதாக மட்டுமே நினைக்கவேண்டும். ஆகையால், பூமியில் நான்முக பிரம்மனுக்கு ஸ்வரூபாவதாரம் இருப்பதில்லை. அம்சாவதாரம்கூட இருப்பதில்லை. பாண்டவர்கள் கதை, ஸ்ரீகிருஷ்ணனின் கதை, ராமாயணம் இப்படி எவற்றிலாவது பிரம்மதேவருக்கு அவதாரம் இருக்கிறது என்று படித்தால், அது அஞ்ஞானிகளின் மோகனத்திற்காக நடத்தப்பட்ட விளையாட்டு என்றே நினைக்கவேண்டும்.

புராணங்களில் அப்படி காணப்பட்டால், அவை கல்பபேதத்தினால் வந்தவை என்று ஸ்காந்தபுராணம் மற்றும் வராக புராணங்களின் ஆதாரத்தில் ஸ்ரீமதாசார்யர் நிர்ணயிக்கிறார்.

**கே: பிரம்மதேவருக்கு அம்சாவதாரம், ஆவேச அவதாரங்கள் மட்டுமல்ல. அவருக்கு பூலோகத்தில் பூஜையும்கூட கிடையாது என்கிறார்கள். இதற்கு என்ன காரணம்?**

ப: ப்ருகு ரிஷிகளின் மற்றும் ருத்ரதேவரின் சாபமே இதற்கு காரணம். மும்மூர்த்திகளில் யார் உத்தமர் என்று பார்க்கப் போயிருந்தபோது, பிரம்மதேவர் தம்மை அவமதித்தார் என்பதற்காக அவருக்கு பூலோகத்தில் பூஜை கிடையாது என்று ப்ருகு முனிகள் சாபமிட்டார். ஆகையாலேயே, பிரம்மதேவருக்கு பூலோகத்தில் பூஜைகள் இருப்பதில்லை. நாம் பிராணதேவரின் பிரதிமையை (உருவச்சிலையை) வைத்து பூஜிப்பதுபோல, பிரம்மதேவரின் பிரதிமையை வைத்து பூஜிக்கும் வழக்கமும் இல்லை.

**கே: நான்முக பிரம்மரின் சன்னிதானம், புஷ்கர க்ஷேத்திரத்தில் இருப்பதற்கு என்ன காரணம்? வராகன் எங்கு ஏன் புஷ்கர ஏரியில் பிரவேசித்தார்?**

ப: ஸ்ருஷ்டியின் துவக்கத்தில், ஆதி ஹிரண்யாக்ஷன் தொந்தரவு கொடுத்தபோது, நான்முக பிரம்மன், ஸ்ரீஹரியைக் குறித்து தவம் செய்தார். அப்போது பிரம்மனின் மூக்கு துவாரங்களிலிருந்து வராகன் அவதரித்தார். பிறகு இந்தக் குளத்தில் பிரவேசித்தார். ஆகையால், புஷ்கர க்ஷேத்திரமே பிரம்மன் தவம் மேற்கொண்ட தலம் எனக் கருதப்படுகிறது. இதே ஏரியில் வராகன் தோன்றி, ஆதிஹிரண்யாக்ஷனை கொல்வதற்காக பிரவேசித்தார்.

**கே: தமிழ்நாடு, கேரளா, கோவா, கர்னாடகா என்று பல மாநிலங்களில் பல இடங்களில் நான்முக பிரம்மனுக்கு கோயில் உள்ளது. அவற்றில் சில மிகப் பழமையானதும்கூட. அப்படியென்றால் இந்தக் கோயில்கள் சாஸ்திரங்களுக்கு எதிரானவை அல்லவா? இந்தக் கோயில்களுக்கு நாம் சென்று, பிரம்மதேவரை பூஜிக்கலாமா?**

ப: பிரம்மதேவருக்கு சிலைவைத்து பூஜிப்பதில்லை என்பதற்கு ப்ருகு ரிஷிகளின் சாபம் காரணமாக இருந்தாலும், அது ஸ்ரீஹரியின் விருப்பமாகவே உள்ளது. ஆகையால், ஸ்ரீஹரியின் விருப்பத்தை பிரம்மன் கண்டிப்பாக நிறைவேற்றுகிறார். சாஸ்திரங்களுக்கு எதிராக கோயில்களை அமைத்து அவரை பூஜித்தால், பிரம்மதேவருக்கு அது ஒப்புவதில்லை. ஆகையால் அந்தக் கோயில்களுக்குப் போய் நாம் பிரம்மதேவரை பூஜித்தால், அது அவருக்கு திருப்தியைக் கொடுப்பதில்லை. ஆகவே, யார் பிரம்மதேவருக்குப் பூஜை செய்ய விரும்புகிறாரோ, அவர் முக்யபிராணரின் சன்னிதானம் இருக்கும் இடங்களுக்குப் போய், முக்யபிராணதேவருக்கு மட்டுமே பூஜை செய்யவேண்டும். ஸ்ரீஹரியின் விருப்பத்தின்படி பிரம்மதேவருக்கும்கூட அது திருப்தியையே அளிக்கிறது.

**கே: நான்முக பிரம்மனுக்கு பூஜைகள், உற்சவங்கள் எதுவும் நடைபெறாது என்று ருத்ரர் ஏன் சாபமிட்டார்? இதற்கு என்ன பின்புலம்?**

ப: ஒரு முறை சிவன், பிரம்மனைவிட தானே உயர்ந்தவன் என்று கர்வம் கொண்டார். அப்போது பிரம்மனின் ஐந்தாவது தலையை துண்டித்தார். இதே சமயத்தில், உனக்கு பூலோகத்தில் பூஜைகள், உற்சவங்கள் நடைபெறாது என்று பிரம்மனுக்கு சாபம் கொடுத்தார். இன்னொரு சமயத்தில், ப்ருகு முனிகளும் இதே போல் சாபம் அளித்தார்.

**கே: பிரம்மன் பிறக்கும்போது அவருக்கு ஒரு முகம் இருந்தது என்று சிலர் சொல்கின்றனர். சிலர் நான்கு என்றும் சிலர் ஐந்து முகம் என்றும் சொல்கின்றனர். இதில் எது சரி? எது தவறு?**

ப: ஆம். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக இதைச் சொல்கின்றனர். விஷ்ணுவின் நாபி-கமலத்திலிருந்து பிறக்கும்போது பிரம்மனுக்கு ஒரே ஒரு முகம் இருந்தது. நான்கு திசைகளையும் பார்ப்பதற்கு நான்கு முகங்களைப் பெற்றார். முதலிலிருந்த முகத்தையும் சேர்த்து, மொத்தம் ஐந்து முகங்கள் ஆயின என்கின்றனர். ஆனால், பிரம்மன் பிறக்கும்போது நான்கு முகங்கள் இருந்தன. ஐந்தாவது முகம் என்பது சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் மட்டுமே தோன்றுகிறது எனத் தெரிந்துகொள்ள வேண்டும்.

**கே: பிரம்மனின் ஐந்தாவது முகத்தை ருத்ரர் பிய்த்து எறிந்தார் என்று சொல்கிறார்கள். இதற்கு ஆதாரம் உள்ளதா? இதை நாம் ஏன் ஒப்பவேண்டும்?**

ப: தன்னைப் போல பிரம்மனுக்கும் ஐந்து முகங்கள் என்பதை அறிந்த ருத்ரருக்கு கோபம் வந்தது. ஆகவே அந்த ஐந்தாவது முகத்தை அறுத்து, அவரை நான்முகனாக்கினார். இதுவே 'பிரம்மகபால' என்று ஆகியது என்ற கதைகளை லிங்கபுராணத்தில் படிக்கலாம். ஆனால் இது பிரம்மதேவருக்கு ஸ்ரீஹரி இட்ட கட்டளை. ஸ்ரீஹரியின் கட்டளையை பிரம்மதேவர் பின்பற்றுகிறார். இப்படி, உள்ளர்த்தத்தை தெரிந்து கொள்ளவேண்டுமே தவிர அந்த கதையை ஆதாரமில்லாதது என்று சொல்ல முடியாது. பிரம்மத்விஷே என்னும் ஸ்ருதிக்கு உரை எழுதும்போது, ஸ்ரீபத்பநாபதீர்த்தரே முதன்முதலில் பிரம்மகபாலத்தைப் பற்றி எழுதினார்.

**கே: அப்படியென்றால் பிரம்மர் உடல்-ஊனமுற்றவர் என்று சொல்லலாமா? அவருடைய உடல் சூக்ஷ்மமானது என்றானபிறகு இத்தகைய சம்பவம் நடைபெறுவது சாத்தியமா?**

ப: ஆம். ஆகையாலேயே இதை தற்காலிமான சம்பவம் என்று சொல்லவேண்டும். அவருக்கு நான்கு முகங்களே இருந்தன. ஐந்தாவது தலையானது, ருத்ரதேவரின் பிரம்ம-கபாலத்திற்காக மட்டுமே உருவானதாகும். ஆகையால் அவர் உடல்-ஊனமுற்றவர் என்று சொல்வதற்கு வாய்ப்பே இல்லை.

**கே: ரமாதேவியிடமிருந்து பிறந்த நான்முகனை ஸ்ரீஹரி தின்பதற்கு எப்படி சாத்தியம்? மகனை தந்தை தின்பது சரியாகுமா?**

ப: சதுர்முகப் பிரம்மனுக்கு 'சம்வத்ஸர' என்று இன்னொரு பெயர் உண்டு. அப்படிப்பட்ட பிரம்மனின் அழகினைக் கண்டு ம்ருத்யுநாமகனான ஸ்ரீஹரி அவரை தின்பதற்காக வாய் திறந்தார். அப்போது பயந்த பிரம்மன் 'பாண்' (BaaN) என்னும் சொல்லைப் பயன்படுத்தினார். இதிலிருந்தே சரஸ்வதி பிறந்தார். சரஸ்வதியின் பிறப்பிற்காக ஸ்ரீஹரி நடத்திய நாடகமே இது. அதுமட்டுமல்லாமல், பிரம்மன் தனக்கு சரியான உணவு ஆகமாட்டார், ஆகையால் அவர் மூலமாக உலகத்தைப் படைத்து, அந்த பிரம்மாண்டத்தில் பல ஜீவராசிகளை மற்றும் பொருட்களைப் படைத்து, அந்தப் பொருட்களை தின்றால் வயிறு நிறையவேண்டும் என்று ஸ்ரீஹரி நினைத்து, பிரம்மனின் மூலமாக மொத்த உலகத்தையும் படைத்தார். ஆகையால் பின்னர் உலகம் பிறப்பதற்கு இது ஒரு நடத்தப்பட்ட நாடகம் என்றே நினைக்கவேண்டும்.

**கே: தன்னிடமிருந்து பிறந்த சரஸ்வதியை நான்முகப் பிரம்மன் தானே திருமணம் செய்தார். மகளை மணம் புரிவது என்ன நியாயம்?**

ப: பல அறிஞர்கள் இதனை கடுமையாக ஆட்சேபிக்கின்றனர். ஆனால் சரஸ்வதி இந்த ஜென்மத்தில் மட்டும் பிரம்மனுக்கு மனைவி அல்ல. அனாதி அனந்த காலம் வரைக்கும் அவரே பிரம்மனின் மனைவி ஆவார். எப்படி லட்சுமியானவர் ஸ்ரீஹரியின் மனைவியாக அனாதி அனந்த காலத்தில் இருக்கிறாரோ அதைப்போலவே, சரஸ்வதிகூட பிரம்மனின் நியதபத்னி ஆகிறார். ஆகையால், சரஸ்வதியை பிரம்மனின் மகள் என்று எப்போதும் நினைக்கக்கூடாது.

**கே: தன் மனைவியை பிரம்மன் ஏன் மகளாகப் பிறப்பித்தார்? வேறு வழியில் பிறக்கவைத்து, திருமணம் செய்திருக்கலாமல்லவா?**

ப: துஷ்ட-காமத்தை பிரம்மன் படைக்க வேண்டியிருந்தது. அதற்காக தன் மனைவியையே மகளாக பிறக்கவைத்து, துஷ்ட-காமம் என்னும் பொருளை இதிலிருந்து படைத்தார்.

**கே: துஷ்ட-காமத்தை ஏன் படைத்தார்? அதற்காக இந்த நாடகத்தை ஏன் நடத்த வேண்டும்?**

ப: உலகத்தைப் படைக்கும் ஒரு அங்கமாக, காமம், பயம், அஞ்ஞானம், பொறாமை ஆகியவற்றைப் படைக்க வேண்டும். அதற்காக ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு தோஷங்களைக் காட்டியவாறு, அந்தந்த விஷயங்களை பிரம்மன் படைத்தார். உதாரணத்திற்கு, தனது மானச புத்திரர்களான சனகாதிகள், படைத்தல் தொழிலை முன்னெடுத்து நடத்தவில்லை என்று அவர்கள் மேல் கோபம் கொண்டார். இதிலிருந்து கோபம் என்னும் விஷயம் உண்டாயிற்று.

**கே: தன்னிலிருந்து பிறந்த மகளை திருமணம் செய்துகொள்ள தயாரானார் பிரம்மன் என்று பாகவத மூன்றாவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதை மரீசி முதலான ரிஷிகள் எதிர்த்தபோது, அவளை தியாகம் செய்தார். அப்போது கெட்டவர்கள் அவளை ஏற்றுக்கொண்டனர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதுவே சரியான கதை. இதற்கு எதிராக, மகளை திருமணம் செய்துகொண்டார் என்று எப்படி சொன்னீர்கள்?**

ப: இதற்கு பாகவத தாத்பர்யத்தில் தெளிவான பதில் உள்ளது. மனைவி வேண்டுமென்ற ஆசையில், பிரம்மன் தனது உடலை இரண்டு பாகங்களாகப் பிரித்தார். அந்த உடலில் இடது பக்கத்திலிருந்து சரஸ்வதி பிறந்தார். தானே இவரைத் திருமணம் செய்துகொண்டார். இன்னொரு சமயத்தில், ஒரு துஷ்டளான சரஸ்வதியை பிறக்கவைக்கிறார். இவள் துஷ்ட சாஸ்திரங்களுக்கு மற்றும் துர்விஷயங்களுக்கு அபிமானினியாக இருக்கிறார். லௌகிக விஷயங்களில் ஆசைகொண்ட இவரை பிரம்மன் காதலிப்பதாக நாடகம் ஆடினார். அதை மரீசி முதலான ரிஷிகள் எதிர்த்தபோது, அவரை தியாகம் செய்து, துர்ஜனர்களிடம் அனுப்பினார். துர்ஜனர்கள் இவரின் வருகையால், கெட்ட வழியில் நடக்கத் துவங்கினர் என்று சொல்கின்றனர்.

இதிலிருந்து, வேதங்களுக்கு அபிமானினியான சரஸ்வதியை தான் மணம் புரிந்துகொண்டு, கெட்ட சாஸ்திரங்களுக்கு அபிமானினியான சரஸ்வதியை திருமணம் செய்துகொள்ளாமல் துஷ்டர்களிடம் அனுப்பினார் என்ற உண்மையை அறியவேண்டும்.

**கே: தனது நான்கு முகங்களிலிருந்து பிரம்மன் என்னென்ன விஷயங்களைப் படைத்தார்?**

ப: நான்கு வேதங்கள், நான்கு ரித்விஜர்கள், நான்கு திசைகள், நான்கு ஆசிரமங்கள், நான்கு ஜாதிகள், நான்கு சாஸ்திரங்கள், நான்கு சந்தஸ்கள் ஆகியவற்றை - கிழக்கிலிருந்து துவங்கி, வரிசையாக உள்ள தனது நான்கு முகங்களிலிருந்து படைத்தார்.

**கே: ஆண் பெண் கூடினால் சந்ததி உண்டாகும் என்னும் விஷயத்தை எப்படி படைத்தார்?**

ப: பிரம்மனின் உடலின் ஒரு பாகம் சரஸ்வதியாகி, மற்றொரு பாகம் தானாகவே இருந்து, தன் மனைவி தனது மறுபாதி என்று சொல்வதின் மூலம் தம்பதிகளின் அந்நியோன்யத்தை ஸ்தாபித்தார். இதன் மூலமாகவே சந்ததி உண்டாக்குவதை தடையின்று நடக்குமாறு செய்தார். அது மட்டுமல்லாமல், அர்த்தநாரிநர ரூபத்தினால் ஒன்றாகி இருந்த பிரம்ம சரஸ்வதி இருவரும் வெவ்வேறு உடல்களைப் பெற்று, பின் ஒன்று கூடினர். அப்போது இன்னொரு ஆண்-பெண்ணின் ஜோடி பிறந்தது. அந்த ஆண் - ஸ்வாயம்புவ மனு. பெண் -

ஷதரூபாதேவி. இந்த ஸ்வாயம்புவ மனு, ஷதரூபாதேவியை திருமணம் செய்து, பிரியம்வ்ரத, உத்தானபாத ஆகிய என்று அந்த வம்சம் துவங்கியது. தேவலோகத்தில் கருட, சேஷ, ருத்ரர் முதலானவர்கள் பிரம்மனிடமிருந்தே பிறந்து, சந்ததிகளை துவக்கினர்.

**கே: ஸ்ரீஹரியின் நாபிகமலத்திலிருந்து பிறந்தபோது, பிரம்மன் தனது படைப்புத் தொழிலை துவக்கினார் அல்லவா?**

ப: நாபிகமலத்திலிருந்து பிரம்மன் பிறந்தபோது, அவருக்கு படைப்புத் தொழில் செய்வதற்கு அதிகாரம் இருந்திருக்கவில்லை. ஸ்ரீஹரியே அனைத்தையும் தனது உறுப்புகளிலிருந்து படைத்து வந்தார்.

**கே: பிரம்மன் சரஸ்வதியை போகிப்பதற்காக சென்றபோது, சரஸ்வதி பெண் மானின் உருவம் கொண்டு சிவனிடம் அபயம் வேண்டி ஓடினார். அப்போது சிவன் அந்த மானை தன் தொடையின் மேல் வைத்து காப்பாற்றினார். பிரம்மனை அடித்துத் துரத்தினார் என்ற கதையை சைவர்கள் சொல்கின்றனர். இது சரியா?**

ப: இந்த கதையும் லிங்கபுராணத்தில் இருக்கிறது. மானின் உருவத்திலிருந்த சரஸ்வதியை காப்பாற்றியதாலேயே, சிவனுக்கு மிருகதர, மிருகாலய என்றெல்லாம் பெயர்கள் வந்தன. ஆனால், வேதாபிமானினியான சரஸ்வதி பெண் மானின் ரூபத்தில் சிவனிடம் ஓடவே இல்லை. அது வேறு ஒருவள்.

**கே: சரஸ்வதியின் விலங்கு ரூபங்களைப் பற்றி, உபநிஷத்களில் அல்லது வேறு சாஸ்திர கிரந்தங்களில் ஏதாவது சொல்லப்பட்டிருக்கிறதா?**

ப: ஆம். பிருஹதாரண்யக உபநிஷத்தில் மிகத் தெளிவாகவே சொல்லப்பட்டிருக்கிறது. 'தன்னிந்தலே நன்னன்னு ஹுட்டிஸி, நன்னன்னு மதுவெ ஆகுத்திருவனல்லா?' (தன்னிடமிருந்தே என்னைப் பிறப்பித்து, என்னை திருமணமும் செய்துகொண்டாரே?) என்று சரஸ்வதி ஆச்சரியப்பட்டு, பசுவாக மாறினார். அப்போது பிரம்மன், எருதாக மாறி, இருவரும் சேர்ந்து, பசுக்கள் முதலானவைகளைப் படைத்தனர். பிறகு சரஸ்வதி பெண் குதிரையாக மாறினார். அப்போது பிரம்மன் ஆண் குதிரையாக மாறினார். சரஸ்வதி பெண் கழுதையானபோது, பிரம்மன் ஆண் கழுதையானார்.

இப்படி பல்வேறு விலங்குகளின் ரூபங்களை சரஸ்வதி எடுத்தபோது, அதற்கேற்ப தானும் அந்தந்த விலங்குகளின் ரூபத்தை எடுத்து, உலகத்திலுள்ள அனைத்து விலங்குகளையும் படைப்பதற்கு காரணமாயினர். இதுவே சரஸ்வதி விலங்கு ரூபங்களை எடுத்ததற்கான காரணமே தவிர, தனக்கு பிரம்மன் வேண்டாம் என்று அவள் விலங்கு ரூபத்தை எடுக்கவில்லை.

**கே: பிரம்மதேவர் இந்த உலகத்திற்கு உபதேசித்த புராணங்கள் எவை?**

ப: பதினெட்டு புராணங்களில் முதலாவது பிரம்ம புராணம். இதை பிரம்மன், நாரதருக்கு உபதேசித்தார். வால்மிகி முனிவருக்கு ராமாயணம் எழுதுமாறு கட்டளையிட்டார். மகாபாரதத்தை எழுதுமாறு வேதவியாஸ தேவரிடம் வந்து வேண்டினார். நாராயணனிடமிருந்து பாகவதத்தை உபதேசம் பெற்று, அதை உலகத்தில் பிரசாரம் செய்தார். இது மட்டுமல்லாமல், ஒவ்வொரு புராணங்களிலும், ஆங்காங்கு வரும் உபதேசங்களுக்கு இந்த நான்முக பிரம்மதேவரே காரணமாக இருக்கிறார்.

**கே: பிரம்மதேவர், ஸ்ரீஹரியின் எந்தெந்த ரூபங்களிலிருந்து எவ்வளவு முறை அவதரித்தார்? எந்த பெயர்களைப் பெற்றார்?**

ப:

1. படைப்பின் துவக்கத்தில் பிரம்மாண்டத்தின் வெளியே ஸ்ரீஹரியின் நாபி-கமலத்திலிருந்து முதன்முதலில் தோன்றினார். பிரம்மா என்னும் பெயரைப் பெற்றார்.
2. பிரம்மாண்டத்தின் உள்ளே ஸ்ரீஹரி-ஸ்ரீதேவியிடம் ஒரு ஆண்டு காலம் கர்ப்பத்தில் இருந்து, சம்வத்ஸர என்னும் பெயர் பெற்று பிறந்தார்.
3. வாசுதேவ-மாயாதேவியரிடம் விரிஞ்ச என்னும் பெயரில் பிறந்தார்.
4. சங்கர்ஷண-ஜயாதேவியரிடம் சூத்ர என்னும் பெயரில் அவதரித்தார்.
5. அனிருத்த-சாந்திதேவியரிடம் மஹான் என்னும் பெயரில் அவதரித்தார்.
6. பிரத்யும்னன்-க்ருதிதேவியரிடம் புருஷ என்னும் பெயரில் அவதரித்து, மொத்த பிரம்மாண்டத்தையே படைத்தார்.

இன்னும் பலமுறை ஸ்ரீஹரியிடமிருந்து அவதரித்திருக்கிறார். ஆத்மா, சுமனா, நான்முக, பூர்வஜ இவையும் பிரம்மனின் பெயர்கள் என்று ஷப்தநிர்ணய கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: பிரம்மதேவரிடம் நாம் முக்கியமாக வணங்கவேண்டிய குணம் எது?**

ப: பிரம்மதேவர், ஸ்ரீஹரியின் நேரடி பிரதிபிம்பராக இருக்கிறார். இந்த பிரம்மனிடம், ருத்ரதேவர் எப்போதும் ஸ்ரீஹரியைக் குறித்து வேண்டியபடியே இருக்கிறார். இத்தகைய சிறப்புமிக்க பிரம்மதேவரின் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்ரீஹரியைக் கண்டு வணங்கி, நம் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்வோம்.

**கே: பிரம்மதேவரின் அருளை நாம் எப்படி பெறவேண்டும்?**

ப: மொத்த பிரம்மாண்டத்தில் எவ்வளவு மணல் துகள்கள் உள்ளன? என்று கேட்டால் யாராலும் பதில் சொல்வது சாத்தியமில்லை. ஆனால், பிரம்மதேவர்

ஒரே நொடியில் அனைத்தையும் எண்ணி சொல்லிவிடுவார். இதுமட்டுமே அவரது சாமர்த்தியமில்லை. பற்பல பிரம்மாண்டத்திலிருக்கும், மொத்த மண்ணின் துகள்களை ஒரு நொடியில் எண்ணும் சாமர்த்தியம் அவருக்கு உண்டு. இத்தகைய அவரது சாமர்த்தியத்தை ஊகிப்பதற்கும் நம்மால் முடியாது. நம் சக்திக்கேற்ப, ஸ்ரீஹரியின் குணங்களைப் பற்றி புதிதுபுதிதாக தெரிந்துகொள்ளலே வேண்டும். அப்போது மட்டுமே, நம்மை படைத்ததற்கு ஒரு அர்த்தம் உள்ளது என்று அறிந்து, பிரம்மன் நமக்கு அருளுவார்.

**கே: நம் வாழ்க்கையை நாம் எப்படி அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்ள வேண்டும்?**

ப: நமது வாழ்க்கையின்படி 864 கோடி ஆண்டுகள் கழிந்தால் அது பிரம்மதேவருக்கு ஒரு நாள். இத்தகைய 100 ஆண்டுகள் கழிந்தால், அவருக்கு ஒரு கல்பம். அவரது சாதனை 200 கல்பம். அந்த 200 கல்பத்தில், ஒரே ஒரு நொடிகூட அவர் ஸ்ரீஹரியை நினைக்காமல் இருப்பதில்லை. சம்சாரத்தில் மூழ்கியிருக்கும் நாம், ஒரு நாளைக்கு ஒரு மணி நேரமாவது ஸ்ரீஹரியை நினைக்க வேண்டும். பிரம்மதேவரின் சாதனையை, த்ருவ நட்சத்திரமாக வைத்துக்கொண்டு, நம் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்வோம்.

**கே: நான்முக பிரம்மனின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: பிரளய காலத்தில் சேஷனின் மேல் நாராயணன் தனியாகப் படுத்திருந்தார். பிரளய காலம் முடியும்போது, அவரின் வயிற்றிலிருந்து உலகம் தோன்றியது. அதிலிருந்தே ஒரு தாமரை மலர்ந்தது. அந்த தாமரையில் நான்முகன் பிறந்தார். பிறந்தவுடனேயே அனைவரும் ஸ்ரீஹரியைக் காணாமல், தாமரையின் தண்டின் உள்ளே தேடினர். அங்கும் ஸ்ரீஹரியை காணாமல் பாற்கடலில் தேடினர். இறுதியில், ஸ்ரீஹரியைக் குறித்து பல்வேறு ஸ்தோத்திரங்களைச் செய்து பாடி வேண்டினர்.

நான்முகனின் பிரார்த்தனையில் மனமுருகி ஸ்ரீஹரி அவர் முன் தோன்றி, 'தப தப' என்று கட்டளையிட்டு மறைந்தார். 50 ஆண்டுகள் பிரம்மன் கடுந்தவம் புரிந்தார்.

பிரளய காலத்து நீர், காற்றினை உட்கொண்டு, தாமரையை பதினான்கு லோகங்களாகப் பிரித்தார். பத்து விதமான ஸ்ருஷ்டிகளைத் துவக்கினார். முதலில் பஞ்சபர்வ அவித்யைகளைப் படைத்து (தமஸ், மோஹ, மகாமோஹ, தமிஸ்ர, அந்ததமிஸ்ர என்று ஐந்து அவித்யைகள் உள்ளன), பிறகு மனதிலிருந்து சனகாதி முனிவர்களைப் படைத்தார்.

சனகாதிகள் உலகத்தை மேற்கொண்டு படைப்பதற்கு ஒப்பவில்லை. ஆகவே கோபம் கொண்டு ருத்ரரை படைத்தார். ருத்ரரும் மிக பயங்கரமான பூத, ப்ரேத, பிசாசுகளை படைத்தபோது, அதுவும்கூட பிரம்மனுக்கு திருப்தி அளிக்கவில்லை. இறுதியில் தன்னுடைய உறுப்புகளிலிருந்தே தேவதைகளை, நாரதர் முதலான

முனிவர்களை படைத்தார். தன்னுடைய முகத்திலிருந்து வேதாபிமானினியைப் படைத்து, அவளை திருமணம் செய்துகொண்டார். அசுரமோகனத்திற்காக, துஷ்ட-வாக்- அபிமானினியைப் படைத்து, அவளை விரும்பியதாக நாடகமாடி, பின் அவளைத் துறந்தார். நான்கு வேதங்கள், நான்கு ஆசிரமங்கள் ஆகியவற்றைப் படைத்து, தன் மக்களான மரீசி ஆகியோர் செய்த படைப்புகளிலும் திருப்தி அடையாமல், மறுபடி தன் உடலையே ஆண்-பெண் என்று பிரித்து, ஸ்வாயம்புவ மனு, ஷதரூபாதேவியரை படைத்தார். இப்படியாக பல்வேறு விதங்களில் தன் படைப்புத் தொழிலை செய்தார் நான்முகன். அதே நான்முகனின் படைப்பில் பிறந்த நாம், அவரை பிதாமகன் என்றும், நான்முகன் என்றும் அவரை வணங்குவோமாக.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தில் பிரம்மதேவரின் தியானம் எப்படி செய்யவேண்டுமென்று ஸ்ரீமதாசார்யர் தெரிவிக்கிறார்?**

ப: த்யாயேன் னிஷண்ணமஜயச்யுத நாபி பத்மே
ப்ரோத்யத்திவாகர ஸமூஹ நிகாஷமக்ர்யம் ।
மாத்ருப்ரகார கரமுத்தம காந்திமத்பி
ர்வக்த்ரை: ஸ்ருஜந்தமபிலை: பரமார்த வித்யாம் ॥

ஸ்ரீஹரியின் நாபியில் அமர்ந்திருப்பவர், உதயசூரியனைப் போல ஒளிரும் ஜீவோத்தமர், தன் தாய் ரமாதேவியைப் போல தானும் இரு கைகளில் தாவரங்களையும், வர-அபய முத்திரைகளையும் தரித்திருப்பவர், பர-வித்யையான அனைத்து வேதங்களையும் உச்சரிப்பவர். அ-கார நாமகனான ஸ்ரீஹரியிடமிருந்து பிறந்து அஜ என்ற பெயரைப் பெற்றவரான நான்முக பிரம்மனை நாம் தியானிப்போமாக.

***

# முக்யபிராணதேவர்

**கேள்வி: முக்யபிராணர் ஒருவரே நமக்கான குரு என்று ஏன் சொல்லவேண்டும்? வேறு தேவதைகள் அல்லது நம் கண்ணெதிரே இருக்கும் ஞானிகள் நமக்கு குரு ஆகமாட்டார்களா?**

பதில்: மற்ற தேவர்கள் அல்லது நம்முடன் இருக்கும் ஞானிகள் சிறிது காலத்திற்கு மட்டுமே நம் குருவாக இருப்பர். முடிவில்லாத காலத்திற்கு நம் குருவாக இருப்பவர் முக்யபிராணர் ஒருவர் மட்டுமே. ஆகையால் அவரையே நாம் ஒப்பீடு இல்லாத குருவாக நினைத்து சரணடையவேண்டும்.

**கே: முடிவில்லாத காலத்திற்கு முக்யபிராணர் குருவாவதற்கு எப்படி சாத்தியம்? அவரும் நம்மைப்போலவே சம்சாரியாக இருந்ததனால், முடிவில்லாத காலத்திற்கு அவர் இருப்பது சாத்தியமே இல்லையே?**

ப: ஆம். ஸ்ரீஹரி எப்படி எல்லா காலங்களிலும் ஞானானந்தாத்மகனாக பல்வேறு ரூபங்களைத் தாங்கியவாறு இருக்கிறாரோ, அதேபோல் முக்யபிராணதேவரும் இருக்கிறார் என்று சொல்வதற்கு சாத்தியமில்லை. ஆனால் எல்லா ஜீவர்களும் எப்படி நித்யமோ, அதுபோல் முக்யபிராணதேவரும் நித்யமாகி இருக்கிறார். ஆகையால், எல்லா காலங்களிலும் இவரே நம் குரு என்று சொல்லவேண்டும்.

**கே: முஷ்டிஸ்ருஷ்டி ஆனபிறகே சாதனை துவங்குகிறது. லிங்கதேகம் அழிந்தபிறகு சாதனை செய்வதற்கு சாத்தியம் இல்லை. ஆகையால், நாம் சம்சாரத்தில் இருக்கும்போது மட்டுமே முக்யபிராணரை குரு என்று அழைப்பது சாத்தியம். அந்த சமயத்தில், மற்ற தேவதைகளையும்கூட அப்படியே குரு எனலாம். ஆனால், முக்யபிராணருக்கு மட்டும் ஏன் இத்தகைய சிறப்பு?**

ப: முஷ்டிஸ்ருஷ்டி என்பதற்கான விளக்கம்: படைப்பின் துவக்கத்தில், ஸ்ரீஹரி தன் ஒரு முஷ்டியில் ஜீவர்களை அள்ளி அவர்களை சம்சாரத்திற்கு / இவ்வுலகத்திற்கு அனுப்புகிறார். இருக்கும் பற்பல ஜீவர்களில் ஒரு முஷ்டி அளவிற்கு எடுத்தாலும், தாரதம்ய முறைப்படி சரியான அளவிலேயே ஜீவர்கள் அதில் இருப்பார்கள் என்று அறியவேண்டும். இதுவே முஷ்டிஸ்ருஷ்டி எனப்படுகிறது.

கேள்விக்கான பதில்: இந்த குழப்பத்திற்காகவே ஞானிகள் ஏற்கனவே பல்வேறு விவாதங்களை செய்திருக்கிறார்கள். முஷ்டிஸ்ருஷ்டி ஆவதற்கு முன்னரும்கூட அந்த ஜீவன் சம்சாரத்திற்கு வருவதற்கு பக்குவம் தேவைப்படுகிறது. அந்த பக்குவத்தைக் கொண்டு தருவதற்காக ஒரு குரு தேவைப்படுகிறார். அதைப்போலவே, மோட்சத்தை அடைந்தபிறகும், ஸ்ரீஹரியின் பல்வேறு

நற்குணங்களை உபதேசிக்கும் ஒரு குரு தேவைப்படுகிறார். அத்தகைய குருவே முக்யபிராணதேவர்.

**கே: முஷ்டிஸ்ருஷ்டி ஆவதற்கு முன் முக்யபிராணரும் கூட ஸ்ருஷ்டி ஆவதில்லை. மேலும் நமக்கு மோட்சம் கிடைத்த நேரத்தில் அவர் நான்முக பிரம்மனின் பதவியில் இருப்பார். இப்படியிருக்கும்போது மோட்சத்தில்கூட இவரே குரு என்று எப்படி சொல்லமுடியும்?**

ப: இந்த சந்தேகத்தை போக்குவதற்காகவே, ஸ்ரீமதாசார்யரின் நேரடி சிஷ்யரான ஸ்ரீநரஹரிதீர்த்தர், ஜீவ-ஸ்வரூபத்திற்குள் முக்யபிராணதேவரின் பிரவேசத்தை ஒப்புக்கொண்டார். ஜீவன் எப்படி அனந்தனோ (எல்லா காலங்களிலும் இருக்கிறானோ), அவனின் அந்தர்யாமியான முக்யபிராணதேவரும் எல்லா காலங்களிலும் அனந்தனாக, குரு ரூபத்தில் இருக்கிறார் என்று நிரூபணமாகிறது.

**கே: அப்படியென்றால் ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணருக்கு பிரவேசம் இருக்கிறது என்று ஒப்புக்கொள்ளலாமா?**

ப: முன்பு சொன்னதுபோல், நரஹரி தீர்த்தர் முதலான பல ஞானிகள், ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணருக்கு பிரவேசம் இருக்கிறது என்று சொல்லியிருக்கின்றனர். இப்படி ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணருக்கு பிரவேசம் இருக்கிறது என்று ஒப்புக்கொள்வதால், அனந்தகாலத்திற்கும் (எல்லா காலங்களிலும்) முக்யபிராணரே குருவாக இருக்கிறார் என்று சொல்லலாம். ஒருவேளை ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணருக்கு பிரவேசம் இல்லை என்று ஒப்புக்கொண்டால், மற்ற தேவதைகளைப் போல முக்யபிராணரும் தற்காலிக குருவாக இருப்பாரே தவிர, நித்யகுருகள் ஆவதற்கு சாத்தியம் இல்லை. இப்படி பல விதங்களில் விவாதிக்கும்போது ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணருக்கு பிரவேசம் இருக்கிறது என்று ஒப்புக்கொள்வது கட்டாயமாகிறது.

**கே: ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணருக்கு பிரவேசம் இருக்கிறது என்று ஒப்புக்கொள்வதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது?**

ப:
வாயுர்ஹி ஸர்வஜீவானாம் அபிமானீ நியாமக: |
பலமேதாத்ருதீ ஸ்தைர்யத்யான வைராக்யமானவான் |
ஸஞ்ஞானானந்தபக்த்யாதி குணமானீ ஸ ஏகல:
(சத்தத்வ ரத்ன மாலா)

எல்லா ஜீவர்களுக்கும் அபிமானி தேவதை முக்யபிராணதேவர் என்று இதிலிருந்து தெரிகிறது. ஜீவனின் உள் இவர் இல்லையென்றால், ஜீவனின் அபிமானி தேவதை ஆவதற்கு எப்படி சாத்தியம்? ஜீவனின் உள் நுழைவதற்கு சாமர்த்தியம் இல்லாதவர், அதனை கட்டுப்படுத்துவது எப்படி சாத்தியம்? ஆகையால், மேற்சொன்ன வாக்கியத்தின் ஆதாரத்தின்படி, முக்யபிராணருக்கு

ஜீவஸ்வரூபத்தில் பிரவேசம் இருக்கிறது என்று ஒப்புக்கொள்வது சரியே என்று அறியவேண்டும்.

**கே: முக்யபிராணருக்கு ஜீவஸ்வரூபத்தில் பிரவேசம் உள்ளது என்று அறிவது சரியல்ல. ஏனென்றால், ஸ்ரீஹரி நம்மை முஷ்டிஸ்ருஷ்டிக்கு கொண்டுவருவதற்கு முன்னரே அவர் பிறந்திருக்கிறார். நாம் மோட்சத்திற்குச் சென்றபிறகும் சம்சார வாழ்க்கையில் இருக்கிறார். ஒருவேளை ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணருக்கு பிரவேசம் இருந்தால், நாம் சம்சாரத்திற்கு வந்தபோது அவரும் வந்து, நாம் மோட்சத்திற்கு போகும்போது அவருக்கும் மோட்சம் என்றே இருக்கவேண்டுமல்லவா?**

ப: இந்த ஒரு சந்தேகத்திற்காகவே, சங்கர்ஷண ஒடெயரு முதலான ஞானிகள், ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணரின் பிரவேசத்தை ஒப்புவதில்லை. ஒளிரூபத்தில் மட்டுமே பிரவேசிக்கிறார் என்கிறார்கள். ஆனால், ஸ்ரீஹரியின் விசேஷ சக்தியினால், ஜீவஸ்வரூபத்தின் உள்ளிருக்கும் முக்யபிராணர், ஒரு ரூபத்தில் சம்சாரத்தில் இருந்தாலும், ஜீவஸ்வரூபத்தில் அந்தர்யாமி ரூபத்தில் மோட்சத்திற்கு வருகிறார் என்று சில அறிஞர்கள் இதிலுள்ள வேறுபாட்டினை சுட்டிக்காட்டுகின்றனர்.

**கே: ஜீவஸ்வரூபத்தில் இருக்கும் முக்யபிராணதேவருக்கு லிங்கதேகம் உள்ளதா இல்லையா?**

ப: இதுகூட ஒரு பிரச்னைக்குரிய கேள்வி. முக்யபிராணதேவருக்கு லிங்கதேகம் எந்தவொரு காரணத்தாலும் நாசம் அடையாததால், ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணருக்கு லிங்கதேகம் இருக்கட்டும், இல்லாமல் போகட்டும், அது நமக்கு பிரச்னையில்லை. இதுகூட ஸ்ரீஹரியின் விசேஷமான சக்தியினாலேயே லிங்கதேகம் இல்லை என்று சிலர் சொல்கின்றனர்.

**கே: முக்யபிராணரின் சில ரூபங்களுக்கு 'தக்தபடாயமான' முறையில் லிங்கதேகம் உள்ளது என்று சொல்கிறீர்கள். வேறு சில ரூபங்களுக்கு லிங்கதேகமே இல்லையென்றும் சொல்கிறீர்கள். இந்த வேறுபாடுகளை எப்படி ஒப்புக்கொள்வது?**

ப: உலகத்தில் எல்லா இடங்களிலும் இருக்கின்ற வேறுபாடுகள், ஸ்ரீஹரியிடம் காணப்படுவதில்லை. இதுவே ஸ்ரீஹரியின் மிகவும் அற்புதமான சக்தி என்று சாஸ்திரங்களில் சொல்கின்றனர். நம் பார்வையில் இது மிகுந்த வேறுபாடுகளைக் கொண்டிருந்தாலும், ஸ்ரீஹரியின் அற்புதமான சாமர்த்தியத்தினாலேயே இத்தகைய வேறுபாடுகளை ஒப்புக்கொள்ளவேண்டும்.

**கே: இதுவரை பேசிய விஷயங்கள் அனைத்தும் புரிந்தன. ஆனால், ஜீவஸ்வரூபத்தில் முக்யபிராணதேவருக்கு பிரவேசம் உள்ளது என்பதற்கு தகுந்த ஆதாரம் உள்ளதா?**

ப:
கருட சேஷ பவாதி நாமவ
தரிஸி பவன ஸ்வரூபதேஹதி
கரண நியாமகனு தானாகிப்ப ஹரியந்தே ||
ஹரி 9-12

ஸ்ரீஹரி எப்படி ஸ்வரூப தேகத்தில் இருக்கிறாரோ அதைப்போலவே முக்யபிராணரும் நிலைத்திருக்கிறார் என்று இந்த மேற்கண்ட ஸ்லோகத்தில் சொல்கிறார்.

ஈரெரடு தேஹதொளகித்து
ஸமீரதேவ ஷ்வாஸஜபனா
நூரதிகவாகிப்ப எம்பத்தாரு ஸாஹஸ்ர ||
ஹரி 12-44

ஸ்வரூப தேகத்திலிருந்தும் முக்யபிராணர் ஹம்ஸ மந்திர ஜபத்தை அனாதி காலத்திலிருந்து செய்துகொண்டே இருக்கிறார் என்று மேற்கண்ட ஸ்லோகத்தில் ஸ்ரீஜகன்னாததாசர் மிகத்தெளிவாக சொல்லியிருக்கிறார்.

இதைவிடவும் சிறந்த ஆதாரம் வேறு என்ன வேண்டும்?

**கே: மோட்சத்தில் முக்யபிராணர் நம் குருவாவதற்கு சாத்தியம் இல்லை. ஏனென்றால், மோட்சத்தில் முக்யபிராணரே இருப்பதில்லை. நான்முக பிரம்மன் ஆனபிறகே அவருக்கு மோட்சம் கிடைக்கிறது அல்லவா?**

ப: முக்யபிராணர் பிரம்மனான பிறகே மோட்சத்தை அடைகிறார் என்பது உண்மையே. ஆனால், அடுத்த கல்பத்தின் சாதகர்களுக்கு இவர் பிரம்மன் ஆகிறார். நமது கல்பத்திற்கு சம்பந்தப்பட்டு, இவர் முக்யபிராண ரூபத்தில் நமக்கு தற்போது எப்படி குருவாக இருக்கிறாரோ, மோட்சத்திலும்கூட நமக்கு இவர் குருவாகவே இருக்கிறார்.

**கே: மோட்சமும் இந்த சம்சாரத்தைப் போலவேதானா?**

ப: ஆம். சம்சாரத்தில் எப்படியோ அப்படியே மோட்சத்திலும். மோட்சமானது நம் நினைப்பிற்கும் எட்டாதது. அனைத்து கல்பங்களின் சாதகர்களும் முக்தர்களாகும்போது, அந்தந்த கல்பத்தின் உத்தமர்கள் அந்த சாதகர்களுடனே மோட்சத்தில் இருக்கிறார்கள். வெவ்வேறு கல்பத்தின் சாதகர்களுக்கு ஒருவருக்கொருவர் சம்பந்தம் இருப்பதில்லை. ஆகையால் இந்த கல்பத்திலிருக்கும் தேவேந்திரன், கருடன், சேஷன் ஆகியோரும் இதே ரூபத்தில் நமக்கு மோட்சத்திலும் காட்சியளிக்கிறார்கள். வெவ்வேறு கல்பத்தின் கருட-சேஷாதிகளுடன் நமக்கு சம்பந்தம் இருப்பதில்லை. வேறு கல்பத்தினரை

பார்ப்பதற்கு நாம் ஆசைப்பட்டால், ஸ்ரீஹரி அதற்கு ஒப்புதல் அளிக்கிறார் ஆனாலும் அப்படி ஆசைப்படுபவர்கள் மிகவும் குறைவு. அதைப்போலவே, இந்த கல்பத்திலும் நம்மை சாதனை செய்யத் தூண்டிக்கொண்டிருக்கும் முக்யபிராணரும், மோட்சத்திலும் இதே போலவே நமக்கு குருவாகவே இருக்கிறார்.

**கே: நம் தேகத்தில் முக்யபிராணரை எப்படி உபாசிக்க வேண்டும்?**

ப: இதயத்திலிருக்கும் ஆறு-இதழ்களைக் கொண்ட தாமரையில் மூலேஷன் என்னும் பிம்பரூபி இருக்கிறார். இவரின் பாதங்களின் அடியில், முக்யபிராணர் அமர்ந்து, ஹம்ஸமந்திரத்தை ஜபித்துக் கொண்டிருக்கிறார். இவரின் பாதங்களின் பெருவிரலில் இருக்கும் நாம், மோட்சத்தை அருளவும் என்று முக்யபிராணரை வணங்கவேண்டும்.

**கே: இது மட்டுமல்லாமல் இன்னும் எந்தெந்த ரூபங்களில் நம் உடலில் நிலைத்திருக்கிறார்?**

ப: அனைவருக்கும் ஸ்தூல தேகம், அனிருத்த தேகம், லிங்க தேகம், ஸ்வரூப தேகம் என்று நான்கு தேகங்கள் உள்ளன. இந்த நான்கு தேகங்களிலும் முக்யபிராணர் ஒவ்வொரு ரூபத்தில் நிலைத்திருக்கிறார். ஸ்வரூப தேகத்திலும் முக்யபிராணருக்கு 'மாதரிஷ்வ' என்று பெயர். ஸ்ரீஹரியின் பாத விரல்களில் நிலைத்திருக்கும் ரூபத்திற்கு 'பவமான' என்று பெயர் என்று ஞானிகள் சொல்கின்றனர். இதுமட்டுமல்லாமல், ஆறு-சக்கரங்களில் நிலைத்திருக்கும் ஸ்ரீஹரியின் ஒவ்வொரு ரூபங்களையும் பூஜிப்பதற்காக முக்யபிராணரின் தனித்தனி ரூபங்கள் இருக்கின்றன.

**கே: உணவு உண்ணும்போது பிராண, அபான, வியான, உதான, சமான என்னும் ஐந்து ரூபங்கள் நம் உடலில் இருக்கின்றன என்று ஏன் நினைக்கவேண்டும்?**

ப: நாம் உண்ணும் ஒவ்வொரு பருக்கையையும் முக்யபிராணதேவரின் ஐந்து ரூபங்கள் மூலமாக, ஸ்ரீஹரியின் ஐந்து ரூபங்களில் சமர்ப்பிக்கிறோம் என்று நினைக்கவேண்டும். முகத்தில் பிராண, கழுத்தில் அபான, இதயத்தில் & வயிற்றில் வியான, வயிற்றின் இடதுபக்கத்தில் உதான, வலதுபக்கத்தில் சமான ஆகியோர் - வாசுதேவ, ப்ரத்யும்ன, சங்கர்ஷண, அனிருத்த & நாராயண ரூபங்களில் சமர்ப்பணம் செய்கின்றார்கள். இந்த ஐந்து இடங்களில் ஆஹவனீய, கார்ஹபத்ய, தாக்ஷிணாத்ய, ஸத்ய, அவஸப்ய என்கிற ஐந்து அக்னிகள் (நெருப்புகள்) இருக்கின்றன. ஆகையால் நாம் உண்ணும் ஒவ்வொரு பருக்கையும் ஐந்து இடங்களில் ஸ்ரீஹரியின் ஐந்து ரூபங்களில் போய் சேர்கின்றன. இதை முக்யபிராணதேவரே நின்று நடத்துகிறார் என்று சிந்தனை செய்யவேண்டும்.

**கே: பிராணாபானாதி ரூபங்கள் மட்டுமல்லாது வேறு ஏதாவது ரூபங்கள் இருக்கிறதா?**

ப:

பிராணாதிபஞ்சகம் சைவ ததா நாகாதிபஞ்சகம்
ஸனாக கூர்ம கலதேவதத் ததனஞ்சயா:
ஏவம் து தஷதா ப்ராண அத்யாத்மாதிதிதாऽகிலா: ||
(பாகவத தாத்பர்ய)

வியோம சம்ஹிதையின் இந்த வாக்கியத்தை, பாகவத தாத்பர்யத்தில் ஸ்ரீமதாசார்யர் உதாரணம் செய்திருக்கிறார். இந்த வாக்கியத்தால், பிராண, அபான, வியான, உதான, சமான என்னும் ஐந்து ரூபங்களுடன் நாக, கூர்ம, க்ருகல, தேவதத்த, தனஞ்சய என்று மற்றொரு ஐந்து ரூபங்கள் நம் உடலில் இருந்து நம்மை காக்கின்றனர் என்று தெரிகிறது. நம் உடலில் அத்யாத்ம, அதிபூத, அதிதெய்வம் இருக்கிறது. இந்த மூன்றிலும் பிராணதேவர் தனித்தனியாக பத்து ரூபங்களில் வியாபித்திருக்கிறார். ஆகையால் மொத்தம் முப்பது ரூபங்களில் நம் உடலில் இருக்கிறார் என்று சொல்கிறார்கள். மேலும் கால் கட்டைவிரலில் மூலஸ்வரூபத்தினாலான ரூபம் இருக்கிறது. ஆக மொத்தம், 31 முக்கிய ரூபங்களை நினைக்கவேண்டும்.

இதுமட்டுமல்லாமல், ஸ்ரீஹரி 72,000 நாடிகளில் 72,000 ரூபங்களில் வியாபித்திருக்கிறார். அங்கு முக்யபிராணதேவர் தானும் 72,000 ரூபங்களை தரித்து ஸ்ரீஹரியுடன் இருக்கிறார். ஆகையால் நம் உடலில் ஒவ்வொரு பாகத்திலும் முக்யபிராணர் பற்பல ரூபங்களை தரித்து, நம்மூலமாக சாதனைகளை / நற்செயல்களை செய்விக்கிறார் என்று நினைக்கவேண்டும்.

**கே: முக்யபிராணர் ஹனும பீம மத்வ என்னும் ரூபங்களில் மட்டும் அவதரித்திருக்கிறார் அல்லவா?**

ப: இந்த மூன்று ரூபங்களில் அவதரித்து, மிகுந்த பக்தியுடன் ஸ்ரீஹரியின் சேவையை செய்து, தம் சாதனையை செய்துவருகிறார். ஆனால் அவரின் ரூபங்கள் எண்ணில் அடங்காதவை. 'த்ரிகோடிரூப: பவனஸ்சமே சுத:' என்பதுபோல் ஸ்ரீஹரியை பூஜிப்பதற்காக மட்டும் முக்யபிராணர் மூன்று கோடி ரூபங்களை தரித்திருக்கிறார். அந்த மூன்று கோடி ரூபங்களில், ஒவ்வொரு ரூபத்தினாலும் ஸ்ரீஹரியை ஒவ்வொரு விதமாக நிரந்தரமாக பூஜை செய்துவருகிறார். மேலும் ஏழுகோடி மஹாமந்திரங்களை ஜெபித்து, அனைத்து மந்திரங்களின் பலனையும் முழுமையாக அடைகிறார்.

**கே: முக்யபிராணதேவரின் ரூபங்களுக்கு எல்லை இருக்கிறது என்கிறார்கள். ஆனால் அவருக்கு எண்ணிக்கையில் அடங்காத ரூபங்கள் உள்ளன என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. இது எப்படி?**

ப: 'அனந்தானி அஸ்ய ரூபாணி த்ரிகோடினி விசேஷத:' என்னும் வசனத்தின்படி முக்யபிராணர் விசேஷமாக மூன்று கோடி ரூபங்களை தரித்திருக்கிறார். ஆனால்

இவருக்கு கணக்கற்ற ரூபங்கள் உள்ளன என்று சாஸ்திரங்களில் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கின்றனர். ஆகையால், முக்யபிராணரின் குணங்களை மற்றும் தோஷங்களை சிந்தனை செய்வதென்பது யாருக்கும் சாத்தியமில்லை.

**கே: ஸ்ரீஹரியின் உடலினுள் நுழைந்து முக்யபிராணர், சஹபோகம் அனுபவிக்கிறார் என்று கேட்டிருக்கிறோம். இதன் பொருள் என்ன?**

ப: முக்யபிராணர் மட்டுமல்லாமல் அனைத்து தத்வாபிமானி தேவதைகள் அனைவருமே ஸ்ரீஹரியின் உடலில் நுழைந்திருக்கின்றனர். ஆனால், சஹபோகம் கிடைக்கும் அதிகாரம் முக்யபிராணருக்கு மட்டுமே. அந்தந்த முக்யபிராணதேவரைப் பின்பற்றுபவர்களின் நற்காரியங்களின் பலன்களை ஸ்ரீஹரி முழுமையாக ஏற்றுக்கொள்கிறார். அந்தந்த முக்யபிராணர் ஜீவோத்தமராகி அவருடனேயே இருந்து அதனை ஏற்றுக்கொள்கிறார். இதுவே சஹபோகம் என்பதின் பொருள்.

**கே: ப்ராக்ருதமானவற்றை (இயற்கையாகக் கிடைப்பவற்றை) ஸ்ரீஹரி உண்ணுவதில்லை. அப்படியிருக்கும்போது, அதிலிருந்து கிடைக்கும் சுகத்தின் அனுபவம் முக்யபிராணதேவருக்கு வருவதற்கு எப்படி சாத்தியம்?**

ப: அனைத்து சாதகர்களும் தாம் செய்யும் நற்காரியங்களை கிருஷ்ணார்ப்பணமஸ்து என்று சொல்லி, ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கின்றனர். இதன் பலன்களை ஸ்ரீஹரி ஏற்றுக்கொள்ளும்போது, அதன் ஒரு பாகத்தை முக்யபிராணருக்கும் கொடுக்கிறார் என்பது அபிப்பிராயம். இதையே சஹபோகம் என்றும் அறியவேண்டும்.

**கே: முக்யபிராணதேவருக்கு ஸ்ரீஹரியின் தேகத்தில் ஏன் பிரவேசம் இருக்கிறது என்று சொல்லவேண்டும்?**

ப: எந்த தேவதைகளிடமிருந்தும் ஸ்ரீஹரிக்கு ஆக வேண்டிய வேலைகள் என்று எதுவும் இல்லை. ஆனாலும், அவர்களின் மகிழ்ச்சிக்காக ஸ்ரீஹரி சில லீலைகளை செய்கிறார். தன் தேகத்திலேயே லட்சுமி, முக்யபிராணர் முதலான உத்தம தேவதைகளுக்கு இடம் அளித்து அங்கேயே சுகபோகங்கள் கிடைக்குமாறு செய்கிறார்.

**கே: அப்படியென்றால் லட்சுமிதேவியின் சஹபோகமும், முக்யபிராணரின் சஹபோகமும் ஒன்றே அல்லவா?**

ப: அப்படியில்லை. அந்த கல்பத்தின் சாதகர்கள் அவர்களின் எந்த சாதனைகளை ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து என்று சொல்லி, அவருக்கு சமர்ப்பிக்கிறார்களோ, அதன் ஒரு பாகத்தை மட்டும் ஸ்ரீஹரி முக்யபிராணதேவருக்கு அளிக்கிறார். ஆனால், அனாதி காலத்திலிருந்து வரும் கல்பத்தின் சாதகர்களின் பலன்களை

லட்சுமிதேவிக்கு அளித்துவருகிறார். இந்த வேறுபாட்டினை கவனமாகப் பார்க்கவேண்டும்.

**கே: சாத்விகர்களுக்கு மட்டும் முக்யபிராணர் சாதனை செய்விக்கிறார். ராஜஸ, தாமஸர்களுக்கு சாதனை செய்விப்பதற்கு சாத்தியம் இல்லை அல்லவா?**

ப: 'ஜன்மாதி வியாத்யுபாதி' என்னும் வாயுஸ்துதி ஸ்லோகத்தில் இதற்கான பதில் உள்ளது. சாதகர்களின் பிறவி, ஆதி, வியாதி இவற்றை பரிகரிக்கும் முக்யபிராணர், பல நற்குணங்களை அந்த சாதகர்களுக்கு வழங்குகிறார். அதுமட்டுமல்லாமல், இதே முக்யபிராணர் அவர்களுக்கு பல சுகங்களைத் தருகிறார். மோட்ச சாதகர்களுக்கு, சாதனை செய்வதற்கு யார் இடையூறு செய்கிறார்களோ, அந்த துஷ்டர்களில் அந்தர்யாமியாக இருந்து, பற்பல காலங்களுக்கு அவர்களுக்கு துக்கத்தைத் தருகிறார். அந்தந்தமஸ்ஸிற்கு தள்ளி அங்கும் தானே இருந்து அவருக்கு தண்டனையைத் தருகிறார்.

**கே: மோட்சத்தைக் கொடுப்பவர் முக்யபிராணர் என்று தெரிகிறது. மோட்சத்தில் மகிழ்ச்சியையும் அவரே கொடுக்கிறார் என்று நீங்கள் சொல்கிறீர்கள். இது உண்மையா?**

ப: ஆம். நம்மை எப்போதும் நற்காரியங்களை செய்யவைக்கும் முக்யபிராணர், மோட்சத்தில் நமக்கு சுகம் அளிப்பதற்கு தகுதியானவர் இல்லை என்று எப்படி சொல்கிறீர்கள்? யார் நன்றாக சாதனை செய்வித்திருக்கிறாரோ, அவரே பரிசுகளைக் கொடுத்து, சுகத்தையும் கொடுத்தால் - அப்போது மட்டுமே பரிபூர்ணத்வம் வருகிறது. ஆகையாலேயே த்ரிவிக்ரம பண்டிதர் 'சிருமுதித சிதானந்த ஸந்தோஹதானாம்' என்று சொல்கிறார். இதன் மூலமாக, முக்யபிராணதேவர், மோட்சத்தில் இருக்கிறார் என்பது மட்டுமல்லாமல், நம்மை மோட்சத்திற்கு அழைத்துப்போய், அங்கு பல காலத்திற்கு நம்முடனேயே இருந்து, ஞானத்துடன் சுகத்தையும் கொடுத்து மகிழ்விக்கிறார் என்று அறியவேண்டும்.

**கே: அந்தம்தமஸ்ஸில் முக்யபிராணர் இருக்கிறார் என்று ஏன் சொல்லவேண்டும்?**

ப: அனைத்து பிரம்மாண்டத்திலும் அனைத்து வேலைகளையும் ஸ்ரீஹரி, முக்யபிராணர் மூலமாகவே செய்விக்கிறார். ஆகையால், அந்தம்தமஸ்ஸில் நடைபெறும் அனைத்து செயல்களுக்கும்கூட முக்யபிராணரே பொறுப்பாக இருக்கிறார். ஆகையாலேயே, 'தமஸி விததாம்' என்று த்ரிவிக்ரம பண்டிதர், அந்தம்தமஸ்ஸில் அனாதி காலம் வரை துக்கத்தைக் கொடுங்கள் என்று சொல்லியிருக்கிறார். அந்தந்தமஸ்ஸில் இருக்கும் முக்யபிராணருக்கு எவ்வித துக்கமும் வருவதில்லை.

**கே: வேதம் மற்றும் ஓங்காரத்தினால் புகழப்படுகிறார் ஸ்ரீஹரி என்பது சரி. ஆனால் முக்யபிராணரும் வேதங்களினால் புகழப்படுகிறார் என்றால் அது எப்படி?**

ப: ஸ்ரீஹரி மற்றும் லட்சுமிதேவியை மட்டும் புகழும் வேதங்களை விட்டு, மற்ற அனைத்து வேதங்களும் முக்யபிராணரையே போற்றிப் புகழ்கின்றன.

வேதானாம்சைவ லோகனாம் வ்யோமகாலாதிகஸ்ய ச |
ஸர்வதத்வாபிமானீ ச ஸர்வப்ராண கணாதிப: ||

வேதங்கள், உலகம், ஆகாயம், காலம், அனைத்து தத்வங்கள், அனைத்து ஜீவகணங்கள் என அனைவரையும் கட்டுப்படுத்துபவர் முக்யபிராணரே ஆகியிருக்கிறார். இவரால் கட்டுப்படுத்தப்படும் வேதங்கள் இவரை புகழ்ந்தே ஆகவேண்டும். ஆகவே, மிகவும் முக்கியமானவராக ஸ்ரீஹரி புகழப்பட்டாலும், முக்கியமானவராக முக்யபிராணரும் புகழப்படுகிறார் என்று ஒப்புக்கொள்ள வேண்டும்.

**கே: 'ஆகணாஷ்மசமர்' என்று முக்யபிராணரை சொல்கிறார்கள். இதன் பொருள் என்ன?**

ப: சாந்தோக்ய உபநிஷத், முக்யபிராணரை ஆகணாஷ்மசம என்று புகழ்கிறது. ஒரு முறை தேவர் - அசுரர்களுக்கு போர் நிகழ்ந்தபோது, ஸ்ரீஹரியை வணங்குவதற்காக ஒரு சிலையை தேவர்கள் தேடினர். அக்னி, சூரியன், சந்திரன், ருத்ரர், சேஷன், கருடன் இந்த அனைத்து தேவதைகளின் சிலையையும் வைத்து உத்கீதா என்னும் ஸ்ரீஹரியின் ரூபத்தை பூஜிக்க முற்பட்டனர். ஆனால், அந்த அனைத்து சிலைகளையும் அசுரர்கள் அழித்தனர். பிறகு முக்யபிராணரின் சிலையை வைத்துக்கொண்டு, உத்கீதனை பூஜித்தனர். அப்போது அந்த சிலையின் மேல் அசுரர்கள் பலவித ஆயுதங்களை பிரயோகித்தனர். ஆனால் அவை அனைத்தும் வீணாயின. ஒரு பாறாங்கல்லின் மேல் ஒரு களிமண் உருண்டையை அடித்தால், அந்த பாறாங்கல்லுக்கு எவ்வித சேதமும் இல்லாமல், அந்த களிமண் உருண்டையானது எப்படி பொடிப்பொடி ஆகின்றதோ, அப்படி அந்த அசுரர்கள் அந்த சிலையின் மேல் பிரயோகித்த அனைத்து ஆயுதங்களும் நஷ்டமாயின. அசுரர்களும்கூட அழிந்தனர். இதனால், வாயுதேவரே ஸ்ரீஹரியின் 'ஸ்ரேஷ்ட-பிரதிமை' என்று தேவதைகள் கோஷமிட்டனர்.

**கே: முக்யபிராணதேவரிடத்தில் நாம் ஸ்ரீஹரியை ஏன் நினைத்து பூஜிக்கவேண்டும்? ருத்ராதி தேவதைகளில் ஏன் அப்படி நினைக்கக்கூடாது?**

ப: நாம் செய்யும் அனைத்து செயல்களிலும் பாரதிரமண முக்யப்ராணாந்தர்கத என்று ஸ்ரீஹரியை நினைத்தே பூஜிக்கவேண்டும். அப்படி செய்யவில்லையென்றால், நாம் செய்த அந்த செயல்கள் நாசமடைகின்றன. ஏனென்றால், மற்ற அனைத்து தேவதைகளிடமும் அசுரர்களின் பிரவேசம்

இருக்கிறது. முக்யபிராணரிடம் அசுர பிரவேசத்திற்கு கொஞ்சமும் வாய்ப்பில்லை. முன்னரே சொன்னதுபோல், முக்யபிராணரே ஆகணாஷ்மசமர் ஆனதால் (அனைத்து அசுரர்களும் சேர்ந்து எதிர்த்தாலும், வெல்லப்பட முடியாதவர்), இவரே ஸ்ரீஹரியின் பிரதிமை ஆவதற்கு சாத்தியம். ஸ்ரீஹரியும் முக்யபிராணரில் இருந்து நமக்கு அருளுவார். நாம் எங்கு ஸ்ரீஹரியை பூஜிக்கவேண்டுமென்றாலும், அதை முக்யபிராணதேவர் மூலமாகவே செய்யவேண்டும்.

**கே: ருத்ராதி தேவதைகளில், அசுர பிரவேசம் இல்லாதபோது ஏன் ஸ்ரீஹரியை அவர்களிடத்தில் நினைத்து பூஜிக்கக்கூடாது?**

ப: 'தஸ்மின் அபூ மாதரிஸ்வா ததாதி' என்று ஈசாவாஸ்ய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அனைத்து சாதகர்களின் நற்கர்மங்களை முக்யபிராணர் ஒருவரே சமர்ப்பணம் செய்கிறார். ஆகையால் நாம் அனைத்து செயல்களையும், பாரதிரமண முக்யபிரணாரில் அந்தர்யாமியாக இருப்பவருக்கே சமர்ப்பிக்கவேண்டும். ருத்ராதி தேவதைகளில் எப்போது அசுர ஆவேசம் இருக்கிறது, எப்போது அசுர ஆவேசம் இல்லை என்று நம்மால் தெரிந்துகொள்வது சாத்தியமில்லை. சாஸ்திர விதிகளுக்குட்பட்டு, ருத்ராதிகளை வணங்கவேண்டுமெனில், அவர்களிடத்தில் முக்யபிராணரையும், முக்யபிராணரிடத்தில் ஸ்ரீஹரியையும் சிந்தனை செய்தால், நம் செயல்கள் அசுர ஆவேசத்திற்கு உட்படாமல், பத்திரமாக ஸ்ரீஹரியைப் போய் சேர்கின்றன.

**கே: ஸ்ரீஹரியைப் போல வாயுதேவரும் அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவரா?**

ப:

முக்யபிராணோ மஹானேஷ யேன வ்யாப்தம் சராசரம்
தஸ்மின் ஒதமிதம் ஸர்வம் சேதனா சேதனாத்மகம் |
யதா ஸூத்ரே மணிகணா: ரதனாபாவரா யதா
யதா கந்தாபடா: ஸூத்ரே ஒதா:போதாஸ்ச ஸ்ம்ஸ்தா: ||
(பாகவத தாத்பர்ய)

ஜீவோத்தமரான வாயுதேவர் இந்த மொத்த உலகத்திலும் அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவர் என்பது இந்த ஆதாரத்தினால் தெளிவாகிறது. ஆனால் நவ-ஆவரணத்தினால் கூடிய இந்த பிரம்மாண்டத்தின் உள்ளே மட்டுமே முக்யபிராணர் வியாப்தர் என்று தெரியவேண்டும். நவ-ஆவரணத்தின் வெளியே முக்யபிராணர் இருப்பதில்லை. அங்கு லட்சுமி மற்றும் ஸ்ரீஹரி மட்டுமே வியாப்தராக இருக்கின்றனர். ஆகையால் முக்யபிராணரைக் காட்டிலும் லட்சுமி மற்றும் ஸ்ரீஹரி இருவரும் உத்தமர் என்று தெரியவேண்டும்.

**கே: முக்யபிராணர் மனுஷ்யோத்தமர்களுக்கு மட்டுமே மோட்சத்தைக் கொடுக்கிறாரோ, அல்லது தேவதைகளுக்கும் கொடுக்கிறாரா?**

ப: ஏகோ ஹி கர்தா ஸர்வஸ்ய ரமானாதப்ரஸதத: |
பதப்ரதஸ்ச தேவானாம் தத்தஸ்பக்தி ப்ரதஸ்ததா |
ததா ம்ருத்யுப்ரதஸ்சாயம் முக்தானாமபி ஜீவனம் |
(ஸ.ர.மா)

என்னும் வாக்கியத்தினால், ஸ்ரீஹரியின் பிரசாதத்தினால் தேவதைகளுக்கும்கூட முக்யபிராணர் மோட்சத்தைக் கொடுக்கிறார் என்று தெரியவருகிறது. ஆகையால் அனைத்து தேவதைகளும், முக்யபிராணரையே குருவாக நினைத்து பூஜிக்கின்றனர்.

**கே: முக்யபிராணரிடம் எப்படி பக்தி செலுத்தவேண்டும், எப்படி பூஜை செய்யவேண்டும் என்பதை சொல்வீர்களா?**

ப: திருப்பதி வெங்கடேசனைப் பார்ப்பதற்கு எப்படி ஒரு ஆவலுடன் நாம் போகிறோமோ, அதைப்போலவே தேவதைகளும் முக்யபிராணரின் தரிசனத்துக்காக ஆவலுடன் போகிறார்கள். அப்படிப் போய், முக்யபிராணரை சத்யலோகத்தில் பார்த்தபோது, அனைவரும் நான் முந்தி, நீ முந்தி என்று போட்டி போட்டு அவரை வணங்குகின்றனர். அப்போது அவர்களின் கிரீடங்கள், முக்யபிராணரின் பாதபீடத்தில் பட்டு, அதிலிருந்து கிளம்பும் தூசு வானத்தில் பரவி, வானத்தையே வண்ணமயமாக்குகின்றது.

இப்படியாக தேவதைகளுக்கு முக்யபிராணரிடத்தில் இருக்கும் பக்தியை, வாயுஸ்துதியில் த்ரிவிக்ரம பண்டிதர் மிகவும் அற்புதமாக வர்ணிக்கிறார். தேவதைகளே இவ்வளவு பக்தி செலுத்தும்போது, நாமும்கூட அதே போல பக்தி செலுத்தவேண்டும். அவரது பாததூளியை நம் தலையில் ஏந்தி தன்யர் ஆகவேண்டும்.

**கே: வாயுதேவரை எப்படி நினைக்கவேண்டும்?**

ப:
'த்ரிஜகத்குருவரேண்ய ருஜுகணாதிப பதாம்புஜயுக்மக்கெரகி பின்னைப இன்னேக மன்மனதி நிஜரூப தோரி ஸந்தைஸு' (தத்வஸுவ்வாலி)

தேவஸ்ரேஷ்டஸ்ச மாருதி: - இத்தகைய ஆதாரங்கள் வாயுதேவரே ஜீவோத்தமர் என்பதை நிரூபிக்கின்றன. 'இயதாமனனாத்', 'ஸ்ரேஷ்டஸ்ச' ஆகிய பிரம்மசூத்திரங்களில் ஜீவோத்தம நிர்ணயிக்கப்பட்டுள்ளது. மூன்று லோகங்களுக்கும் இவரே குரு ஆவார். இத்தகைய வாயுதேவரின் ஜீவோத்தமத்வ பூஜையை, தினந்தோறும் எந்நேரமும் நினைத்து பூஜித்து நம் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக மாற்றிக்கொள்வோமாக.

**கே: முக்யபிராணருக்கு என்றைக்கும் கலி பிரவேசம் கிடையாதா?**

ப: மற்ற தேவதைகளை கவனித்தால், அவர்களிடத்தில் ஒருமுறையாவது கலி பிரவேசம் ஆகியிருக்கிறது. ஆனால், என்றைக்கும் கலிபிரவேசம் இல்லாத குரு என்றால் அது முக்யபிராணர் மட்டுமே. ஆகையால், அவதார ரூபங்களில் இவருக்கு, மூலரூபத்தில் இருக்கும் ஞானம், வலிமைகள் அப்படியே முழுமையாக இருக்கின்றன. எப்போது வேண்டுமானாலும், மூலரூபத்தில் இருக்கும் வலிமையை இவர் தனது அவதார ரூபங்களில் வெளிப்படுத்த முடியும். இத்தகைய உத்தமரான முக்யபிராணரே, மத்வராகி நமது குருவாக கிடைத்திருப்பது நமது பற்பல ஜென்மங்களின் நற்பலனே ஆகும். இத்தகைய முக்யபிராணரின் பாதங்களில் நிரந்தரமாக சரணாகதி அடைவோமாக.

**கே: முக்யப்ராணரின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: 'நாம் எப்போதும் ஸ்ரீஹரியை நினைத்து பூஜிப்பதற்கு ஒரு பிரதிமை (உருவச்சிலை) வேண்டும். அதைப் பற்றி யாரிடம் கேட்பது?' என்று ஒரு முறை அனைத்து தேவதைகளும் கூடி விவாதித்தனர். பூஜைக்காக அந்தப் பிரதிமை மிகவும் முக்கியமானதாக இருந்தது. கண், மூக்கு ஆகிய இந்திரியங்களின் அபிமானி தேவதைகளையும் பிரதிமையாகச் செய்து பூஜிக்கத் துவங்கினர். ஆனால், எப்போது பூஜையைத் துவக்கினரோ, அதே நேரத்தில் அசுரர்கள் வந்து, அந்த பிரதிமையை அழிக்கத் துவங்கினர். இப்படியாக அந்த பிரதிமை அசுத்தமானதால், தேவதைகள் ஸ்ரீஹரியை வணங்குவதற்கு சாத்தியமே இல்லாமல் போயிற்று.

பலமுறை இப்படியே தேவதைகளின் முயற்சிகள் தோல்வியில் முடிந்தன. பிறகு முக்யபிராணரின் சிலையைச் செய்து வைத்தனர். அதில் ஸ்ரீஹரியை அந்தர்யாமியாக நினைத்து பூஜிக்கத் துவங்கினர். அசுரர்கள் அங்கேயும் வந்து தங்களின் தொந்தரவை தொடர்ந்தனர். பல்வேறு வழிகளில் அந்த பூஜையை நிறுத்த முயன்றனர். ஆனால் ஒரு பெரிய பாறாங்கல்லில் ஒரு களிமண் உருண்டையை ஓங்கி அடித்தால், அந்த பாறாங்கல்லுக்கு எவ்வித சேதமும் ஆகாது. கூடவே அந்த களிமண் உருண்டையானது இருக்கும் இடம் தெரியாமல் உடைந்து போகும். அதுபோலவே, முக்யபிராணரை அழிக்கவந்த அசுர சக்திகள் அவர் முன் தோற்று ஓடின. அந்த முக்யபிராணரின் சிலையை எந்தவொரு வழியிலும் அவர்களால் அழிக்க முடியவில்லை.

இத்தகைய முக்யபிராணரின் சிலையில் தேவதைகள் ஸ்ரீஹரியின் ரூபத்தை தியானித்து, வெல்லமுடியாதவர்களாக ஆயினர். இப்படி எந்த அசுரசக்தியாலும் அழிக்கமுடியாத பரிசுத்த ஸ்வரூபத்தைக் கொண்ட முக்யபிராணதேவர் மட்டுமே, ஸ்ரீஹரியின் பூஜைக்கு முக்கிய காரணமானார். இவரை விட்டு வேறு யாரின் மூலமாகவும் நாம் ஸ்ரீஹரியை நினைக்கக்கூடாது. சாஸ்திரங்கள் சொல்லியிருக்கும் விதிகளின்படி வேறு ஏதாவது தேவதைகளை நாம் நினைத்து

பூஜிக்க முற்பட்டாலும், அந்தந்த தேவதைகளில் முக்யபிராணரை, அந்த முக்யபிராணரில் ஸ்ரீஹரியை நினைத்து பூஜிக்கவேண்டும். முக்யபிராணரில் இருக்கும் ஸ்ரீஹரியை பூஜித்தால் எந்தவொரு பிரச்னை / தடையும் இல்லாமல் தூய்மையான மங்களகரமான மோட்சம் நமக்குக் கிடைக்கும்.

ஆகையால், முக்யபிராணரின் அந்தர்யாமியாக ஸ்ரீஹரியை பூஜித்து நாம் தன்யர் ஆவோமாக.

**கே: முக்யப்ராணரை நாம் எப்படி வணங்கவேண்டும்?**

ப: தினமும் வாயுஸ்துதி பாராயணம் செய்து, ஒவ்வொரு பிராமணரும் ப்ராணமந்திரத்தை ஜெபிக்கவேண்டும். இதைத் தவிர, ஸ்ரீஹரியின் நாமஸ்மரணையுடன் ‘முக்யபிராணாய நம:’ என்று முக்யபிராணரின் நாமஸ்மரணையையும் செய்யவேண்டும். நிற்கும்போது, உட்காரும்போது, உண்ணும்போது, தூங்கும்போது, நடக்கும்போது, பயணிக்கும்போது - இப்படி எந்நேரமும் முக்யபிராணரின் சிந்தனை இல்லாமல் இருக்கக்கூடாது. அப்போது முக்யபிராணரின் அந்தர்யாமியான ஸ்ரீஹரி நமது வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக மாற்றி அருளுவார்.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தில் முக்யப்ராணரைக் குறித்து ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருப்பது என்ன?**

ப: உத்யத்ரவி ப்ரகரசன்னிப மச்யுதாங்கே
ஸ்வாஸீனமஸ்ய நுதிநித்ய வச: ப்ரவ்ருத்திம் ।
த்யாயேத் கதாபயகரம் ஸுக்ருதாஞ்சலிம் தம்
ப்ராணம் யதேஷ்டதனுமுன்னத கர்மசக்திம் ॥

உதயசூரியனைப் போன்ற ஒளியைக் கொண்டவர், ஸ்ரீஹரியின் தொடையின் மேல் அமர்ந்து எப்போதும் அவரைப் பற்றி துதித்துக் கொண்டிருப்பவர். ஒரு கையில் கதை, இன்னொரு கையில் அபய முத்திரையை தரித்து, இன்னும் இரு கைகளை ஸ்ரீஹரியை நோக்கி கும்பிட்டவாறு இருக்கிறார். நினைத்ததை நடத்தி முடிப்பவரான ப்ராணதேவரை தியானிப்போம்.

***

# ஹனுமந்ததேவர்

**கே: ஹனுமந்ததேவரின் தாய் மற்றும் தந்தை?**

ப: தந்தை கேசரி. தாய் அஞ்சனா.

**கே: முக்யப்ராணரையே மகனாகப் பெற வேண்டுமெனில், இவர்களது தவவலிமை எத்தகையது?**

ப: ஆம். வாயுதேவரே உனக்குப் பிறக்கட்டும் என்று பரத்வாஜர் முதலான முனிவர்கள், கேசரிக்கு வரமளித்தனர். அஞ்சனாதேவியும்கூட வாயுதேவரே வாரிசாகக் கிடைக்கவேண்டும் என்று தவம் செய்தார். இதன் பலனே ஹனுமந்ததேவர்.

**கே: பரத்வாஜ முனிவர், கேசரிக்கு எதற்காக வரம் அளித்தார்?**

ப: ஒருமுறை ஒரு அசுரன், யானை ரூபத்தில் பரத்வாஜ முனிவரைக் கொல்வதற்காக வந்தான். அப்போது கேசரி கபியானது, ஒரு சிங்கத்தைப் போல் வீரத்துடன் அந்த யானையைக் கொன்றது. இதனால் மகிழ்ந்த பரத்வாஜ முனிவர், 'முக்யபிராணனே உனக்கு மகனாகப் பிறக்கட்டும்' என்று வரம் அளித்தார்.

**கே: கேசரி மற்றும் அஞ்சனா எங்கே வசித்திருந்தனர்? ஹனுமந்ததேவர் பிறந்த இடம் எது?**

ப: 'சூர்யதத்தவர: ஸ்வர்ண: ஸுமேர்ருநாம பர்வத: | தத்ர ராஜ்யம் ப்ரஷாஸ்த்ருஸ்ய கேசரி நாம வை பிதா'. தங்கமயமான மேருபர்வதத்தில் சூரியனிடமிருந்து வரம் பெற்று, ஹனுமந்தனின் தந்தையான கேசரி அரசாட்சி புரிந்துவந்தார். இவரின் மனைவியே அஞ்சனா. ராமாயணத்தில் வரும் இந்த ஆதாரத்தின் அடிப்படையில், மேருபர்வதமே இவர்களது வசிப்பிடமாகவும், ஹனுமந்ததேவர் பிறந்ததும் மேருபர்வதத்திலேயே என்பதும் தெரியவருகிறது. ஆனால், பவிஷ்யோத்தர புராணத்தில், ஹனுமந்ததேவர் வேங்கடாசலத்தில் அவதரித்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வேறுபாட்டினை கல்ப-பேதம் என்று தெரிந்துகொள்ளவேண்டும்.

**கே: ஹனுமந்ததேவர் பிறந்தது எப்படி?**

ப: ஒரு முறை அஞ்சனாதேவி ருதுஸ்நானம் முடித்தவராக தோட்டத்தில் இருந்தபோது, மிகவும் அழகான முக்யப்ராணனைக் கண்டார். அப்போது முக்யபிராணர் அவரை ஆலிங்கனம் செய்தபோது, அவர் கர்ப்பவதியானார்.

**கே: ருஜுஸ்ரேஷ்டரான முக்யபிராணர், மற்றவரின் மனைவியான அஞ்சனாதேவியை சுகித்தாரா?**

ப: ஒவ்வொரு சாதகரும் கண்டிப்பாக தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம் இது. ஸ்ரீஹரி மற்றும் ருஜுகணஸ்தர்கள் - மற்ற பெண்டிரை சங்கமிக்க வாய்ப்பே இல்லை. அப்படி சங்கமித்த கதைகள் ஏதேனும் புராணத்தில் படித்தோமென்றால், அங்கே லட்சுமிதேவியின் மற்றும் பாரதிதேவியின் சன்னிதானம் இருந்ததாக அறிந்துகொள்ளவேண்டும். இங்கே, அஞ்சனாதேவியிடம், பாரதிதேவியின் ஆவேசம் இருந்தது. ஆகையினாலேயே 'சம்ஸ்பர்ஷனம் நஸ்தவ தேவி பூத்யை' என்னும் ஸ்லோகத்தில் 'தேவி' என்று அழைக்கப்படுகிறார். தேவி என்னும் சொல்லிற்கு பாரதிதேவி என்பதே நிஜமான பொருள். வெறும் பார்த்த மட்டிலேயே அஞ்சனாதேவியின் கர்ப்பத்தில் புகுந்தார் என்று பவிஷ்யோத்தர புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியிருந்தாலும், பாரதிதேவியின் சன்னிதானம் இல்லாதிருந்தால், முக்யபிராணதேவர் எந்த வழியிலும் அவரின் சங்கமத்தை செய்திருக்கமுடியாது.

**கே: 'யோ வை சைகாதஷோ ருத்ரோ ஹனுமான் ஸ: மஹாகபி: அவர்தீண: ஸஹாயார்தம் விஷ்ணோரமிததேஜஸ:' - ஸ்காந்த புராணத்தின் இந்த வாக்கியத்தின்படி பதினோறாவது ருத்ரனே ஹனுமந்தனாகி அவதரித்தார் என்று சொல்லப்படுகிறது. இப்படியிருக்கும்போது வாயுதேவரே ஹனுமந்தன் என்று எப்படி சொல்லமுடியும்?**

ப: அசுர-மோகனத்திற்காக புராணங்களில் இப்படிப்பட்ட வாக்கியங்கள் சொல்லப்படுகின்றன. இதிலிருந்து ஹனுமந்ததேவரை, ருத்ரரின் அவதாரம் என்று புரிந்துகொள்ளக்கூடாது. வாயுவே ஹனுமந்ததேவராக அவதரித்திருக்கிறார் என்று இந்த ஸ்லோகத்திற்கு பொருள் கொள்ளவேண்டும்.

**கே: ஹனுமந்ததேவர் எப்படி பிறந்தார்?**

ப: ஸ்ரீகிருஷ்ணன் எப்படி சகல ஆபரணங்களுடன் வசுதேவ - தேவகிக்குப் பிறந்தாரோ, அப்படியே ஹனுமந்ததேவரும் சகலாபரணங்களை தரித்துக்கொண்டு அவதரித்தார். பிறக்கும்போதே பூணூலையும் அணிந்திருந்தார். ஹனுமத்விலாசத்தில் இந்த விஷயத்தை மிகவும் விவரமாக, சுவாரசியமாக தெரிவித்திருக்கின்றனர். அவர் அணிந்திருந்த ஆபரணங்கள் யாருக்கும் புலப்படவில்லை. முதன்முதலில் அதைக் கண்டவர் ஸ்ரீராமர். ஆகையால் ஸ்ரீராமரையே அவரது தெய்வமாக ஹனுமந்ததேவர் ஸ்வீகரித்தார்.

**கே: வாலி-சுக்ரீவர் இருவரும் ஹனுமந்ததேவரின் தாய்-மாமன் என்கிறார்கள். இது எப்படி?**

ப: இதற்கு ஒரு சுவாரசியமான கதை உண்டு. பிரம்மதேவரின் கண்ணீரிலிருந்து ஒரு வானரன் பிறந்தான். மேரு பர்வதத்தில் இருந்த ஒரு ஏரியை அந்த வானரன் கண்டான். அந்த நீரில் தன்னுடைய பிரதிபலிப்பைக் கண்டான். அந்த ஏரியில் குளிக்க இறங்கியபோது, அந்த ஏரியின் மகிமையால் ஒரு அழகான பெண்ணாக மாறிவிட்டான். அந்தப் பெண் மேல் இந்திரன் ஆசைப்பட்டான். ஆதித்யனும் ஆசைப்பட்டான். இந்திரனின் வீர்யம், அந்தப் பெண்ணின் தலைமுடியில் விழுந்து, அங்கு வாலி பிறந்தான். (வால = முடி). சூரியனின் வீர்யம் கழுத்தில் விழுந்து சுக்ரீவன் பிறந்தான். மறுபடி அதே ஏரியில் குளித்தபோது, பெண் ரூபம் மறைந்து வானரனே ஆனான்.

இவனே 'ருக்ஷரஜஸ்' என்னும் அரசன் ஆவான். இவனுக்கும், இவனின் மனைவிக்கும் பிறந்தவரே அஞ்சனாதேவி. ஆகையால், வாலி சுக்ரீவர்கள் அஞ்சனாதேவியின் அண்ணன்கள் ஆவர். ஹனுமந்ததேவருக்கு இவர்கள் தாய்-மாமன் ஆவர். இந்தக் கதை ராமாயணத்தில், உத்தர காண்டத்தில் வருகிறது. ராமாயணத்திற்கு தமிழில் உரை எழுதியிருக்கும் ஸ்ரீனிவாச ஐயங்கார் என்பவர், இந்தக் கதை நடுவில் சொருகப்பட்ட ஒன்று என்று சொல்கிறார். மேலும் பல உரை ஆசிரியர்களும் அப்படியே சொல்கின்றனர்.

**கே: மார்கசிர மாதம் பௌர்ணமியன்று ஹனுமந்ததேவர் அவதரித்தார் அல்லவா?**

ப: இல்லை. சைத்ர மாதம் பௌர்ணமியன்றே ஹனுமந்ததேவர், அஞ்சனாதேவியிடம் அவதரித்தார். மார்கசிர பௌர்ணமியன்று தர்மராஜர் ஆகியோர் ஹனுமத் விரதத்தை அனுஷ்டித்தனர். ஹனுமத் விரதத்தையே சிலர் தவறாக ஹனுமத்ஜெயந்தி என்று நினைத்து அன்றே ஹனுமத்ஜெயந்தியை கொண்டாடுகின்றனர். ஆனால் புராணங்கள் மிகத் தெளிவாக சைத்ர பௌர்ணமியே ஹனுமத் ஜெயந்தி என்று சொல்கின்றன.

**கே: பிறந்த உடனேயே ஹனுமந்ததேவர் சூரியனைத் தின்பதற்காக வானத்தில் தாவினார். இது என்ன விளையாட்டு?**

ப: உதயசூரியனை ஒரு பழம் என்று எண்ணி ஹனுமந்ததேவர் வானத்தில் தாவினார் என்று தவறாக புரிந்துகொள்பவரே தவறானவர். ராகு-கிரகணத்திலிருந்து சூரியனைக் காப்பாற்றுவதற்காக ஹனுமந்ததேவர் வானில் தாவினாரே தவிர, பழம் என்று நினைத்து அதை தின்பதற்காக அல்ல. ஏனென்றால் பௌர்ணமியன்று சூரியகிரகணம் நடைபெறுவதே இல்லை. அது நடைபெறுவது அமாவாசை தினத்தில். ஆகவே, பிறந்த சில நாட்களில் வந்த அமாவாசையன்று நடந்த சூரியகிரகணத்தன்று இந்த சம்பவம் நடந்தது என்று வால்மிகி ராமாயணத்தில் மிகத் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: ஹனுமந்ததேவர் சூரியமண்டலத்திற்கு தாவியபோது, இந்திரன் ஏன் கோபம்கொண்டு அவரை தாக்கினான்?**

ப: சூரியனை விழுங்குவதற்காக வந்த ராகுவை அழிப்பதற்காக ஹனுமந்ததேவர் வானத்தில் தாவினார். துஷ்ட காரியங்களை இவர் எப்போதும் சகிப்பதில்லை. அப்போது ராகு இந்திரனை சரணடைந்தான். அப்போது இந்திரன் வஜ்ராயுதத்தை பிரயோகித்தான். வஜ்ராயுதத்திற்கு மரியாதை கொடுப்பதற்காக மற்றும் பெரியவர்களுக்கு மரியாதை செய்யத் தவறினால் எப்படி பாவம் வந்து சேரும் என்பதை அனைவருக்கும் தெரிவிப்பதற்காக, ஹனுமந்ததேவர் கீழே விழுந்ததைப் போல் நாடகமாடினார். தன் மகன் மேல் வஜ்ராயுதம் பிரயோகித்ததைக் கண்டு வாயுதேவர் அதிர்ச்சியடைந்தார். உலகமே ஸ்தம்பித்தது. தேவதைகள் அனைவரும் பிரம்மனை சரணடைந்தனர். பாவத்தை செய்தவன் அதற்கான பலனை அனுபவிப்பான் என்பதற்கு இந்தக் கதையே உதாரணமாயிற்று.

இந்திரன் செய்த பாவத்திற்கு மொத்த உலகமே துக்கத்தை அனுபவித்தது. உலகமே அழிந்துபோகும் நிலை வந்தது. தேவேந்திரனின் இந்த செயலைக் கண்ட பிரம்மனும் வருத்தமடைந்தார். பின் இந்திரனைக் கண்டு கடும் கோபத்தில் - முக்யபிராணதேவரே ஜீவோத்தமராக இருக்கிறார். இவர் யாருக்கும் அடிமை இல்லை. உபநிஷத்களால் வணங்கப்படுபவராக இருக்கிறார் - என்றார். இப்படி பிராணதேவரை துதித்து, அவரைக் கைப்பிடித்து மேல் எழுப்பினார். பிறகே மொத்த உலகமும் சகஜ நிலைக்குத் திரும்பியது.

**கே: 'ததோ கிரௌ பபாதேஷ இந்த்ரவஜ்ராபிதாதித: | பவமானஸ்ய சேதஸ்ய வாயோ ஹனுரபஜ்யத' என்று வால்மிகி ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்திரன் வஜ்ராயுதத்தால் அடித்ததால், ஹனுமந்ததேவரின் இடது தாடை (ஹனு) உடைந்தது என்று இதன் பொருள். இதனாலேயே இவர் ஹனுமான் என்று அழைக்கப்பட்டார் அல்லவா?**

ப: இந்த ஸ்லோகத்திற்கு, நிர்ணயபாவசந்திரிகையில் கோவிந்தாசார்யர் மிகவும் அழகாக உரை எழுதியிருக்கிறார். 'அபஜ்யத?' என்பது கேலியாக கேட்கப்பட்ட கேள்வி. 'ஹனுவை (தாடையை) உடைக்கவில்லை' என்பதே இந்த ஸ்லோகத்தின் உள்ளர்த்தம். ஆகவே, சங்க்ரஹ ராமாயணத்தில் 'பங்கே ப்ரஸக்தேடபி ந பங்கமாப ஹனு: ஷிஷோர்யத்தனுமானதோடயம்', உடையும் நிலையில் அந்த குழந்தையின் தாடை இருந்தாலும், அது உடையவில்லை. ஆகையால் இவர் ஹனுமான் என்று பெயர் பெறட்டும் என்று தேவேந்திரன் தானே சொல்லி, ஹனுமந்ததேவரின் கழுத்தில் ஒரு அழகிய மாலையை சமர்ப்பித்தான்.

**கே: ஹனுமான் என்றால்?**

ப: 'ஹனு' என்றால் இம்சை - தன்னை எதிர்ப்பவர்களுக்கு இம்சையைக் கொடுப்பவன் என்று பொருள். 'ஹனு' என்றால் 'கதி' என்று பொருள் கொண்டால்

யாராலும் தடை செய்யப்பட முடியாதவன் என்றும் காற்றின் மூலமாக எல்லா இடங்களுக்கும் பயணிப்பவன் என்றும் பொருள் வரும். 'ஹனு' என்றால் 'ஞானம்' என்று பொருள் கொண்டால் என்றும் அழியாத உண்மையான ஞானத்தைப் பெற்றவன் என்று பொருள் வரும். துஷ்டர்களுக்கு இம்சை, சஜ்ஜனர்களுக்கு ஞானம் கொடுப்பவன் என்றும்கூட இந்தப் பெயரின் பொருள் ஆகும்.

**கே: ஹனுமந்ததேவரின் குரு யார்?**

ப: சூரியனே ஹனுமந்ததேவரின் குரு. ஸ்ரீகிருஷ்ணனுக்கு சாந்திபினி முனிவர் எப்படி குருவாக இருந்தாரோ, அப்படி சூர்யனின் அந்தர்யாமியாக இருந்த நாராயணனே இவரின் குருவாக இருந்தார்.

**கே: சூரியனிடம் ஹனுமந்ததேவர் எப்படி பாடம் படித்தார் என்பதற்கு விவரங்கள் இருக்கின்றதா?**

ப: மத்வநாமாவில் ஸ்ரீபாதராயர், 'தரணிகபி முகவாகி ஷப்த சாஸ்த்ரவ படிஸி' என்று விவரித்திருக்கிறார். சூரியனைப் பார்த்தவாறு, ஹனுமந்ததேவர் வியாகரண சாஸ்திரத்தை படித்தார் என்பதே மிகவும் சுவாரசியமான தகவல். சூரியன் முன்னேறி வரும்போது, அவனைவிட வேகமாக பின்னோக்கி நகர்ந்து போனார். இதனால் வேகத்தில் மட்டுமல்ல, நற்குணங்களிலும் ஹனுமந்ததேவர் சூரியனைவிட உத்தமமானவர் என்று நிர்ணயம் ஆகிறது. சூரியனில் அந்தர்யாமியாக இருக்கும் நாராயணனையே குருவாக ஸ்வீகரித்து, மகாவியாகரண முதலான சாஸ்திரங்களை தினமும் இன்றும்கூட கேட்டவாறே இருக்கிறார். சூரியநாராயணனிடம் பாடம் கேட்டுக்கொண்டிருக்கும் ஹனுமந்ததேவரின் இந்த காட்சியை, காயத்ரி மந்திரம் ஜெபிக்கும் நேரத்தில் கண்டிப்பாக நாம் நினைக்க வேண்டும்.

**கே: ஹனுமத்விலாஸ என்னும் கிருதியை இயற்றியவர் யார்?**

ப: இதை இயற்றியவர் திம்மண்ணதாசர். ஒரு சமயம் அவர் சிறையில் அடைபட்டிருந்தார். அப்போது ஹனுமந்ததேவரின் அருளால் அங்கேயே இந்த கிருதியை இயற்றினார். இதில் மிகவும் அபூர்வமான பல விஷயங்கள் உள்ளன. அப்படியே இதில் உள்ள தாளங்களும்கூட அபூர்வமானவையே.

**கே: தாசர்களின் க்ருதிகளில், ஹனுமந்ததேவரைப் பற்றி தெரிந்துகொள்ள வேண்டுமெனில், எதைப் படிக்கவேண்டும்?**

ப: ஸ்ரீபாதராஜர் மத்வநாமாவை இயற்றியிருக்கிறார். சாதகர்கள் இதை தினந்தோறும் படிக்கும் வழக்கத்தைக் கொள்ளவேண்டும். எந்தப் பெண், மத்வநாமாவை படிக்காமல் உண்கிறாரோ, அவர் சந்தியாவந்தனம் செய்யாமல் உண்ணும் ஆணுக்கு சமமானவர் என்று சொல்லும் வழக்கம் நம்மிடையே உள்ளது. ஸ்ரீவாதிராஜ குருசார்வபௌமர் 'சுவ்வீ ஹனுமந்த' என்று துவங்கும்

மத்வசுவ்வாலியில் மிகவும் அபூர்வமான தகவல்களை சொல்லியிருக்கிறார். 'கரவமுகித முக்யபிராண' என்று ஹனுமந்ததேவரை நினைப்பதற்கான பல பாடல்களும் உள்ளன.

**கே: மத்வநாமாவைப் படித்தால் என்ன பலன்?**

ப: ஸ்ரீபாதராஜர் மத்வநாமாவை இயற்றினால், அதற்கு ஸ்ரீஜகன்னாததாசர் பலஸ்ருதியை இயற்றியிருக்கிறார். சூரியகிரகண காலத்தில், தங்க ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட, ஆயிரம் பசுக்களை தானம் கொடுத்தால் எவ்வளவு பலன் கிடைக்குமோ அவ்வளவு பலன் மத்வநாமாவை படித்தால் கிடைக்கும். ஆகையால், மத்வநாமாவைப் படித்து மிகப்பெரிய பலன்களைப் பெறுவோமாக.

**கே: மூலரூபத்தில் இருக்கும் சக்தி, வலிமையானது ஹனுமன் முதலான அவதாரங்களில் இருப்பதில்லை என்று சிலர் சொல்கின்றனர். இது சரியா?**

ப: இந்தக் கேள்விக்கு பளித்தா சூக்தமே பதிலாகும். மூலரூபத்தில் எவ்வளவு ஞானம் மற்றும் சக்தி இருக்கின்றதோ, அவை அனைத்தும் அப்படியே அவதாரங்களிலும் இருக்கிறது. இதில் எள்ளளவும் சந்தேகமில்லை என்று அதில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: ஹனும பீம மத்வ அவதாரங்களில், ஞானம் மற்றும் சக்தி படிப்படியாக குறைந்து வந்துள்ளது என்று சிலர் கூறுகின்றனர். இவர்களின் கதையைப் படித்தாலும், அது உண்மையாக இருக்குமோ என்று நமக்குத் தோன்றுகிறது. இதற்கு என்ன பதில்?**

ப: 'ஹனுமதாத்யவதாரகள பேதகள திளிவவ தனுஜ கோராந்ததமஸ்ஸிகே யோக்யனு ந ஸம்சய' என்று ஹரிகதாம்ருதசாரத்தில் ஸ்ரீஜகன்னாததாசர் சொல்லியவாறு ஹனும பீம மத்வ இந்த அவதாரங்களில் யார் ஞான, சக்திகளில் வேறுபாடு இருக்கிறது என்று நினைக்கிறாரோ, அவர் தமோயோக்யனாகிறார்.

**கே: அப்படியென்றால் ஹனுமந்தனின் வாலைத் தூக்குவதற்கு பீமசேனதேவரால் ஏன் முடியவில்லை?**

ப: சௌகந்திகா புஷ்பத்தைக் கொண்டு வரச்சென்றபோது, பீமசேனதேவரால் ஹனுமனின் வாலை தூக்கமுடியவில்லை என்னும் கதை மகாபாரதத்தில் உள்ளது. ஆனால், இது ஒரு நாடகம் என்றே தெரிந்துகொள்ள வேண்டும். இதையே 'க்ரீடாமாத்ரம்' என்று வாயுஸ்துதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: ஆனாலும், ஹனுமந்ததேவரில் காணப்பட்ட சக்தி பீமசேனதேவரிடம் காணப்படவில்லை. பீமசேனதேவரிடம் காணப்பட்ட சக்தி மத்வரிடத்தில் காணப்படவில்லை. இதற்கு என்ன காரணம்?**

ப: மூலரூபத்தில் காணப்பட்ட ஞானம் மற்றும் சக்தியை, வாயுதேவர் தனது அனைத்து அவதாரங்களிலும் அப்படியே கொண்டுவரும் சாமர்த்தியம் உள்ளவர். ஆனால் அதை வெளிக்காட்டிக் கொள்வதில்லை. ஹனுமந்தனின் அவதாரத்தில் எவ்வளவு சக்தியை வெளிப்படுத்தினாரோ, அதை பீமசேன அவதாரத்தில் காட்டவில்லை. பீமசேனதேவராக காட்டிய சக்தியை, மத்வராக வெளிப்படுத்தவில்லை. இப்படி சக்தியை வெளிக்காட்டுவதில் வேறுபாடு இருக்கலாமே தவிர, அவர்களிடம் இருந்த சக்தியில் எந்தவித வேறுபாடும் இருக்கவில்லை.

**கே: அப்படியென்றால் இந்திராதி தேவர்களின் அவதாரங்களும் இதேபோல்தானா?**

ப: ருத்ர, இந்திர ஆகிய தேவர்கள் அவதரிக்கும்போது, மூலரூபத்தில் இருக்கும் ஞான, சக்திகள் அப்படியே அவதாரங்களிலும் கொண்டு வருவதற்கு சாத்தியம் இல்லை. மூலரூபத்தைப் பற்றிய சிந்தனையும் அவர்களுக்கு எப்போதும் இருக்கும் என்று விதி இல்லை. ஆனால், ருஜுஜீவிகள் அவதரிக்கும்போது அவர்களின் மூலரூபத்தைப் பற்றிய சிந்தனை அவர்களுக்கு எப்போதும் இருக்கிறது. மூலரூபத்தில் இருக்கும் ஞான, சக்திகளையும் அப்படியே பெற்றுக்கொள்வதில் சாமர்த்தியம் உள்ளவர்களாக இருக்கின்றனர்.

**கே: ஜராசந்தனை பீமசேனதேவர் கொல்லும்போது, தம்மிடம் இருந்த சக்தி போதாமல், தன்னுடைய மூலரூபத்திலிருந்து சக்தியை கொண்டுவந்து அதை பயன்படுத்தினார் என்று சிலர் சொல்கின்றனர். இது சரியா?**

ப: சிலர் இப்படி சொல்கின்றனர். ஆனால் இதற்கு ஏதும் ஆதாரம் இல்லை. லட்சுமணன் இந்திரஜித்துடன் போர் புரிந்தபோது தன் மூலரூபத்தை நினைத்தார் என்பதற்கு ஆதாரம் உள்ளதைப்போல், ஜராசந்தனுடன் போர் புரிந்தபோது பீமசேனர் தன்னுடைய மூலரூபத்தை நினைத்தார் என்பதற்கு எந்தவித ஆதாரமும் இல்லை. ‘இச்சாவ்யக்தி: ப்ராயஷோ மாருதஸ்ய’ என்னும் வசனத்தில் சொல்லியவாறு, தம்மிடம் இருந்த அதிக சக்தியை அந்த சந்தர்ப்பத்தில் வெளிப்படுத்தினார் என்று மட்டுமே தெரியவேண்டும்.

**கே: ஸ்ரீராமனை ஹனுமந்ததேவர் முதன்முதலில் பார்த்தபோது அவர் சன்யாசியாக இருந்தார் என்று சொல்கின்றனர். இது எப்படி?**

ப: ’ஸ பிக்ஷுவேஷோ ஹனுமான் ஸ்வவேஷம் விஹாய விஷ்வேஸ்வர பார்ஷ்வமாப்ய’ என்று சங்க்ரஹ ராமாயணத்தில் இவரைப் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. ஹனுமந்ததேவர் தனது நிஜமான ரூபத்தை விட்டு ஒரு வறியவரைப் போல் வேடமிட்டு, ஸ்ரீராமனின் பாதங்களில் சாஷ்டாங்கமாக வணங்கினார் என்று தெரிகிறது. ஸ்ரீஹரியிடம் நாமும் அனைத்தையும் தியாகம் செய்து, அவர் பாதங்களைப் பற்றவேண்டும். அப்படியே ஹனுமந்ததேவரும்

தன்னிடமிருந்த அனைத்தையும் தியாகம் செய்து, ஒரு துறவியைப் போல் வேடமிட்டு, தன்னை ஸ்ரீராமனிடம் சமர்ப்பணம் செய்தார் என்று தெரியவருகிறது. 'சதா சமஸ்தஸ்ரமபாக் ஸுரேஷ்வரோ விசேஷதோ கல்ப பஜத்வராஷ்ரமம்' என்பதற்கேற்ப இவர் எப்போதும் தன்னுடைய தர்மத்தை விடாமல் பின்பற்றிவந்தார். மேலும் த்ரிதண்டி சன்யாசிகள் ஆனார் என்றும் தெரியவருகிறது. த்ரிதண்டி சன்யாசிகளுக்கு குடுமி, பூணூல் ஆகியவை இருக்கும்.

**கே: சன்யாசிகள், கிருஹஸ்தர்களை வணங்கக்கூடாதல்லவா?**

ப: மேற்சொன்ன பதிலின்படி, ஹனுமந்ததேவர் சன்யாச ஆசிரமத்தை தரிக்கவில்லை, வெறும் சன்யாசியாக வேஷமிட்டுக் கொண்டார் என்றே தெரியவேண்டும். மேலும் அர்ஜுனன், த்ரிதண்டி சன்யாசி வேஷத்தை தரித்தபோது, அவனைவிட குணத்தில் பெரியவரான பலராமனை வணங்கியதைப் போல, இங்கேயும் ஸ்ரீராமன் தன்னைவிட அனைத்திலும் உத்தமர் என்பதால் ஹனுமந்ததேவர் ஸ்ரீராமனை வணங்கினார்.

**கே: ஸ்ரீராமனை முதன்முதலில் கண்டபோது சுக்ரீவன் ஏன் பயந்து ஓடினான்?**

சுக்ரீவன் மட்டுமல்ல வேறு யாராலும் ஸ்ரீஹரியை நேரில் காண்பதற்கு சாத்தியம் இல்லை. வாயுதேவரின் மூலமாகவே அவரைக் காண்பது சாத்தியம். ஆகையால், ஹனுமந்ததேவரே சுக்ரீவனை அழைத்துப் போய், ஸ்ரீராமனை சந்திக்க வைத்து, அவர்களிடையே நட்பு உண்டாக்கினார்.

**கே: ஸ்ரீராமன், ஹனுமந்ததேவரை முதன்முதலில் பார்த்தபோது எப்படிப் புகழ்ந்து பேசினார்?**

ப: ' ந ரிக்வேத வினீதஸ்ய ந யஜுர்வேததாரிண: ந சாமவேதவிதுஷ: ஷக்யமேவம் ப்ரபாஷிதும் நூனம் வ்யாகரணம் க்ருத்ஸ்னம் அனேன பஹுதாஷ்ருதம்'. ரிக்வேத, யஜுர்வேத, சாமவேத இவற்றை அத்யயனம் செய்தவர்களாலும் இவ்வளவு தெளிவாக பேசமுடியாது. வியாகரணத்தை பலமுறை இவன் படித்திருக்கிறான். இவனின் பேச்சில் ஒரே ஒரு தவறான் சொல்லும் கிடையாது. இவனது உடலில் எந்தவொரு தோஷமும் இல்லை. இவனது ஆபரணங்களும் இவனுடனேயே பிறந்தன. இப்படியாக ஸ்ரீராமன், ஹனுமந்தனைப் பற்றி புகழ்ந்து பேசினார்.

**கே: ஹனுமந்ததேவருக்கு சமம் என்று வேறு யாருமே இல்லையென்றாலும், அவரின் பலம் அவருக்கே தெரியாதவாறு முனிவர்கள் அவருக்கு சாபம் கொடுத்திருந்தனர் என்று பகஸ்த்ய ரிஷிகள் ஸ்ரீராமனிடம் சொல்கிறார். இது எப்படி சாத்தியம்?**

'அமோகஷாப்யை: ஷாபஸ்து தத்தோடஸ்ய முனிபி: புரா |
ந வேத்தா ஹி பலம் ஸர்வம் பலே ஸன்னரிமர்தன: ||'

ப: ஆம். ராமாயணத்தில் இப்படி சொல்லியிருக்கின்றனர். ஹனுமந்தன் அவ்வப்போது ரிஷிகளின் ஆசிரமத்தில் புகுந்து, அங்கிருந்த யக்ஞ பாத்திரங்களையும், மற்ற பொருட்களையும் சேதப்படுத்திக் கொண்டிருந்தார். இதனை சகிக்காத ப்ருகு, அங்கிரஸ முதலான ரிஷிகள் அவருக்கு கீழ்க்கண்டவாறு சாபம் கொடுத்தனர்.

பாதஸே யத்ஸ்மாஷ்ரத்ய பலமஸ்மான் ப்லவங்கம ।
தத்தீர்ககால வேத்தாஸி நாஸ்மாகம் ஷாபமோஹித: ।
யதா தே ஸ்மார்யதே கீர்த்தி: ததா தே வர்ததே பலம் ॥

ஏ கபியே, உன் சக்தியின் கர்வத்தில் எனக்கு தொந்திரவைக் கொடுக்கிறாய். இனி உன் சக்தியைப் பற்றிய அறிவே உனக்கு இல்லாமல் போகட்டும். யாராவது உனக்கு நினைவுபடுத்தினால் மட்டுமே உன் சக்தியைப் பற்றி உனக்கு தெரியட்டும் - என்று சாபமிட்டனர் என்ற கதை பிரபலமாக உள்ளது. ஆனால் இது வெறும் அலங்காரத்திற்காக எழுதப்பட்ட கதையாகும். இதையே உண்மை என்று அறியக்கூடாது. ராமாயணத்தில் ஆங்காங்கே இத்தகைய அலங்காரங்களை பயன்படுத்தியுள்ளனர்.

**கே: இதனை உண்மையான கதை இல்லை என்று சொன்னால், வாலி-சுக்ரீவர்கள் அடிக்கடி போர் புரிந்தபோது, ஹனுமந்தன் ஏன் அவர்களை தடுக்கவில்லை? மேலும் 'ரிஷிசாப ஹ்ருதபலஸ் ததைவ கபிஸத்தம: । ஸிம்ஹ: குஞ்சரருத்தோ வா ஆஸ்தித: ஸஹிதோ ரணே ॥' என்று முனிவர்களின் சாபத்தினால் ஹனுமந்தன் தன் சக்தியை உணரவில்லை. யானையின் எதிரில் சிங்கம் அமைதியாக இருப்பதைப்போல வாலி-சுக்ரீவரின் போரின்போது அமைதியாக நின்றிருந்தார் என்று ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே. இது எப்படி?**

ப: இதையுமே அலங்காரத்திற்காக எழுதப்பட்ட கதையென்றே அறியவேண்டும். ஸ்ரீராமனின் விருப்பத்தை அறிந்துகொண்டு ஹனுமந்தன் அமைதியாக இருந்தார். மேலும் ஸ்ரீராமனின் மூலமாக இவர்கள் இருவரின் போர் முடியவேண்டும் என்று தெரிந்ததாலேயே அமைதியாக இருந்தார். அவருக்கு போரை நிறுத்தக்கூடிய சாமர்த்தியம் இல்லை என்பதால் அல்ல.

**கே: இவற்றையெல்லாம் உண்மையான கதை அல்ல என்று சொல்லிவிட்டால், முனிவர்கள் கொடுத்த சாபம் வீணாகிப் போனதா?**

ப: முக்யபிராணதேவரை உபநிஷத்கள் 'ஆகணாஷ்மசம' என்று வர்ணிக்கின்றன. ஹனுமந்தனை யாருடைய சாபமும் பாதிப்பதில்லை. யார் கொடுக்கும் வரமும் பாதிப்பதில்லை. இப்படி சொல்லியதால், வரமோ சாபமோ, அது வீண் ஆவதில்லை. சாபம் கொடுத்தவர்களுக்கு அவர்களுடைய தவவலிமை குறைகிறது.

இதனாலேயே, புராணங்களில் வரம் அல்லது சாபம் கொடுக்கிறார்கள் என்று அறியவேண்டும்.

**கே: ஹனுமந்தருக்கு பற்பல வரங்களும் கிடைத்திருக்கின்றன. அவை அனைத்தும் வீணே என்று எப்படி சொல்ல முடியும்?**

ப: ஆம். சூர்ய, வருண, யம, குபேர, ருத்ர முதலான பல தேவதைகள் மற்றும் ரிஷிமுனிவர்கள், ஹனுமந்தருக்கு வரங்களை அளித்துள்ளனர். அந்த வரங்களால் ஹனுமந்தருக்கு எவ்வித பிரயோஜனமும் இல்லை. கோடீஸ்வரருக்கு சில சில்லறைகளைக் கொடுத்ததுபோல் அவை அனைத்தும் வீணே. ஸ்ரீஹரி மற்றும் லட்சுமிதேவி இவர்கள் இருவரும் கொடுத்த வரங்கள் மட்டுமே ஹனுமந்தரின் சிறப்புக்குக் காரணமாக இருக்கின்றன. மற்றவர்களின் வரங்கள், அவரவர்களின் நன்றிக்குக் கொடுக்கப்பட்ட ஒரு பரிசு எனலாம்.

**கே: முக்யபிராணரின் அவதாரமான ஹனுமந்தர், லங்கா பட்டணத்தில் நுழைந்தபோது இரவு நேரத்தில் பல பெண்களை நிர்வாண கோலத்தில் கண்டார். இந்த சம்பவத்தைப் பார்த்தால், ஹனுமந்ததேவருக்கு அஞ்ஞானம் மற்றும் விபரீதஞானம் (தவறான அறிவு) இருந்ததென்று தெரிகிறதா?**

ப: ஹனுமந்ததேவருக்கு ஒரு நொடிகூட அஞ்ஞானம், விபரீதஞானம் வருவதற்கு சாத்தியமே இல்லை. இதெல்லாம் வெறும் கற்பனை என்று அறியவேண்டும்.

**கே: மண்டோதரியைப் பார்த்து சீதை என்று நினைக்கிறார். பிறகு சீதையின் பாதங்களில் இருக்கவேண்டிய தாமரை முதலான சின்னங்கள் இவருக்கு இல்லை என்பதால் இவர் சீதை இல்லை என்று தீர்மானிக்கிறார். மண்டோதரியை தவறாக சீதை என்று நினைத்த பாவம் போவதற்காக ஆயிரம் கோ-தானங்களை செய்கிறார் என்று ஸ்ரீவாதிராஜர் மத்வசுவ்வாலியில் தெரிவிக்கிறார். அவரது தவறான ஞானம் இல்லையென்றால், இதெல்லாம் எதற்கு செய்ய வேண்டும்?**

ப: இதுவும்கூட ஒரு கற்பனை / அலங்காரம் என்று அறியவேண்டுமே தவிர உண்மையல்ல. சீதை எப்படிப்பட்டவர்? அவரது ஸ்வரூபம் எத்தகையது? இதைப்பற்றிய முழுமையான ஞானம் வாயுதேவருக்கு கண்டிப்பாக இருக்கிறது. அவர் செய்த ஒரு அலங்காரத்தை வாதிராஜரும் சுவ்வாலியில் அப்படியே மேற்கோள் காட்டியிருக்கிறார்.

**கே: லங்கா பட்டணத்தை நெருப்பால் சுடமுடியாது. வேறு எந்த விதத்திலும் அழிக்கமுடியாது என்று ஒரு வரம் இருக்கிறது. அப்படியிருக்கும்போது, ஹனுமந்தரின் வாலில் இருக்கும் நெருப்பு அந்நகரத்தை எப்படி சுட முடியும்?**

ப: ராவணன் பற்ற வைத்த நெருப்பு லங்கா பட்டணத்தை சுடுவதற்கு சாத்தியம் இல்லை. ஆகையால் தாத்பர்ய நிர்ணயத்தில் 'அதஹ்யதாஸ்ய தேஜஸா' என்று

தம்மிடம் இருந்த சாமர்த்தியத்தினால் ஹனுமந்தர் லங்கா பட்டணத்தை சுட்டார் என்று அறியவேண்டுமே தவிர, அக்னிதேவதை சுட்டார் என்று அறியக்கூடாது.

**கே: ஹனுமந்ததேவரிடம் நாம் என்னவென்று வேண்ட வேண்டும்?**

ப: விஜய ரகுபதி மெச்சி தரணிஸுதெயளிகேயெ
பஜிஸி மௌக்திகத ஹாரவனெ படெத ।
அஜபதவியனு ராம கொட பரலு ஹனுமந்த
நிஜபகுதியனு பேளி வரவ படெத ॥

பதினோராயிரம் ஆண்டுகள் நல்லாட்சி புரிந்து, இறுதியில் ஸ்ரீராமச்சந்திரன் ஒவ்வொருவருக்கும் அவர்கள் வேண்டியதை வழங்கினார். அப்போது ஹனுமந்தனை ஏதேனும் ஒரு வரம் கேட்கச் சொல்லி பணித்தார். என்ன வேண்டுமோ கேள் என்று சொன்னபோது, ஹனுமந்ததேவர் 'ப்ரவர்த்ததாம் பக்திரலம் க்ஷணே க்ஷணே த்வயீஷ மே ஹ்ராஸ விவர்ஜிதா ஸதா' என்று எப்போதும் உன்னையே நினைக்கும் பக்தி ஒன்றே எனக்கு வேண்டும். இதைத்தவிர வேறு ஆசை எதுவும் எனக்கு இல்லை என்று பிரார்த்தித்தார். ஹனுமந்ததேவரின் இந்த வேண்டுகோளையே நாமும் பின்பற்றி, தற்காலிக சுகங்களைத் தருவனவற்றை வேண்டாமல், பக்தி ஒன்றையே வேண்டுவோமாக.

**கே: ஹனுமந்ததேவரை பூஜிக்க எந்த ஸ்லோகத்தை சொல்லவேண்டும்?**

ப: மஹாவ்யாகரணாம்போதி மந்தமானஸமந்தரம் ।
கவயந்தம் ராமகீர்த்யா ஹனுமந்தம் உபாஸ்மஹே ॥

மஹாவியாகரணம் ஒரு பாற்கடல். ஹனுமந்ததேவரின் மனதே அதைக் கடையும் மந்தாரமலை. ஸ்ரீராமனின் கீர்த்தனையே அதிலிருந்து வெளிவந்த அமிர்தம். இப்படி ராமசரிதாம்ருதத்தை அருளிய ஹனுமந்ததேவரை நிரந்தரமாக பூஜிப்போமாக.

**கே: ஹனுமந்ததேவரின் கதையை சுருக்கமாக சொல்லவும்.**

ப: ஹனுமந்ததேவரின் தலைமையில் கபிகள் சீதையை கண்டுபிடிக்கக் கிளம்பினர். அலைந்து திரிந்ததில் ஏற்பட்ட பசியில் மயக்கம் ஏற்பட்டது. ஒரு பெரிய குகையினைக் கண்டனர். எங்கு தேடினாலும், பழம், நீர் எதுவும் கிடைக்கவில்லை. இந்த குகையிலாவது ஏதேனும் கிடைக்குமா என்று உள்ளே சென்றனர். உள்ளே அவர்களுக்கு ஒரு ஆச்சரியம் காத்திருந்தது. உள்ளே ஒரு பெரிய வனம். காய், பழங்களால் நிரம்பிய ஒரு அழகிய தோட்டம். அங்கு ஒரு அழகிய பெண் இருந்தாள். அனைத்துமே கபிகளின் கண்களுக்கு குளிர்ச்சியாக இருந்தது. அவர்களின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. போன உயிர் திரும்பி வந்ததென்று நினைத்தன. அந்தப் பெண் வேறு யாரும் இல்லை. ஹேமா என்னும் அப்ஸரசின் தோழி ஸ்வயம்ப்ரபை. ஒவ்வொரு கபியையும் அழைத்து உபசரித்தாள். அவளின் உபசரிப்பில் கபிகள் மிகவும் மகிழ்ந்தன.

சிறிது நேரம் கழித்து, சீதாவை தேடும் படலத்திற்காக மறுபடி அங்கிருந்து கிளம்பவேண்டும் என்ற நேரம் வந்தது. அப்போது தாரா என்னும் கபி சொன்னது - 'சீதையை தேடுவது நம்மால் சாத்தியமில்லை. சீதையை கண்டுபிடிக்காவிட்டால் மரணதண்டனையிலிருந்து தப்பமுடியாது. ஆகையால் சிறிது காலம் இங்கேயே தங்கிவிடுவோம். இந்த அழகான தோட்டத்தை விட்டு மறுபடி கிஷ்கிந்தைக்குப் போகவே வேண்டாம்'.

தாராவின் பேச்சைக் கேட்டு, ஜாம்பவந்த, அங்கத போன்ற கபிகள் சரி சரி என்று ஆமோதித்தனர். அப்படியே ஆகட்டும் என்று ஆனந்தக் கூத்தாடினர். ஆனால் ஹனுமந்ததேவர் மட்டும் இதற்கு ஒப்பவில்லை. அனைத்து கபிகளைக் கண்டு ஹனுமன் பேசத் துவங்கினார்.

'நஹி வாயுஸூனு ராமப்ரதீபம் வசனம் ஸஹேத' - ஸ்ரீராமனுக்குப் பிடிக்காத எந்த ஒரு செயலையும் இந்த ஹனுமந்தன் செய்வதில்லை - என்று கர்ஜித்தார். எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் ஸ்ரீராமனின் கட்டளையை / வேலையை ஹனுமன் மறக்கவில்லை. மற்றவர்கள் மறந்தபோது அவர்களை எச்சரிப்பவனும் ஹனுமனே ஆகியிருக்கிறார்.

**கே: ஹனுமந்ததேவரிடம் நாம் என்னவென்று பிரார்த்திக்க வேண்டும்?**

ப:
ப்ரவர்ததாம் பக்திரலம் க்ஷணே க்ஷணே
த்வயேஷ மே ஹ்ராஸவிவர்ஜிதா ஸதா ।
அனுக்ரஹஸ்தே மயி சைவமேவ
நிரூபதெள தெள மம ஸர்வகாம ॥

ஒவ்வொரு கணமும் உன்னிடம் பக்தி வளர்ந்தவாறே இருக்கவேண்டும்; என்றும் அது குறைய வேண்டாம். உன் அருளும் எனக்கு அப்படியே இருக்கட்டும். இந்த இரண்டும் தூய்மையாக இருக்கட்டும் என்று ஹனுமந்ததேவர் ஸ்ரீஹரியிடம் வேண்டுக்கொள்கிறார். நாமும் இதே பிரார்த்தனையை செய்வோமாக.

***

# பீமசேனதேவர்

**கேள்வி: பீமசேனதேவரின் அவதாரத்திற்கு காரணம் என்ன?**

பதில்: பூமியின் பாரத்தைக் குறைப்பதற்காக ஸ்ரீஹரி, கிருஷ்ண அவதாரம் எடுத்தார். அவரது சேவைக்காக பிராணதேவரும் பீமனாக வந்தார்.

**கே: பீமசேனதேவர் அவதரித்த காலம்?**

ப: கலியுகம் துவங்குவதற்கு 71 ஆண்டுகளுக்கு முன்னர். கிபி 2017ன் சித்திரை மாதத்துடன் 5188 ஆண்டுகள் ஆயிற்று.

**கே: பீமசேனருக்கு இருந்த வலிமை வேறு யாருக்கும் இருக்கவில்லை என்று பொதுவாக சொல்லப்படுகிறது. இதற்கு என்ன காரணம்?**

ப: பீமசேனதேவர் குழந்தையாக இருந்தபோது ஒருமுறை குந்தி, அக்குழந்தையை கொஞ்சிக் கொண்டிருந்தாள். திடீரென்று ஒரு புலி அருகில் வந்து கர்ஜித்தது. புலியைக் கண்டு பயந்த குந்தி எழுந்திருக்கும்போது, கைதவறி குழந்தை மலை மேல் விழுந்தது. குழந்தை விழுந்ததால் அந்த மலை, நூறு துண்டுகளாக உடைந்து, ஷதஸ்ருங்க என்று பெயர் பெற்றது. அப்போதே பீமசேனதேவரின் வலிமை எத்தகையது என்று அனைவருக்கும் தெரியவந்தது.

**கே: பீமசேனதேவர் அவதரித்த இடம்?**

ப: இமயமலைக் காடுகளில் ஒரு பகுதியில். அப்போதைய பத்ரி க்ஷேத்திரத்திற்கு அருகில். பிறந்து 15 ஆண்டுகள் வரை அங்கேயே வாசம் செய்தார். 15ம் வயதில் ஹஸ்தினாபுரம் வந்தார்.

**கே: அவரின் படிப்பு / குருகுலம்?**

ப: 15ம் வயதில் ஹஸ்தினாபுரம் வந்தபிறகு, அங்கு க்ருபாசார்யாரிடம் ஆயுதப் பயிற்சி. 21ம் வயதில் துரோணாச்சாரியாரிடம் குருகுலம். பிறகு மூன்று ஆண்டுகள் ஸ்ரீகிருஷ்ணனிடம் மேற்படிப்பு (பரவித்யா). அதே சமயத்தில் பலராமனிடம் கதாயுதப் பயிற்சி.

**கே: பீமசேனதேவரிடம் துர்யோதனனுக்கு விரோதம் வரக் காரணம் என்ன?**

ப: அனைவரும் சேர்ந்து ஆயுதப்பயிற்சி மேற்கொள்ளும்போது, பீமசேனதேவர் அனைவரையும் தோற்கடித்து வந்தார். இதனால் துரியோதனனின் பொறாமை,

விரோதமாக மாறியது. மல்யுத்தத்தில், ஓட்டத்தில், விளையாட்டுகளில், நீச்சலில் இப்படி அனைத்திலும் பீமசேனதேவரே வென்று வந்தார். இதனாலேயே துரியோதனன் மற்றும் அவனைச் சார்ந்தவர்களுக்கு பீமசேனதேவர் மேல் விரோதம் வரத் துவங்கியது.

**கே: குருகுலத்தில் இருந்தபோதே துரியோதனன் பீமசேனதேவரை கொல்வதற்கு முயற்சித்தானா?**

ப: பீமசேனதேவரைக் கொல்லவேண்டுமென்பதே துரியோதனனின் விருப்பமாக இருந்தது.

1. ஒரு முறை பீமர் தூங்கும்போது விஷமுள்ள பாம்புகளைக் கொண்டு வந்து அவர் மேல் ஏவினான்.
2. இரும்புக் கம்பிகளால் பீமரைக் கட்டி, கங்கையின் வெள்ளத்தில் அவரை தள்ளி மூழ்கடித்தான்.
3. த்ருதராஷ்ட்ரனின் தாசியின் மகனான யுயுத்ஸு மூலமாக பீமருக்கு விஷத்தைக் கொடுக்க முயன்றான்.
4. துரோணர் ஏற்பாடு செய்த ஒரு போட்டியின்போது, பீமரைக் கொல்ல முயற்சித்தான்.
5. அரக்கு மாளிகையில் பீமசேனதேவருடன் பாண்டவர்களையும் கொன்றுவிட வேண்டும் என்று முயன்றான்.

இவையே முக்கியமான முயற்சிகள்.

**கே: அரக்கு மாளிகையை கட்டியவர் யார்? அங்கு தங்கியிருந்த பாண்டவர்களைக் கொல்ல வந்தவர் யார்?**

ப: ராமாயண காலத்தில் ப்ரஹஸ்தன் என்று ஒரு அசுரன் இருந்தான். அவனே தற்போது புரோசனனாக பிறந்து, இந்த அரக்கு மாளிகையைக் கட்டினான். இவன் துரியோதனனின் நண்பன். வாரணாவதத்தில் நடைபெறும் உற்சவத்தில் பங்கு கொள்ள வருமாறு, த்ருதராஷ்டிரன் மூலமாக பாண்டவர்களுக்கு அழைப்பு விடுத்து, அப்படி வந்த அவர்களை அரக்கு மாளிகையில் தங்குவதற்கு ஏற்பாடு செய்தான் துரியோதனன். பாண்டவர்களைக் கொல்வதற்காக கொடுக்கப்பட்ட விஷ-லட்டுகளை தானே உண்டு, அனைவரையும் காப்பாற்றினார் பீமசேனதேவர்.

**கே: ஒரு நொடியில் எரிந்து கருகிவிடும் அரக்கு மாளிகையை புரோசனனால் ஏன் தீ வைக்க முடியவில்லை?**

ப: பாண்டவர்கள் தூங்கும்போது, அவர்களுக்குத் தெரியாமல் புரோசனன் அரக்கு மாளிகைக்கு தீ வைக்கவேண்டியிருந்தது. ஆனால், பீமசேனதேவர் மட்டும் எப்போதும் முழித்தே இருந்தார். ஆகையால் அவனால் தீ வைக்கமுடியவில்லை. பீமர் & புரோசனன் இருவரும் இப்படியே ஆறு மாதங்கள் வரை,

ஒருவருக்கொருவர் தூங்கட்டும் என்று காத்திருந்தனர். புரோசனனின் அக்கா வந்தபிறகு, அவர்கள் அனைவரும் தூங்கியபோது, பீமசேனதேவரே அரக்கு மாளிகைக்கு தீ வைத்துவிட்டு, தன் தாய் மற்றும் சகோதரர்களை தூக்கிக்கொண்டு, அங்கிருந்த சுரங்கத்தின் வாயிலாக அங்கிருந்து புறப்பட்டு தப்பினார்.

**கே: அரக்கு மாளிகையிலிருந்து பீமர் தப்பித்துச் சென்றால் போதுமானதே. அதற்கு ஏன் அந்தப் பெண் மற்றும் அவரின் வாரிசுகளை கொல்லவேண்டும்?**

ப: தான் அதிதி ஆகவேண்டும் என்றும், தன் மக்கள் தேவதைகள் ஆகவேண்டும் என்று அந்தப் பெண் முன்னர் தவம் செய்துவந்தாள். புரோசனனின் அக்காவான இவள் மிகவும் துஷ்டளாகிருந்தாள். இத்தகைய துஷ்டளாக இருந்தவளைக் கொல்வதே பீமசேனதேவரின் கடமையாக இருந்தது.

**கே: பீமசேனதேவர் ஹிடிம்பையைத் திருமணம் செய்தது என்ன நியாயம்? இவள் ஒரு நர-பட்சிணி (மனிதர்களை சாப்பிடுபவள்). அசுரர் குலத்தில் பிறந்தவள். இவளை பீமசேனதேவர் திருமணம் செய்தது, பாகவத தர்மத்திற்கு எதிரான செயல்தானே?**

ப: ஹிடிம்பை ஒரு சாதாரணமானவள் அல்ல. இந்திரலோகத்தில் ஒரு தேவதையுடன் போட்ட ஒர் போட்டியின்படி, இந்திரனை மயக்க முயன்றபோது, சசிதேவியின் சாபத்தால் இந்த அரக்கியாகப் பிறந்திருக்கிறாள். பாரதிதேவியைக் குறித்து கடுந்தவம் புரிந்து, தன்னில் பாரதிதேவியின் ஆவேசத்தைப் பெற்று, பாரதிபதியின் சங்கமத்தினால் அந்த சாப விமோசனம் ஆகும் என்ற வரத்தைப் பெற்றவள். ஆகையால் இவளை பீமசேனதேவர் மணம் புரிந்ததில், பாகவத தர்மமே ஆகியிருக்கிறது. இதில் தவறு ஏதுமில்லை. மேலும், வேதவியாசதேவரின் ஆணைப்படியே இந்த மணம் நடந்ததால், இதில் பாகவத தர்மத்திற்கு எந்தக் குறையும் வரவில்லை.

**கே: ஏகசக்ர நகரத்தில், பீமசேனதேவர் பகனைக் கொன்றார்? யார் இந்த பகன்?**

ப: பகனுக்கு ருத்ரதேவரின் வரம் இருந்தது. இந்திராதி தேவர்களையும்கூட இவன் வென்று வந்தான். இவன் ராமாயண காலத்தவன். ராவணனின் தாய்மாமன் கைகசியின் சகோதரன். ஒருமுறை ராமபாணத்தால் அடி வாங்கியவன். ஸ்ரீராமனின் விருப்பப்படியே தற்போது பீமரின் கையால் மரணமடைந்தான்.

**கே: அர்ஜுனன் வென்ற திரௌபதியை தானும் சேர்ந்து மணம் புரிந்தது எப்படி சரியாகும்?**

ப: திரௌபதியில் பார்வதி, ஷ்யாமலே, பாரதி, சசி, உஷே என்று இவர்கள் அனைவரும் இருக்கின்றனர். அவரில் இருந்த பாரதியை மட்டும் பீமசேனதேவர் மணம் புரிந்தார். இந்திரனின் மனைவியான சசியை அவர் மணக்கவில்லை. இது ஒரு தேவரகசியம்.

**கே: பீமசேனதேவரைப் பற்றி அதிக தகவல்கள், மகாபாரதத்தில் எந்த பர்வத்தில் காணக்கிடைக்கிறது?**

ப: மொத்த மகாபாரதமுமே பீமசேனதேவரின் பாகவத தர்மம் மற்றும் வீரபராக்ரமங்களைப் பற்றி பேசவுமே பிறந்தது. அதிலும் விராட பர்வம், பீமசேனதேவரின் மகிமைகளைப் பற்றி மட்டுமே பேசுகிறது. உத்யோக பர்வம் ஸ்ரீகிருஷ்ணனின் மகிமைகளைப் பற்றி பேசுகிறது. ஆகையால், விராட பர்வம் மற்றும் உத்யோக பர்வம் இரண்டும், மகாபாரதத்தின் சாரம் ஆகும் என்று ஸ்ரீவேதவியாஸ தேவரே சொல்கிறார்.

**கே: பீமசேனதேவர் வைத்திருந்த கதையை யார் அவருக்கு அளித்தது?**

ப: இந்திரபிரஸ்தத்தில் மயசபையை நிர்மாணம் செய்த மயனே கொடுத்த கதை அது. வாயுதேவர் வைத்திருந்த கதையை, யௌவனாஷ்வ ராஜனின் அருளால் மயன் பெற்றிருந்தான்.

**கே: கிருஷ்ணனிடம் மிகுந்த பக்தி கொண்டிருந்த பீமசேனதேவரிடம், கிருஷ்ணன் எப்படி அன்பு செலுத்தினார்?**

ப: இதற்கு ஒரு சுவாரசியமான சம்பவம் உள்ளது. ஜராசந்தனின் வீட்டிற்குச் செல்லும் சந்தர்ப்பத்தில், பீம அர்ஜுனர்களை அனுப்புவதற்கு தர்மராஜன் மறுக்கிறார். அப்போது கிருஷ்ணன் சொல்லும் விஷயம் மிகவும் அருமையானது.

யதி மே ஹ்ருதயம் வேத்ஸி யதி தே ப்ரத்யயோ மயி ।
பீமார்ஜுனாவுபௌ ஷீக்ரம் ந்யாஸபூதௌ ப்ரதேஹி மே ॥

என் மனதை நீ புரிந்துகொண்டிருந்தால், பீமன் மற்றும் அர்ஜுனரை என்னுடன் அனுப்பு. அவர்களுக்கு எதுவும் நடக்காமல் பார்த்துக்கொள்வது என் பொறுப்பு. முடியாது என்றால் சொல், இப்போதே நான் புறப்பட்டுவிடுகிறேன். அப்போது தர்மராஜன், 'யதா வதஸி கோவிந்தா' (நீ எப்படி சொல்கிறாயோ, கோவிந்தா, அப்படியே ஆகட்டும்) என்று ஒப்புக்கொள்கிறான்.

**கே: ஜராசந்தனை பீமசேனதேவரை பலமுறை அவனது உடலை பிய்த்துக் கொன்றபோதும், அவனது உடல் மறுபடி சேர்ந்துகொண்டது. அப்போது, ஸ்ரீகிருஷ்ணனின் யோசனையின்படி அவனது உடலை இரண்டாகக் கிழித்து, தலைகால் மாறிப் போட்டபோது, அவை ஒன்று சேரவில்லை. இது சரியா?**

ப: இந்த கதைக்கு எந்தவித ஆதாரமும் இல்லை. ஜராசந்தனுக்கு பிரம்மதேவர் சாகாவரம் அளித்திருந்தார். அந்த வரத்தை மதிக்கவேண்டி அவனுடன் 15 நாட்களுக்கு போர் புரிந்தார் பீமர். ஸ்ரீகிருஷ்ணன் சொன்னதைப்போல் அவனைக் கொன்றார். முதலில் ஞானயுத்தம் செய்து, பின்னர் உடல் பலத்தைப் பயன்படுத்தி,

பின் அவனைக் கொன்றார். கதாயுதத்தினால் போர் புரிந்து, பின் மல்யுத்தம் செய்தனர். ஜரா எப்படி அவனின் உடலை சேர்த்தாளோ, அதே போல் இரு பாகங்களாக பீமர் அவனின் உடலை பிய்த்து எறிந்தார்.

**கே: ராஜசூயா யாகத்திற்கு தயாராகும்போது, பீமசேனதேவர் தேவதைகளுடன் போர் புரிந்தார். தேவதைகள் பீமருடன் போர் புரிந்தனர் என்றெல்லாம் மகாபாரதத்தில் இருக்கிறது. இது சரியா? தேவதைகளுக்கு பிராணதத்வத்தை போதித்த பீமசேனதேவர், அவர்களுக்கெல்லாம் குருவாக இருந்தபோது, இந்த யுத்தம் எப்படி சாத்தியம்?**

ப: இந்த கதை மகாபாரதத்தில் இருப்பது நிஜம். ஆனால் தேவதைகள் நிஜமான உணர்வுடன் போர் புரியவில்லை. பீமசேனதேவரின் அதிகமான பலத்தை உலகத்திற்குக் காட்டுவதற்காக தேவதைகள் செய்த நாடகமே இது. கருட-சேஷர் போர் புரிந்தனர். பின் அனைத்து தேவதைகளும் தோற்றுப்போய் ராஜசுயா யாகத்திற்கு மரியாதை செலுத்தி அவரை வழியனுப்பினர். இதிலிருந்து, ராஜசுயா யாகம் செய்வதற்கு வாயுதேவருக்கு மட்டுமே சாத்தியம் என்று தெரியப்படுத்தினர்.

**கே: தர்மராஜன், திரௌபதியை பணயம் வைத்து சூதாட்டத்தில் தோற்றபோது, அங்கேயே இருந்த பீமசேனதேவர் அவருக்கு அறிவுரை கூறவில்லையா?**

ப: பீமசேனதேவரிடம் அறிவுரை / யோசனை கேட்காமலேயே, தர்மராஜன் திரௌபதியை பணயம் வைத்து சூதாட்டத்தில் தோற்றார். ஆனால், பிறகு பீமசேனதேவர், அண்ணனை திட்டினார். திரௌபதியை பணயத்தில் வைத்ததற்கு உனக்கு மன்னிப்பே கிடையாது. இந்த தவறைச் செய்ததற்கு உன் கைகளையே தீயிலிட்டு பொசுக்கிவிடுவேன். ஹே சகதேவனே. நெருப்பு கொண்டுவா என்று உறுமினார். உத்தமர்கள் தவறு செய்தால் அவர்களை பேச்சிலேயே தண்டிக்கவேண்டும் என்ற நீதியை உலகிற்கு தெரியப்படுத்தினார். உத்தமர்கள் தவறு செய்தால், அவர்கள் பெரியவர்களே ஆகியிருந்தாலும், அமைதியாக அமர்ந்திருப்பது தர்மம் அல்ல.

**கே: திரௌபதியை மிகவும் அவமானப்படுத்திய துரியோதனாதிகளை அன்றே கொன்றிருக்க வேண்டுமல்லவா?**

ப: ஸ்ரீகிருஷ்ணனின் எண்ணத்தின்படியே நடப்பது பீமசேனதேவரின் பாகவததர்மம். துரியோதனாதிகளின் பாவமூட்டை அதிகரிக்கவேண்டும் என்பதற்காகவே, அவர்கள் திரௌபதியை அவமானப்படுத்தும் காட்சியே நடந்தது. அதற்காகவே, அவர்களை அன்றே கொல்ல முடிந்திருந்தாலும் பீமசேனதேவர் கொல்லவில்லை.

**கே: திரௌபதியை மட்டுமாவது காப்பாற்றி இருக்கலாம் அல்லவா?**

ப: திரௌபதிதேவிக்கு அநியாயம் நடந்தபோது மறைந்திருந்து அவளைக் காத்தவர் ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா; அங்கிருந்தே காத்தவர் பீமசேனதேவர். அங்கே இருந்த

துரியோதனாதிகளை அச்சுறுத்தி, அநியாயத்துக்கு எதிராக சூளுரைக்க யாருக்கும் தகுதியில்லாதபோது, பீமசேனதேவர் ஒருவரே கர்ஜித்தார். துரியோதனனின் தொடையை கிழிப்பேன், துச்சாதனனின் இதயத்தைக் கிழிப்பேன் என்று சபதம் செய்தார்.

**கே: மகாபாரதப் போரின் முடிவில், துரியோதனின் தலையை பீமசேனதேவர் தன் காலைக் கொண்டு நசுக்குகிறார். ஒரு அரசனை இப்படி அவமானம் செய்யலாமா?**

ப: திரௌபதி வஸ்த்ராபரண சமயத்தில் துரியோதனன் செய்த அவச்செயலுக்கான தண்டனையே இது. அவன் திரௌபதியை, பாண்டவர்களை மற்றும் இறுதியில் ஸ்ரீகிருஷ்ணனையும் அவமானம் செய்திருந்தான். 'நிம்ம ஸ்னேஹிதனாத கிருஷ்ணனன்னு பணக்கிட்டு பிடி' (உங்கள் நண்பரான ஸ்ரீகிருஷ்ணரையும் பணயத்தில் வைத்துவிடுங்கள்) என்று கேலி பேசினான். அப்போதே பீமசேனதேவரின் கோபம் தலைக்கேறியது. எந்த வாயினால் ஸ்ரீகிருஷ்ணனை கேலி பேசினாயோ, அந்த வாயை என் இடது காலினால் நசுக்கி வீசுகிறேன் என்று சபதம் செய்திருந்தார்.

**கே: பீமசேனதேவர் காட்டிற்குப் போவதற்கு என்ன காரணம்?**

ப: அசுரர்களைக் கொல்வதற்கு ஸ்ரீராமன் எப்படி வனவாசம் போனாரோ, அதே காரணத்திற்காகவே பீமசேனதேவரும் காட்டிற்குப் போனார்.

**கே: பீமசேனதேவர் காட்டில் முதன்முதலில் கொன்றது கிர்மீரன் என்பவனை. இவன் யார்?**

ப: காட்டிற்கு வந்த மூன்றாவது நாளிலேயே கிர்மீரனைக் கொன்றார். இவன் பகனின் தம்பி. மற்றும் ஹிடிம்பனின் நண்பன்.

**கே: வனவாச காலத்தில் பாண்டவர்கள் எங்கெங்கு சென்றனர்?**

ப: பதரிகாஸ்ரமத்திலிருந்து துவங்கி, கன்யாகுமரி வரை இருக்கும் காடுகளில் சுற்றினர். பாஜக அருகில் இருக்கும் பாஷாண தீர்த்தத்திற்கும் வந்தார்கள் என்று சொல்கிறார்கள். தென்னிந்தியாவில் சுற்றியதற்கான ஆதாரம் மகாபாரத்தில் இருக்கிறது.

**கே: கருடனின் இறக்கையிலிருந்து வந்த காற்றிற்கு பறந்து வந்த சௌகந்திகா புஷ்பத்தை கொண்டுவருவதற்கு பீமன் புறப்பட்டது குழந்தைத்தனமாக இல்லையா?**

ப: வாயுதேவரின் சக்தியை வெளிக்காட்டுவதற்காக நடத்தப்பட்ட ஒரு நாடகமே இந்த சம்பவம். இதன் மூலம் பல லட்ச அசுரர்களை கொல்லவேண்டியதாக

இருக்கிறது. இந்த விஷயம் திரௌபதிக்கும் தெரிந்திருந்தது. ஆகவே இது ஒரு நாடகம் என்று அறியவேண்டும்.

**கே: வழியில் ஹனுமந்தரின் வாலினை தூக்கமுடியாத சம்பவம். என் வாலினை தூக்கு என்று சொல்வது இதெல்லாம் புத்திசாலித்தனமான செயல்களா?**

ப: 'இதொந்து மூர்க்கதன என்ப பாவனெ துஷ்டரிகெ மூடலி' (இது ஒரு முட்டாள்தனமான நாடகம் என்று நினைப்பு துஷ்டர்களுக்கு வரட்டும்) என்று சொன்னதைப்போல் இது ஒரு விளையாட்டே. ஹனுமந்தரும் பீமசேனதேவரும் வேறுவேறு அல்ல. இப்படிச் செய்வது வெறும் விளையாட்டு என்கிற அறிவு சஜ்ஜனர்களுக்கு வரட்டும் என்பதற்காக செய்ததாகும்.

**கே: சௌகந்திகா புஷ்பத்தைக் கொண்டு வரப்போனபோது, குபேரனின் உதவியாளர்கள் பீமசேனதேவரை வழிமறித்தனர். இவரை ஒரு அசுரர் என்று எப்படி நினைத்தனர்?**

ப: குபேரனின் உதவியாளர்கள் கோபத்திற்கு அடிமையானவர்கள் என்று பெயர். இவர்கள் அனைவரும் துஷ்டர்கள் ஆவர். லட்சக்கணக்கான இத்தகையவர்கள் அங்கு வசித்திருந்தனர். இவர்கள் அனைவரையும் கொன்று, பீமசேனதேவர் சௌகந்திகா புஷ்பத்தை திரௌபதிக்குக் கொண்டு வந்து கொடுத்தார்.

**கே: அந்த புஷ்பத்தை கொண்டு வருவதற்கு இரு முறை போனார் என்று சொல்கிறார்களே. இது சரியா?**

ப: ஜடாசுரனின் கதையை மகாபாரதம் சொல்கிறது. அப்போது இன்னொரு முறை புஷ்பத்தைக் கொண்டு வருவதற்கான சம்பவம் அங்கும் வருகிறது. முதல்முறை போனபோது, லட்சக்கணக்கான அசுரர்களைக் கொன்றார். இரண்டாம் முறை சென்றபோது, பத்மத்ரய எண்ணிக்கையில் அசுரர்களைக் கொன்றார். இரண்டாம் முறை போனபோது கொன்றவர்களில் முக்கியமானவன் மணிமந்தன். இவனிடம் வாக்குவாதம் செய்து பிறகு அவனுடன் போர் புரிந்தார்.

**கே: பத்மத்ரய என்றால்?**

ப: ஒரு பத்மம் என்றால், ஆயிரம் x கோடி. அப்படி பெருக்கினால் வருவதை பத்மம் என்று அழைக்கின்றனர். இப்படியாக மூன்று மடங்கு = பத்மத்ரய. இது கற்பனைக்கும் எட்டாத எண்ணிக்கை ஆகும்.

**கே: அப்படியென்றால், 18 அக்ஷோஹிணி சைன்யத்துடன் போர் புரிந்தது ஒரு பெரிய விஷயமே இல்லை, அல்லவா?**

ப: ஆம். இந்த அசுரர்களை கொல்வதற்கு முன், அவர்களுடன் வாக்குவாதம் செய்து, பிறகு நான்கு வித ஆயுதங்களாலும், பிறகு மல்யுத்தமும் செய்து அவர்களைக் கொன்றார். இவ்வளவு பெரிய சைன்யத்தைக் கொன்றது, இதிகாசத்தில் வேறெங்கும் கேட்டிராத செய்தி.

**கே: பீமசேனதேவர், தனது ஞானகாரியங்களைக் காட்டியதைவிட, தனது உடல் பலத்தைக் காட்டிய சம்பவங்களே அதிகம் அல்லவா?**

ப: அப்படியில்லை. அவரது ஞானகாரியங்களே அதிகம் என்று சொன்னாலும் அது தப்பில்லை. ஏனென்றால், வனவாச சமயத்தில் 80,000 ரிஷிகளுக்கு, 10,000 முனிவர்களுக்கு மற்றும் ஒவ்வொருவருக்கும் 300 உதவியாளர்கள் என இந்த அனைவருக்கும் பீமசேனதேவரே பாடம் சொல்லிக்கொடுத்து வந்தார். இதைவிட பெரிய ஞானகாரியத்திற்கான உதாரணம் வேறென்ன வேண்டும்? அதுமட்டுமல்லாமல், ஜராசந்தன், மணிமந்தன் முதலான அசுரர்களைக் கொல்வதற்கு முன்னரும், அவர்களுடன் வாக்குவாதம் செய்து, விஷ்ணு சர்வோத்தமத்வத்தை நிர்ணயம் செய்து அவர்களை வென்றார்.

**கே: அவ்வளவு ரிஷிமுனிவர்களுக்கிடையே யாரும் தகுதியற்றவர் இருந்தனரா?**

ப: வைதிகரின் வேடம் பூண்டு, ரிஷிமுனிவர்களிடையே அமர்ந்து ஒருவன் பாடம் கேட்டு வந்தான். அவனே ஜடாசுரன். கற்றறிந்த அறிஞர் போல் திரிந்து வந்தான். ஒருமுறை திரௌபதியையே தூக்கிக் கொண்டு போக முயற்சித்தான்.

**கே: பீமசேனதேவருக்கு இந்த விஷயம் தெரிந்திருந்ததா?**

ப: பீமசேனதேவருக்கு அனைத்தும் தெரிந்திருந்தது. ஆனால், திரௌபதியை கொண்டு போகும் சமயத்திலேயே அவனைக் கொல்லவேண்டும் என்று தீர்மானித்து அமைதியாக இருந்தார். வெறும் கைகளாலேயே அவன் கழுத்தை நெறித்தார். அப்போது பாண்டவர்களின் வனவாசத்தில் ஆறு ஆண்டுகள் முடிந்திருந்தது.

**கே: ஜயத்ரதனும்கூட திரௌபதியை அபகரித்துக் கொண்டு போனான் என்கிறார்கள். இது எப்போது நடந்தது? ஜயத்ரதன் யார்?**

ப: துரியோதனனின் ஒரே தங்கையான துச்சலையின் கணவனே ஜயத்ரதன். சிவதேசத்தின் இளவரசனான கோடிகாஸ்யன் இவனது நண்பன். இவர்கள் இருவரும் சேர்ந்து திரௌபதியை அபகரித்தனர். அப்போது பீமசேனதேவர் ஜயத்ரதனை கொல்லவில்லை. அவனை வென்று, கத்தியினால் அவன் தலையிலிருந்த கூந்தலை கத்தரித்தார். திரௌபதியின் காலில் விழுந்து மன்னிப்பு கேட்குமாறு செய்தார். இதனால் அவமானமடைந்த ஜயத்ரதன், சிவனைக் குறித்து

தவம் செய்து, அர்ஜுனனைத் தவிர மற்ற பாண்டவர்களை ஒரே ஒரு நாள் போரில் தடுத்து நிறுத்துவதற்கான சக்தியை வரமாக அளித்தார்.

**கே: யட்ச-பிரஸ்ன சமயத்தில் பீமசேனதேவருக்கும் அந்த கேள்விகளுக்கு பதில் அளிக்க முடியவில்லை. இது ஏன்?**

ப: இதில் இன்னொரு மர்மம் இருக்கிறது. உனது கல்வியை வெளிக்காட்டினால் பிழைப்பாய். இல்லையெனில் மரிப்பாய் என்று யட்சன் சொன்னபோது, என் பிழைப்பிற்காக கல்வியை பயன்படுத்தமாட்டேன் என்னும் பாகவத தர்மத்தை பீமசேனதேவர் பதிலளித்தார்.

**கே: அப்படியிருந்தும் இறக்கவேண்டியிருந்ததே? பதில் அளிக்காமல் அப்படியே பிழைத்திருக்கலாமே?**

ப: ஆம். இறக்கவில்லை. இது ஒரு தேவ-மாயை என்று தெரிந்து, ஒரு நொடியில் தூங்குவதைப் போல நடித்தார். அது பாண்டவர்களின் அஞ்ஞாத வாசம் துவங்கும் நேரம். அதற்காக பாண்டவர்களுக்கு வரம் அளிப்பதற்காக யட்சன் நடத்திய நாடகம் இது. ஒரு நாழிகைக்கு மட்டும், யட்சனுக்கு வரம் அளிக்கும் சக்தி வந்தது.

**கே: கீசகன், திரௌபதியின் புடவையை இழுத்து அவமானப்படுத்தியபோது, திரௌபதி ஓடி வந்து 'என்னைக் காப்பாற்றுங்கள்' என்று அரசவையில் கதறினார். பீமசேனதேவரும் அங்கேயே இருந்தார். அந்த நொடியிலேயே அவர் கீசகனை கொன்றிருக்க முடியும். ஆனால், அப்படி செய்தால், அஞ்ஞாத வாசம் முடிந்துவிடும் என்பதாலேயே அவர் அப்படிச் செய்யவில்லை. இது சரியா?**

ப: பீமசேனதேவர் தன் அண்ணனாகிய தர்மருக்கு எதிராக எதையும் செய்பவரில்லை. சபையில் கீசகனை கொல்லக்கூடாதென்று தர்மர் சொன்னதாலேயே, பீமசேனதேவர் அமைதியாக இருந்தார். இல்லையென்றால் அந்த நொடியே அவர் கீசகனை கொன்றிருப்பார்.

**கே: அப்படியென்றால் அடுத்த நாள் கீசகனை ஏன் கொன்றார்?**

ப: சபையில் கீசகனை கொல்லவேண்டாம் என்று தர்மர் சொல்லியிருந்தார். மறுநாள் யாருக்கும் தெரியாமல் கீசகனை கொன்றார். ஆகையால் அண்ணனுக்கு எதிராக நடந்தது போல ஆகவில்லை. அதுமட்டுமல்லாமல் 'விஷமாலோட்ய பாஸ்யாமி' - கீசகனை கொல்லவில்லையென்றால் நான் விஷம் அருந்திவிடுவேன் என்று திரௌபதி சபதம் போட்டதால், கீசகனை உடனே கொல்லவேண்டியது அவசியமானது.

**கே: கீசகனை கொல்லும்போது பீமர் சேலை உடுத்தியிருந்தார் என்கிறார்கள். அது எதற்கு?**

ப: கீசகனை கொல்லும்போது பீமசேனதேவர் சேலை உடுத்தியிருந்தார் என்பதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. அது மூல மகாபாரதத்திலும் இல்லை. வேடம் போட்டிருந்தார் என்று இருக்கிறது அவ்வளவே. அது சமையல்காரர் வேடத்தை விட்டு, கந்தர்வனாக வேடமணிந்தும் போயிருக்கலாம். சேலை அணிந்திருந்தாலும் அது கீசகனுக்கு பயந்து அல்ல. விரோதமே காரணம்.

**கே: மகாபாரதப் போரில் பதினோரு அக்ஷோஹிணி சைன்யத்தில், பீமசேனதேவர் கொன்றது எவ்வளவு பேரை?**

ப: பதினோறு அக்ஷோஹிணியில் ஆறு அக்ஷோஹிணி சைன்யத்தை பீமசேனதேவரே கொன்றார்.

**கே: துரியோதனனுடன் போர் புரிந்தது போரின் இறுதி நாளில்தானே?**

ப: 15 நாட்கள் வரை நடந்த போரில், துரியோதனன் மற்றும் பீமசேனதேவர் இருவரும் பலமுறை நேருக்கு நேர் மோதிக்கொண்டனர். முதல் நாளில் போர் துவங்கியதே இவர்கள் இருவருக்கும்தான். அப்போது பீஷ்மர் இவர்களை பிரித்து, தான் நடுவில் புகுந்து போர் புரிந்தார். அதனால் அன்று துரியோதனன் தப்பித்தான். ஆறாவது நாள் 'அயம் ஸகாலம் ஸம்ப்ராப்த:' - 'இவ்வளவு நாள் காத்திருந்த நேரம் இப்போது வந்திருக்கிறது. வா, துரியோதனனே, உன் கதையை இன்றே முடித்துவிடுகிறேன்' என்று தன் கையால் பீமசேனதேவர் ஒரு குத்து விட்டார். துரியோதனன் கீழே விழுந்தான். க்ருபாசார்யர் முதலானவர்கள், துரியோதனனை ரதத்தில் ஏற்றி, தங்கள் இருப்பிடத்திற்குக் கொண்டு வந்து அவனை காப்பாற்றினர்.

**கே: இறுதியில் துரியோதனனைக் கொன்றது எப்படி? தொடையில் அடித்தனர் என்று சிலரும், அடிக்கவில்லை என்றும் சிலர் கூறுகின்றனர். எது சரி?**

ப: பலராமன் பார்த்துக் கொண்டிருந்தபோதே, பீமசேனதேவருக்கும் துரியோதனனுக்கும் போர் துவங்கியது. இடுப்பிற்குக் கீழ் கதாயுதம் உபயோகிக்கக்கூடாது என்பது போரின் விதி. அதன்படியே பீமசேனதேவர் துரியோதனின் தொடையில் அடிக்கவில்லை. ஆனாலும்கூட அவன் தொடையினை முறித்தார். முதுகுத்தண்டின் கீழ்ப்பாகத்தில் இருக்கும் நரம்பில், இரு கால்களின் நரம்புகளும் வந்து சேர்கின்றன. அந்த இடத்தில் சரியாக அடித்தால், அது தொடைகளுக்கும், கால்களுக்கும் பாதிப்பினை ஏற்படுத்துகின்றன என்பதை அறிந்த பீமசேனதேவர் சரியாக அங்கேயே தன் கதையால் அடித்தார். இதனால் துரியோதனனின் இரு தொடைகளும் முறிந்தன.

**கே: ஆனால், துரியோதனின் தொடைகளை முறித்தது தவறு என்று பலராமன் கோபப்பட்டாரா?**

ப: பலராமனுக்கு கடைசி வரை சந்தேகம் இருந்து வந்தது. கிருஷ்ணனும் அதற்குத் தக்கவாறு பேசினார். 'ஷடே ஷாட்யம் ஸமாசரேத்'. பொய்க்கு பொய்யே சரி.

மோசத்திற்கு மோசமே பதில் என்று பதில் அளித்தார். பீமசேனதேவரும் மேலே சொன்னதைப்போல, முன்பு போட்ட சபதத்தின்படி, துரியோதனனின் தொடையை முறித்தார்.

**கே: இது அண்ணனான பலராமனுக்கு கிருஷ்ணன் செய்த அநியாயமல்லவா?**

ப: லட்சுமணனாக ஸ்ரீராமனுக்கு செய்த அதிக புண்ணியத்தை இதன் மூலம் சரிசெய்து கொண்டார், ஸ்ரீகிருஷ்ணன்.

**கே: 'ஜரடஸ்ய ஸுதா ஹதா:'. இதே என் தோள்களினால் இந்த கிழவனின் மகன்களை நான் கொன்றேன் என்று சொல்லி பீமசேனதேவர், திருதராஷ்டிரனை இகழ்ந்தார். தன் பெரியப்பாவிற்கு பீமர் செய்த அவமானம்தானே இது?**

ப: இந்தக் கேள்விக்கு விதுரன் பதிலளிக்கிறார். 'ஷுத்தே பாகவதே தர்மே நிரதோ யத் வ்ருகோதர:' நிஜமான பாகவத தர்மத்தைப் பின்பற்றுபவரான விருகோதரனுக்கு, இனிமேலாவது திருதராஷ்டிரன் ஸ்ரீஹரியிடம் பக்தி செலுத்தட்டும் என்னும் முக்கிய சிந்தனை இருந்தது. ஆகவே இப்படி இகழ்ந்தார். பீமசேனதேவரின் பேச்சைக் கேட்டு, திருதராஷ்டிரன் தவம் செய்யப் புறப்பட்டார்.

**கே: பீமசேனதேவரை பூஜிக்கவேண்டுமெனில் பெண்கள் எந்த ஸ்தோத்திரங்களை சொல்லவேண்டும்?**

ப: 'திரௌபதி ரமண விஞ்ஞாபிசுவே நின்னடிகெ தாபத்ரயகள பய ஷோக பரிஹரிஸி ஸ்ரீபதிய த்யான ஸுகவீயோ'

ஏ பீமசேனதேவனே. உன் சரணாரவிந்தங்களில் பக்தியுடன் வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன். ஆத்யாத்மிக, ஆதிதைவிக, ஆதிபௌதிக என்ற மூன்று தாபங்களை தீர்க்கவேண்டும். பயம், சோகம், துக்கங்களை தீர்ப்பாயாக. ஸ்ரீஹரியின் தியானரூபமான சுகத்தை எனக்கு அளித்து எப்போதும் எனைக் காப்பாயாக.

**கே: பீமசேனதேவரை பூஜிக்கவேண்டுமெனில் ஆண்கள் எந்த ஸ்தோத்திரங்களை சொல்லவேண்டும்?**

ப: 'பக்திர்ஞானம் ஸவைராக்யம் ப்ரக்ஞா மேதா த்ருதிஸ்திதி: |
யோக: ப்ராணோ பலம் சைவ விருகோதர இதி ஸ்ம்ருத: ||

பக்தி, ஞானம் (தத்வஞானம்), வைராக்கியம், ப்ரக்ஞா (வேகமாக எந்த விஷயத்தையும் கிரகிக்கும் திறன்), மேதா (நினைவுத் திறன்), த்ருதி (தைரியம்), ஸ்திதி (அசையாத நம்பிக்கை), யோக, பிராண (உயிர் சக்தி), பல (உடற்சக்தி) என்று இந்த பத்து குணங்களைக் கொண்டவரே பீமசேனதேவர். பிரம்மஞானிகளில் உத்தமமான வாயுதத்வமே பீமசேனதேவர். இத்தகைய பீமசேனதேவரைப் பற்றி

தெரிந்துகொள்வது நமது கடமை. ஹனும-பீம-மத்வ என்ற இந்த மூன்று ரூபங்களைப் பற்றி சரியாக தெரிந்துகொள்ளாதவன், நிஜமான ஹரிபக்தன் என்று சொல்லிக்கொள்வது சாத்தியமில்லை. ஆகையால், பீமசேனதேவரைப் பற்றிய விஷயங்களில் உள்ள பல குழப்பங்களை தீர்த்துக்கொண்டு, அவரைப் பற்றி உண்மையான தகவல்களை தெரிந்து கொள்ளவேண்டும்.

**கே: துச்சாதனனை பீமசேனதேவர் கொன்றது எப்படி என்னும் சிறு கதையை சொல்லவும்.**

ப: துச்சாதனனை பீமசேனதேவர் கொன்ற கதையை வர்ணிப்பது சாத்தியமே இல்லை. அந்த பெரிய போர்க்களத்தில், ஆகாயமே இடிந்து வீழ்வது போல பீமர் கர்ஜித்தார். பாஞ்சாலி கையைப் பிடித்து இழுத்த உன்னைக் கொல்லும் காலம் இப்போது வந்துள்ளது. ஏ பாபி துச்சாதனனே, இங்கே வா! என்று உறுமினார். நூறு கருப்பு மேகங்கள் ஒன்று சேர்ந்து சத்தம் உருவாக்கியதைப் போல, பீமசேனர் உறுமியது மிகவும் பயங்கரமாக இருந்தது. மொத்த கௌரவ, பாண்டவ குலமே இவரின் கம்பீர கர்ஜனையைக் கேட்டு ஸ்தம்பித்து நின்றது. யாருக்கும் கண் தெரியவில்லை. பிரமை பிடித்தாற்போல் நின்றனர். எதிரிகள் எதிரிலேயே இருந்தாலும், அவர்களைத் தாக்கவேண்டுமென்று யாருக்கும் தோன்றவில்லை.

ஏ துச்சாதனனே, சிக்கினாயா? என்று கைதட்டியவாறு காலினால் பூமியில் இடித்தால், மொத்த பூமண்டலமே நடுங்கிற்று. அங்கிருந்த யானை, குதிரைகள்கூட மூர்ச்சை ஆயின. இதே மாதிரி ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்து, துச்சாதனனை நெருங்கினார் பீமசேனதேவர். நொடியில் அவனை கீழே தள்ளி, கதாயுதத்தால் தாக்கத் துவங்கினார். அவன் கழுத்தில் தன் கால்களை வைத்து அழுத்தி, வயிற்றின் மேல் அமர்ந்து, மிகுந்த கோபத்துடன் அவனை நோக்கி, ஆகாயத்தைப் போல் நீலமாக இருந்த வாளை அதன் உறையிலிருந்து எடுத்து அவன் இதயத்தில் அதை சொருகினார். அவன் இதயத்திலிருந்து பொங்கி வந்த ரத்தத்தை, எடுத்து பருகலானார். இப்படியாக அவன் முன்னர் செய்த கெட்ட செயல்களை அவன் நினைவுக்குக் கொண்டு வந்தார்.

மனிதனின் ரத்தத்தைக் குடிக்கக்கூடாதென்று, பீமசேனதேவருக்கு தெரிந்திருந்ததால் அந்த ரத்தமானது அவரது பற்களைத் தாண்டி உள்ளே போகவில்லை. ஆனாலும், எதிரிகளுக்கு பயத்தை ஏற்படுத்துவதற்காக அந்த ரத்தத்தை மறுபடி மறுபடி தன் கைகளால் எடுத்து குடிப்பதுபோல் நடித்தார். உலகத்தைக் காப்பாற்றுபவனான நரசிம்மரை மனதில் நினைத்தவாறு மன்யுசூக்தத்தை சொல்லத் துவங்கினார். மன்யு நாமக நரசிம்மரை 'யஸ்தே மன்யோ' என்ற சூக்தத்தினால் புகழ்ந்து, ரத்தம் என்னும் சோமரசத்தை யுத்த-யக்ஞத்தில் சமர்ப்பித்தார். 'இஹ' என்னும் சாம-மந்திரத்தினால் அவன் இதயத்தை தன் கதையினால் பிளந்தார். ஜீவோத்தமரான பீமசேனதேவர், முன்னர் தான் செய்த சபதத்தை நிறைவேற்றி பின் இவ்வாறு கூறினார் - "எந்த பெண்கள் முன்னர் கணவருடன் இருந்தனரோ, அவர்களுக்கு இன்று கணவர் இல்லை (கௌரவர்களின் மனைவிகள்). யாருக்கு முன்னர் கணவர் இல்லையோ,

அவர்களுக்கு இன்று கணவர் இருக்கின்றனர் (திரௌபதி). சர்வோத்தமனின் அபாரமான சக்தியை பாருங்கள்".

"நான் இப்போது துச்சாதனனை பிடித்துக்கொண்டிருக்கிறேன். இங்கு ஆண் என்று யாரும் இருந்தால் வந்து இவரை காப்பாற்றவும்". இப்படி சொல்லியவாறு, ஸ்வர்க்க லோகத்தில் தேவேந்திரன் அமிர்தத்தைக் குடித்ததுபோல, பீமசேனதேவர் மறுபடி மறுபடி ரத்தத்தைக் குடிக்கலானார். உயிர் இன்னும் ஊசலாடிக்கொண்டிருந்த நிலையில் துச்சாதனனை விட்டு, எதிரிகளின் நடுவே போய் குதிக்கத் தொடங்கினார்.

இப்படி சொல்லியவாறு, எதிரிகளின் நடுவே தொடைகளைத் தட்டி குதித்தாடியவாறு, அவர்களை போருக்கு அழைத்தார். கர்ணன், அஸ்வத்தாமன், துரியோதனன் என்று யாருக்கும் பீமசேனதேவரை கண்ணெடுத்துப் பார்ப்பதற்கும் சக்தி இருந்திருக்கவில்லை. கர்ணனின் வில் பயத்தில் கீழே விழுந்தது. அவன் தன் கண்களை மூடிக்கொண்டான். சைல்யன் அவனை எச்சரித்ததும், அர்ஜுனனிடம் போகுமாறு சொல்லி போர் செய்யத் தயாராக நின்றான். அஸ்வத்தாமன் பீமசேனதேவர் இருந்த பக்கமே போகாமல் தூரத்தில் நின்றார். அப்போது பீமசேனதேவர் கூறினார் - "யுத்த-யக்ஞத்தில் சோமபானம் குடித்திருக்கிறேன். இன்னும் துரியோதனன் என்னும் பசுவை இந்த யக்ஞத்தில் நான் கொல்லவேண்டும்" இப்படி சொல்லி, இறந்துவிட்ட துச்சாதனனை விட்டு, பயங்கர கோபத்தில் துரியோதனனை நோக்கி நடக்கலானார்.

பீமசேனதேவர் வருவதைக் கண்ட துரியோதனன் மிகவும் பயந்து அங்கிருந்து விலகி ஓடினான். கிருஷ்ண & அர்ஜுனனைத் தவிர, இரு சைன்யர் முழுவதும் பீமசேனதேவரைக் கண்டு பயந்து ஒதுங்கியது. ஒரு முகூர்த்த நேரத்திற்கு போர்க்களம் காலியாக இருந்தது. பீமசேனதேவர் மிகவும் மகிழ்ச்சியுடன் தன் இரு கைகளையும் நிலத்தில் ஊன்றி ஒரு புலியைப் போல தாவத் துவங்கினார். எதிரிகள் பசுக்கள் போலவும் தான் ஒரு புலியைப் போலவும் நினைத்து, அவர்களை வேட்டையாடத் தயாரானதைக் கண்ட கிருஷ்ணன் நகைத்தார். அர்ஜுனனும் சிரித்தான். இருவரும் மிகவும் மகிழ்ச்சியுடன் பீமசேனதேவரை புகழ்ந்தனர்.

**கே: அர்ஜுனன் முதலானோர் வீழ்ந்தபோது பீமசேனதேவரும் வீழ்ந்ததாக மகாபாரதம் சொல்கிறது. அப்படியென்றால், மற்றவர்களைப் போல, பீமசேனதேவரும் இறந்தார் அல்லவா?**

ப: பீமனாகப் பிறந்த தேகத்துடன், திவ்யலோகத்திற்குப் போவதற்கு பீமசேனதேவர் விரும்பவில்லை. வந்த வேலை முடிந்தபோது அந்தந்த தேகத்தை துறப்பது சாஸ்திரங்கள் ஒப்பும் விஷயமே. அதைப்போலவே, பீமசேனதேவரும் தன் தேகத்தைத் துறந்தார். வாயுதேவரின் எந்த அம்சமானது, பீமனாக அவதரித்ததோ, அதே அம்சம் மத்வாசாரியராக அவதரித்தது.

***

# ஸ்ரீமதாசார்யர்

**கேள்வி: ஹனுமந்ததேவர் இன்றும்கூட கிம்புருஷ கண்டத்தில் சிரஞ்சீவியாக நிலைத்திருக்கிறார். மத்வாச்சார்யர் பத்ரிகாஸ்ரமத்தில் நாராயணரிடம் பாடம் படித்தவாறு, சிரஞ்சீவியாக இருக்கிறார். ஆனால், மகாபாரதத்தில், அனைவருடனும் பீமசேனதேவர் தன் இறுதிக்காலத்தை அடைகிறார் என்று இருக்கிறது. இதிலிருந்து, பீமசேனரின் ரூபம் சிரஞ்சீவி இல்லை என்றாகிறது அல்லவா?**

பதில்: ஸ்ரீமதாசார்யரின் பாஷ்யத்திற்கு உரை எழுதிய ஸ்ரீத்ரிவிக்ரம பண்டிதரின் தத்வப்ரதீப கிரந்தத்தின் மங்களாசரணத்தைப் பார்த்தால், இந்த கேள்விக்குப் பதில் கிடைக்கும். மங்களாசரணத்தின் 6வது மற்றும் 7வது ஸ்லோகத்தில், பீமசேனதேவரே ஸ்ரீமதாசார்யராகப் பிறந்திருக்கிறார் என்று தெளிவாக சொல்லியிருக்கிறார். முன்னர், மணிமந்தன் முதலான தைத்யர்கள் பீமசேனதேவரின் கதையினால் கொல்லப்பட்டாலும், ஸ்ரீஹரியின் நற்குணங்களை சரியாக புரிந்துகொள்வதற்காக மறுபடி பூமியில் மாயாவாதிகளாகப் பிறந்தனர். அவர்களைக் கொல்வதற்காக, அதே பீமசேனதேவர் மத்வராகி அவதரித்தார் என்று சொல்கிறார். பீமசேனதேவரின் உடல் மட்டுமே முன்னர் அழிந்தது. வாயுதேவரின் எந்த அம்சம் பீமசேனரில் இருந்ததோ, அதே அம்சம் பிறகு மத்வாசாரியர் என்று அழைக்கப்பட்டது.

**கே: மத்வர் பிறந்தது மாக சுத்த சப்தமி என்கிறார்கள் சிலர். சிலர் விஜயதசமி என்கிறார்கள். இவற்றில் எது சரி? மேலும் திங்கட்கிழமை அவதரித்தார் என்கிறார்களே?**

ப: வாயுபுராணத்தில் இருக்கும் அணுமத்வ சரித்திரத்தில் 'ஆஸ்வின சுக்ல தசமி திவஸே புவி பாவனே' என்று விஜயதசமி அன்றே அவதரித்தார் என்று மிகத் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. 'ஜாதோ மத்யான்ஹ வேலாயாம் புதவாரே மருத்தனு:' என்றதினால் புதன்கிழமை மதிய வேளையில் அவதரித்தார் என்றும் கூட அங்கேயே சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: ஸ்ரீமதாசார்யர் பூமியில் எவ்வளவு ஆண்டுகள் மக்களின் கண்களுக்குக் காண்பித்துக் கொண்டார்?**

ப:
'ஏகோனாஷீதி வர்ஷாணி நீத்வா மானுஷத்ருஷ்டிக: |
பிங்கலாப்தே மாகசுத்த நவம்யாம் பதரீம் யயௌ ||

மொத்தம் 79 ஆண்டுகள் பூமியில் தன்னை காண்பித்துக் கொண்டார். பிங்கள ஆண்டு மாக சுத்த நவமி அன்று பத்ரிகாஸ்ரமத்திற்கு புறப்பட்டார்.

**கே: மத்வாசாரியர் அவதரித்து எவ்வளவு ஆண்டுகள் ஆயிற்று?**

ப:
'த்ரிஷதாப்தோத்தர சது:ஸஹஸ்ராப்தேப்ய உத்தரே ।
ஏகோனசத்வாரிம்ஷாப்தே விலம்பி பரிவத்ஸரே ॥

என்று அணுமத்வவிஜயம் இதற்கு தெளிவாக பதிலை அளிக்கின்றது. கலியுகம் துவங்கி 4339ஆம் ஆண்டு ஆசாரியர் அவதரித்தார். இப்போது 5117 ஆகியிருக்கிறது. இதன்படி இன்று ஆசாரியர் அவதரித்து, 779 ஆண்டுகள் ஆகியிருக்கின்றன. இது 780ம் ஆண்டு. அல்லது ஆசாரியர் அவதரித்தது கிபி 1238ம் ஆண்டு. தற்போது 2018 என்றால் 780 ஆண்டுகள் ஆயிற்று என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

**கே: ஆசாரியர் அவதரித்த இடம்?**

ப: உடுப்பியிலிருந்து சுமார் 8-10 கிமீ தூரத்தில் உள்ள பாஜக க்ஷேத்திரம்.

**கே: ஆசாரியர் நம் கர்நாடகத்தில் பிறந்தது நமக்குப் பெருமைதானே?**

ப: மொத்த உலகிற்கும் தத்வஞானம் என்னும் விளக்கினை ஏற்றிய ஞானசூரியன் உதித்தது மிகவும் புனிதமான பாஜகத்தில். ராமனின் தூதனாக ஹனுமந்ததேவர் நிலைத்திருப்பதும்கூட இதே கர்நாடகத்தில் ஹம்பியில். கர்நாடகத்தின் இத்தகைய சிறப்புகளை அறிந்து மக்கள் பெருமை கொள்ளவேண்டும்.

**கே: ஆசாரியரின் தந்தையின் பெயர் மத்யகேஹபட்டர் அல்லவா?**

ப: மத்யகேஹ என்றால் 'நடுவில் இருக்கும் வீட்டினர்' என்று மட்டுமே பொருள். இது அவரது இயற்பெயர் அல்ல. ஒரு காரணப்பெயர் மட்டுமே.

**கே: தந்தை நாராயணபட்டர் தாய் வேதவதி என்று சிலர் சொல்கின்றனர். ஆனால் இதைப்பற்றி மத்வவிஜயத்தில் எதுவும் தெளிவாக இல்லைதானே?**

ப: ஆம். ஆனால் பல்வேறு தாசர்களின் பாடல்களில், வேதவதியே தாய் என்றும் நாராயணபட்டரே தந்தை என்றும் பாடியிருக்கின்றனர். மற்றும் பிரபல சம்பிரதாயமும் இதையே சொல்கிறது.

**கே: ஆசிரமம் ஸ்வீகரித்தது 9வது வயதில் அல்லவா?**

ப: சுமார் 8-9ம் வயதில். வாழ்க்கையில் விரக்தியடைந்து சன்யாசத்திற்குப் புறப்பட்டார். ஆனால், தன் பெற்றோருக்கு இன்னொரு மகன் பிறக்கும்வரையில் காத்திருந்து 11ம் வயதில் ஆசிரமத்தை ஏற்றார்.

பூசுரேந்த்ரோபனீதோ யஸ்தத ஏகாதஷாப்தகே |
ஸௌம்யே ஜக்ராஹ பகவான்ஸ்துரீயாஸ்ரமயுத்தமம் ||

**கே: சன்யாச ஆசிரமத்தில் நுழையும்போது வாசுதேவனுக்கு வைத்த பெயர் மத்வாசாரியர் தானே?**

ப: சன்யாச ஆசிரமத்தில் நுழையும்போது அச்யுதப்ரேக்ஷர் வைத்த பெயர் பூர்ணப்ரக்ஞர். பட்டாபிஷேகம் செய்தபிறகு வைத்த பெயர் 'ஆனந்ததீர்த்த'. ஆசாரியர் தனக்குத்தானே வைத்துக்கொண்ட பெயர் மத்வாசாரியர்.

**கே: இவரின் குருவின் பெயர் அச்யுதப்ரேக்ஷர் தானே?**

ப: இவர் பூர்ணப்ரக்ஞர் ஆனதினால், இவரது குருவின் பெயர் அச்யுதப்ரக்ஞர். இவரின் பரம்பரையில் வந்த சத்யப்ரக்ஞரின் பெயரே இதற்கு ஆதாரம். அச்யுதப்ரேக்ஷர் என்னும் சொல்லிற்கு அச்யுதப்ரக்ஞர் என்று பொருள் என்று நாராயண பண்டிதரே தனது உரையில் தெரிவித்திருக்கிறார். வேதாங்க தீர்த்தரும் அச்யுதப்ரக்ஞர் என்றே தனது உரையில் எழுதியிருக்கிறார்.

**கே: நாராயண பண்டிதரின் கிரந்தத்திற்கு சுமத்வவிஜயம் என்று சொல்லவேண்டுமா அல்லது ஸ்ரீமத்வவிஜயம் என்று சொல்லவேண்டுமா?**

ப: மத்வவிஜயம் என்று சொல்லுங்கள். இந்த பெயரில் யாருக்கும் எந்த பிரச்னையும் இல்லை.

**கே: அத்வைத மதத்தை எதிர்ப்பதற்கு வாயுதேவரே அவதரிக்க வேண்டியதாயிற்றா? மற்ற தேவர்களுக்கு அந்த சாமர்த்தியம் இருந்திருக்கவில்லையா?**

ப: அத்வைத மற்றும் இதர துர்மதங்களை எதிர்த்து, பின்னர் வைஷ்ணவ மதத்தை நிறுவி ஜகத்குரு பதவிக்கு வரும் அருகதை உள்ளவர் வாயுதேவர் மட்டுமே. மற்ற தேவர்களுக்கு கலிபிரவேசம் ஆகியிருப்பதால் அவர்களுக்கு இந்த தகுதி இல்லை. கலியினால் பாதிக்கப்படாத ஜீவோத்தமர் என்றால் அது வாயுதேவர் மட்டுமே. ஆகையால் அவரே அவதரிக்க வேண்டியதாயிற்று.

**கே: ஜகத்குரு ஆவதற்கு ஏன் கலி பிரவேசம் ஆகியிருக்கக்கூடாது?**

ப: கலியின் பாதிப்பு இருந்தால் மற்றவரை ஏமாற்றும் வாய்ப்பு வருகின்றது. ருத்ரர் முதலான தேவதைகள் சில சமயங்களில் விஷ்ணு சர்வோத்தமத்திற்கு எதிராகப் பேசியிருக்கின்றனர். நடந்திருக்கின்றனர். அத்தகைய ருத்ரர் முதலான தேவதைகள் இங்கு அவதரித்து, சர்வமூல கிரந்தங்களை இயற்றியிருந்தால் பாசுபதம் முதலான சாஸ்திரங்களைப் போல, நமக்கு அவற்றிலும் ஆதாரம் இல்லாத விஷயங்கள் தென்படும் என்கிற காரணத்தால், சர்வமூல கிரந்தங்களை இயற்றுவதற்கு -

ஜகத்குரு என்பவருக்கு - இறந்த, நிகழ் மற்றும் எதிர்காலங்களில் ஒரு நொடியும்கூட கலியின் பாதிப்பு இருக்கக்கூடாது. இப்படி இருந்தால் மட்டுமே ஒருவர் ஜகத்குரு பதவிக்கு வருவதும் சாத்தியம்.

**கே: அப்படியென்றால் இன்று பலர் தங்களை ஜகத்குரு என்று அழைத்துக் கொள்கிறார்களே, அவர்களை நாம் ஜகத்குரு என்று சொல்லலாமா?**

ப: அவரின் உலகத்திற்கு மட்டும் அவர் குரு. 14 லோகத்திற்கும் அவர் குரு ஆவதற்கு சாத்தியம் இல்லை. ஒரு நொடிகூட சந்தேகம், தவறான ஞானம் இல்லாமல் யாரொருவர் அடுத்தவரின் சந்தேகம், தவறான ஞானத்தைப் போக்குபவராக இருக்கிறாரோ அவர் மட்டுமே ஜகத்குரு ஆவதற்கு சாத்தியம். இத்தகைய ஜகத்குருவின் பதவிக்கு வருவதற்கு தகுதியானவர் வாயுதேவர் மட்டுமே. ருத்ரர் முதலான தேவதைகள் அல்ல. மனிதர்கள் நினைத்துப் பார்க்கவே தேவையில்லை.

**கே: இந்த ஜென்மத்தில் ஸ்ரீமதாசார்யர் குருகளாகி இருக்கிறார் என்றால் வேறொரு ஜென்மத்தில் வேறொருவர் குருகளாக இருப்பதற்கு சாத்தியம் உள்ளதா?**

ப: இல்லை. ஒவ்வொரு ஜென்மத்திலும் ஸ்ரீமதாசார்யரே குருவானவர். அதுமட்டுமல்லாமல், மோட்சத்திலும்கூட ஸ்ரீமதாசார்யரே குருகளாகி இருக்கின்றார். இதைப் பற்றி பின்வரும் பாகங்களில் நாம் பார்க்க இருக்கின்றோம்.

**கே: ஸ்ரீமதாசார்யரின் சர்வமூல கிரந்தங்களை மனிதர்கள் மட்டும்தான் படிக்கிறார்களா?**

ப: இல்லை. சனக முதலான முனிவர்கள், சேஷ முதலான தேவதைகள் ஆகியோரும் ஸ்ரீமதாசார்யரின் சர்வமூல கிரந்தங்களின் பாடத்தைக் கேட்பதற்கு மிகவும் ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீமதாசார்யர் தம் சிஷ்யர்களுக்கு பாடம் சொல்லிக் கொண்டிருக்கும்போது, அனைத்து தேவதைகளும் வானில் வந்து, மிகுந்த பக்தியுடன் பாடம் கேட்டுக்கொண்டிருந்தனர் என்று மத்வவிஜயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

**கே: சன்யாசிகளை ஆசார்ய என்று அழைப்பதில்லை. கிருஹஸ்தர்களை மட்டும் ஆசார்ய என்று அழைக்கிறோம். இப்படியிருக்கும்போது, ஸ்ரீமதாசார்யரை மட்டும் ஏன் ஆசார்யரு என்று அழைக்கவேண்டும்?**

ப:

ஆசினோதி ஹி சாஸ்த்ரார்த்தான் ஆசாரான் க்ராஹயத்யுத ।
ஸ்வயமாசரதே யஸ்து தமாசார்யம் ப்ரசக்ஷதே ॥

அனைத்து சாஸ்திரங்களையும் அறிந்து, அவற்றைப் பின்பற்றி, பிறருக்கும் உபதேசிக்கும் ஒருவரே ஆசார்யர் என்று அழைத்துக்கொள்ளும் தகுதி உடையவர். இந்த குணங்கள் உடைய எவரையும் ஆசார்யர் எனலாம். இந்த ஆசார்யத்வ என்னும் குணம், பரிபூர்ணமாக இருப்பது ஸ்ரீமதாசார்யருக்கு மட்டுமே.

**கே: ஸ்ரீமதாசார்யர், பரமஹம்ஸராகியே ஏன் ஜகத்குருவாக ஆகவேண்டும்? கிருஹஸ்தராக ஆகியிருக்கலாமே?**

ப: மொத்த உலகமும் பரமஹம்ஸ பதவிக்கே தலைவணங்கியது. ஆகையால், பற்பல அயோக்கியர்களும் பரமஹம்ஸ பதவியை ஏற்றிருந்தனர். தமது நற்குணங்களால், அந்த பரமஹம்ஸ ஆசிரமத்தை தூய்மையாக்குவதற்கு வாயுதேவர் பரமஹம்ஸர் ஆனார். துஷ்டர்களால் அந்த பரமஹம்ஸ பதவிக்கு வந்த தோஷங்கள் இதனால் நீங்கி, அது மிகவும் பரிசுத்தம் ஆயிற்று. மக்களுக்கு நிஜமான பரமஹம்ஸ எப்படியிருக்கவேண்டும் என்று வாழ்ந்து காட்டினார்.

**கே: இப்போதைய பரமஹம்ஸர்கள் ஆசிர்வதித்துக் கொடுக்கும் மந்திராட்சதைக்கு எவ்வளவு நற்பலன்கள் கிடைக்கின்றன. ஆனால், அப்போது ஸ்ரீமதாசார்யர் கொடுத்த மந்திராட்சதையைப் பற்றி எங்கும் சொல்லப்படவே இல்லையே?**

ப: மந்திராட்சதையைப் பற்றி எங்கும் சொல்லப்படவில்லை என்றாலும், அவரின் கையிலிருந்து எதைக் கொடுத்தாலும் அது பக்தர்களுக்கு மிகவும் நற்பலன்களைக் கொடுத்திருந்தது என்று அதைக் கண்ணாரக் கண்ட த்ரிவிக்ரம பண்டிதர் சொல்கிறார்.

ஸ்ப்ருஷ்ட்யம் கரேண விஷயப்யம்ருதாய த்ருஷ்ட்யம்
யஸ்த்யோதய: ஸ பகவான் யது ராதி கிஞ்சித் |
தத் பேஷஜம் கதவதாம் ப்ரதிக்ல்ருப்தமாயு
ர்வேதே ஸுசித்தமமுனேத்ய விசார்யமேதத் ||

ஹாலாஹல விஷம் கூட முக்யபிராணரின் கை பட்டால் அமிர்தம் ஆகிவிடும் என்று ஸ்ருதிகள் சொல்கின்றன. அதே முக்யபிராணர் தற்போது மத்வரூபத்தில் வந்து முழுநிலவைப் போல ஒளிர்ந்து கொண்டிருக்கிறார். ஆறு நற்குணங்களினால் நிரம்பிய இவர், ரோகிகளுக்குக் கொடுக்கும் பல - மந்திராட்சதைகளும் அமிர்தத்தைப் போல, நோய் தீர்க்கும் மருந்தினைப் போல ஆகின்றது என்று நாம் கண்கூடாகக் காண்கிறோம். ஆயுர்வேதத்தில் எந்தெந்த நோய்களுக்கு எந்தெந்த மருந்துகள் சொல்லப்பட்டிருக்கின்றதோ, அவை அனைத்தையும் இந்த வாயுதேவரே சரக - சுஸ்ருதர்களில் நின்று நமக்குத் தெரிவிக்கிறார். இந்த விஷயத்தில் கடுகளவும் சந்தேகமில்லை.

**கே: ஸ்ரீமதாசார்யர் த்வைத சாஸ்திரத்தை நிறுவியிருக்கிறார். ஆனால், ஜோதிட சாஸ்திரங்களைப் பற்றி கர்மசூத்ர, க்ருஹ்யசூத்ர, கல்பசூத்ரங்களைப் பற்றி சொல்லியிருப்பதாக எங்கேயும் தெரியவில்லையே?**

ப: இந்த கேள்விக்கும் த்ரிவிக்ரம பண்டிதரே பதில் அளிக்கிறார். 'ஜ்யோதிஷ சாஸ்திரம் யதேதம் பவதி புவி பவிஷ்யத்யதீதி ச சாட்சாத்'. ஜோதிட சாஸ்திரத்தைப் பற்றி முழுமையாக அறிந்திருப்பவர் என்றால் அது ஸ்ரீமதாசார்யர் மட்டுமே என்று தீர்மானமாகச் சொல்கிறார். அதுமட்டுமல்லாமல், கர்மசூத்ர, க்ருஷ்யசூத்ர, கல்பசூத்ரங்களை சிஷ்யர்கள் கேட்டுக் கொண்டால் தாமே இயற்றும் திறன் படைத்திருந்தார் என்பதை 'கர்மணாம் சத்பிரயோகம் ந்யாயானாம் சூத்ரஜாதம் யதி ச புத ஜன்யைரத்யதே கிம் ந குர்மாத்' என்று தெரிவிக்கிறார். 'ஸர்வஞாமன்ய மனவேக்ஷ்ய சர்காயவீர்யம் ஸ்மேரானனோ புவனஜீவன மாபபாஷே', 'ஸர்வதா சதஸி ஸர்வபுதானாம் ஸர்வவித்யதீரிதி ப்ரதிதோடபூத்' ஆகிய வாக்கியங்களிலிருந்து ஸ்ரீமதாசார்யர் சர்வக்ஞரே (அனைத்தும் அறிந்தவர்) என்று சொல்லப்பட்டிருக்கிறது. அவர் அனைத்து விஷயங்களைப் பற்றியும் அறிந்திருந்தார் என்று மிகத் தெளிவாக அறிந்துகொள்கிறோம்.

**கே: வாயுதேவர் ஸ்ரீமதாசார்யராக அவதரித்து எந்த இடத்தில்?**

ப: மத்வவிஜயத்தில் 'ஸரூப்யபீடே விஷ்ணும் ப்ரணம்ய' என்று சொல்லப்பட்டிருப்பதைப் போல், உடுப்பியில் அனந்தாசனத்தில் வாயுதேவர் வந்து இறங்கினார். பிறகு பாஜக க்ஷேத்திரத்திற்கு வந்து, அப்போதே பிறந்திருந்த குழந்தையின் உடலிலிருந்த ஜீவனை மாற்றி தான் அங்கே நுழைந்தார்.

**கே: வாசுதேவன், குருகுலத்தை முழுமையாக முடித்தானோ அல்லது பாதியிலேயே சன்யாசியாக ஆகிவிட்டானோ?**

ப: 10ம் வயதில் குருகுலவாசம் முடிவுற்றது. 11வது வயதில் சன்யாசியானார்.

**கே: பால-சன்யாசியான பூர்ணப்ரக்ஞர் தமது பாடம், உபன்யாசங்களை எப்படி துவக்கினார்?**

ப: துவக்கத்தில் அத்வைத மதத்தைப் பற்றியே உபன்யாசம் செய்துவந்தார். பிறகு திடீரென்று ஒரு நாள் சங்கர பாஷ்யத்தின் வாக்கியங்களில் பல்வேறு முரண்பாடுகள் உள்ளன என்று சொல்லி, பல தோஷங்களையும் எடுத்துக்காட்டி, அனைத்து சபையினரையும் ஆச்சரியப்படுத்தினார்.

**கே: வாக்யார்த்தங்களில் எப்படி இருந்தார்?**

ப: சன்யாசத்தைப் பெற்ற 11வது வயதிலேயே, வாசுதேவ பண்டிதன் என்னும் தார்கிக சிரோமணியை தோற்கடித்து தனது வாக்சாதுர்யத்தைக் காட்டினார். பிறகு,

வாதிசிம்ம, புத்திசாகர ஆகியோரை தோற்கடித்து அவர்களை இரவோடு இரவாக ஊரை விட்டு ஓடுமாறு செய்தார்.

**கே: இவரே வாயுதேவர் என்னும் விஷயம் அச்யுதப்ரக்ஞருக்கு தெரிந்திருந்ததா இல்லையா?**

ப: ஒருமுறை ஸ்ரீமதாசார்யார் தமக்குக் கொடுக்கப்பட்ட 200க்கும் மேற்பட்ட வாழைப்பழங்களைத் தின்று ஜீரணித்ததைக் கண்டு அச்யுதப்ரக்ஞர் வியந்தார். ஸ்ரீஹரியின் அருளால், மொத்த உலகத்தையும் காக்கும் திறன் தமக்கு இருப்பதாகவும், தாமே ஜீவோத்தமர் என்றும் ஸ்ரீமதாசார்யர் சொல்லிக்கொண்டபோது, இவரே வாயுதேவர் என்று அச்யுதப்ரக்ஞருக்கு தெரிந்தது.

**கே: பயணத்தில் இருந்தபோது ஸ்ரீமதாசார்யர் எப்படி பிற வாதிகளை தோற்கடித்தார்?**

ப: ஒரு முறை பயணத்தில் இருந்தபோது, விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் வரும் ஸ்ரீஹரியின் ஒவ்வொரு பெயருக்கும் நூறு அர்த்தங்கள் உள்ளன என்றார். அந்த நூறு அர்த்தங்களையும் சொல்லவும் என்று சபையினர் கேட்டுக்கொண்டதால், ஆசாரியரும் விஸ்வம் என்னும் சொல்லிற்கான நூறு அர்த்தங்களை சொல்லத் துவங்கினார். அந்த நூறு அர்த்தங்களை சொல்லி முடிப்பதற்குள்ளாகவே, அவற்றை திரும்பச் சொல்லமுடியாத பிற பண்டிதர்கள் தோற்றனர். இப்படி விஷ்ணு சஹஸ்ரநாமத்திற்கு 100 அர்த்தங்கள், மகாபாரத ஸ்லோகத்திற்கு 10 அர்த்தங்கள், வேதத்திற்கு 3 அர்த்தங்கள் உள்ளன என்னும் தத்வத்தை பிரசாரம் செய்தார்.

**கே: ஸ்ரீமதாசார்யர் முதன்முதலில் எழுதிய கிரந்தம் எது?**

ப: பகவத்கீதா பாஷ்யம். இதுவே ஸ்ரீமதாசார்யரின் முதல் கிரந்தம். இதை நாராயணனுக்கு சமர்ப்பிப்பதற்காகவே முதல் பத்ரி யாத்திரையை மேற்கொண்டார். இதனால் நாராயணன் திருப்தியடைந்து, மங்கள ஸ்லோகத்தில் இருந்த ‘சக்தித:’ என்னும் சொல்லை ‘லேஷத:’ என்று திருத்துமாறு சொல்லி ஆசிர்வதித்தார்.

**கே: பிரம்மசூத்ர பாஷ்யத்தை எப்போது இயற்றினார்?**

ப: ஸ்ரீமதாசார்யர் பத்ரிகாஸ்ரமத்திற்கு சென்றபோது அங்கிருந்த வேதவியாஸர், இவரை நரநாராயணரிடம் அழைத்துப் போனார். அங்கு நரநாராயணர், பிரம்மசூத்ர பாஷ்யத்தை இயற்றுமாறு ஸ்ரீமதாசார்யருக்கு கட்டளையிட்டார். அவரது கட்டளையின்படியே திரும்பிவந்ததும், பிரம்மசூத்ர பாஷ்யத்தை இயற்றினார்.

**கே: தனது முதல் பயணமாகவே ஸ்ரீமதாசார்யர் பத்ரிக்குப் புறப்பட்டார் அல்லவா?**

ப: இல்லை. தனது முதல் பயணமாக தென்னிந்தியாவில் ராமேஸ்வரம் வரை சென்று பிறகு உடுப்பிக்கு வந்து, கீதா பாஷ்யத்தை இயற்றி, அதன்பிறகே வட இந்தியாவிற்கு பயணம் செய்து, பத்ரிக்கு சென்றார்.

**கே: அப்படியென்றால் ஸ்ரீமதாசார்யர், குமரி முதல் இமயம் வரை சென்று விஷ்ணு சர்வோத்தமத்வத்தை நிறுவினார் என்றாகிறது அல்லவா?**

ப: ஆம். இப்படி செல்லும்போதுதான், கோதாவரி நதிக்கரையில் மிகுந்த திறன் படைத்த அத்வைதிகளான சோபனபட்டர், ஆசார்யரின் சிஷ்யரானார்.

**கே: பயணத்தில் இருந்தபோது ஆசார்யர் சேர்த்த செல்வங்கள் என்ன?**

ப: பல்வேறு தேசங்களில் சிஷ்யர்களை சேர்த்துக்கொண்டதே இவரது செல்வமாகும். உத்தமர்களுக்கு சாதனைகளை செய்வித்து, பின் உடுப்பிக்குத் திரும்பினார். இப்படி திரும்பிய மத்வாசார்யரைக் கண்ட அச்யுதப்ரக்ஞர் மிகவும் மகிழ்ந்தார். அவரும் நிறைந்த மனதுடன், ஸ்ரீமதாசார்யரின் தத்வத்தை பின்பற்றத் துவங்கினார்.

**கே: உடுப்பி கிருஷ்ணனை எதற்காக பிரதிஷ்டை செய்தார்?**

ப: முக்தியை விரும்புபவர்களுக்கு, நற்-சாஸ்திரங்களைக் கேட்பதற்கு எந்த பிரச்னைகள் வருகின்றனவோ அவற்றின் பரிகாரத்திற்காக மற்றும் அவர்கள் விரும்பிய முக்தி கிடைப்பதற்காகவும், உடுப்பி கிருஷ்ணனை பிரதிஷ்டை செய்தார்.

**கே: ஒருமுறை மேற்கு கடற்கரையில் ஸ்ரீமதாசார்யர் தமது ஆன்ஹிகங்களுக்காக அமர்ந்திருந்தார். கடலில் ஒரு கப்பல் புயலில் சிக்கி தவித்துக்கொண்டிருந்தது. அப்போது ஸ்ரீமதாசார்யர் தனது காவி ஆடையை ஆட்டி, படகை பத்திரமாக கரைக்கு வரவழைத்தார். இவர் விரும்பியதைக் கொடுக்கத் தயாரானான் அந்த மாலுமி. ஆனால் ஸ்ரீமத்வரோ கோபிசந்தனக் கட்டியை மட்டும் வாங்கிக்கொண்டார். அதற்குள் ஸ்ரீகிருஷ்ணன் இருந்தார் என்கிறார்கள். இது சரியான தகவல்தானா?**

ப: இந்தக் கதை சம்பிரதாயத்தில் வந்திருக்கிறது. சம்பிரதாயத்தில் வந்ததும் ஆதாரமே. இதே கதையை பற்பல தாசர்கள் தங்கள் பாடல்களில் பாடியிருக்கின்றனர். அதனால் இதை கட்டுக்கதை என்று சொல்லலாகாது. ஆனால், 18ம் நூற்றாண்டைச் சேர்ந்த, பலிமார் மடத்தின் பரம்பரையின் ரகுவர்யதீர்த்தர், தனது அணுமத்வ விஜயத்தில் இப்படி சொல்கிறார் - 'த்வாரகாயாம் ருக்மிணீவனாக்ய ப்ரதேஷே கோபிசந்தனமத்யே லக்னாம் கோபிசந்தனபுத்தாயா ஸாம்யாத்ரிக்யைரானீதாம் ரூப்யபீடஸமீபே ப்லவே பின்னே ஜலதௌ மக்னாம் ஸ்ரீகிருஷ்ணப்ரதிமாயானீய... மடே ப்ரதிஷ்டாபயாமாஸ'.

'த்வாரகையில் ருக்மிணி வனம் என்னும் பிரதேசத்தில் கோபிசந்தனத்தின் நடுவில் ஸ்ரீகிருஷ்ணனின் சிலை இருந்தது. சிலை இருப்பது தெரியாமல் வெறும் கோபிசந்தனம் என்று நினைத்து, கப்பலில் வைத்துக் கொண்டுவந்தார்கள். ரௌப்யபீடத்திற்கு அருகில் இருக்கும் கடலில் அந்தப் படகு மூழ்கியது. கிருஷ்ணனின் சிலையும் மூழ்கியது. இதை அறிந்த ஸ்ரீமதாசாரியர் அந்த கிருஷ்ணனின் சிலையை பெற்றுக்கொண்டு, உடுப்பியில் பிரதிஷ்டை செய்தார்' என்றார்.

**கே: தற்போது இருப்பதைப்போல் இஸ்லாமியர்கள், கிருஸ்துவர்கள், ஆசாரியர் காலத்திலும் இருந்தனரா?**

ப: வடஇந்தியாவில் இஸ்லாமியர்கள் பரவியிருந்தனர் என்பதற்கு நிறைய ஆதாரங்கள் உள்ளன. மற்றும் ஜலாலுதீன் கில்ஜி மற்றும் அல்லாவுதீன் கில்ஜி அதே காலத்தின் அரசர்களாக இருந்தனர் ஆகையால் அவர்களுக்கு ஸ்ரீமதாசார்யருடன் சந்திப்பு நடந்திருக்கக்கூடும் என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.

**கே: ஸ்ரீமதாசார்யருடன் அலாவுதீன் கில்ஜி பேசினார் என்பதற்கு என்ன ஆதாரம்?**

ப: மத்வவிஜயத்தின் பத்தாவது சர்க்கத்தில் 'ஸத்வகராஜ புருஷானுசிதவாசா' என்று துருக்கி நாட்டு வீரர்களுடன் பேசி, பின்னர் அந்த அரசனுடையே பேசினார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அரசர் ஒரு இஸ்லாமியர் ஆவார்.

**கே: எந்த மொழியில் பேசினார்?**

ப: 'இறைவனை நன்கு அறிந்தவர்களுக்கு எந்த மொழியாக இருந்தால் என்ன?' என்னும் வாக்கியத்திற்கேற்ப பெர்ஷியன் மொழியிலேயே பதிலளித்தார். உலகத்தையே கட்டிக்காக்கும் அந்த சர்வோத்தமனின் அருள் இருப்பதால், நாம் அனைத்து மொழிகளிலும் பேசுகிறோம் என்றார்.

**கே: வேறு எந்த மதங்கள் அந்தக் காலத்தில் பிரபலமாக இருந்தன?**

ப: பெரும்பான்மையாக இஸ்லாமிய மதமே இருந்தது. அடுத்த நிலையில் கிருஸ்துவர்கள் இருந்தனர். கர்நாடகத்தில் ஜைன மதம், வீரசைவ மதம், அப்போது வளர்ந்துவந்தன. இந்தியா முழுவதுமாக அத்வைத மதமே பெரும்பான்மையாக இருந்தது.

**கே: ஸ்ரீமதாசார்யர் வெறும் அத்வைத மதத்தை மட்டுமே எதிர்த்தாரா? வேறு எந்த மதங்களையும் ஏன் அவர் எதிர்க்கவில்லை?**

ப: தத்வவாதத்திற்கு எதிரான மதங்கள் அனைத்தையும் ஸ்ரீமதாசார்யர் எதிர்த்திருக்கிறார். விஷ்ணு சர்வோத்தமத்வம், வாயு ஜீவோத்தமத்வம், பஞ்சபேத,

தாரதம்ய இந்த தத்வங்களை முன்வைத்தார். இவற்றிற்கு எதிரான மதங்களின் கருத்துகளை முழுமையாக எதிர்த்தார்.

**கே: அப்படியென்றால், அத்வைத மதத்தை எதிர்ப்பதற்காகவே ஸ்ரீமதாசார்யர் அவதரித்திருக்கிறார் என்று ஏன் சொல்கிறார்கள்?**

ப: வேதத்தை ஒத்துக்கொள்கிறோம் என்று நாடகமாடி, பிரம்மனை ஒப்புக்கொள்கிறோம் என்று வெளியில் சொல்லி, உள்ளே அவரை நிர்குணன் என்று சொல்லி, நல்லவர் போல் தந்திரத்துடன் அனைவரையும் நம்பவைத்து மோசம் செய்வது அத்வைத மதம். மிகவும் அபாயமானது இது. இதை நிராகரிப்பதே முதல் கடமை. மேலும், த்வைத மதத்தைவிட்டு மற்ற அனைத்தும் அத்வைத மதத்தையே சேர்ந்தது என்று தவறாக எண்ணி, அனைவரும் அத்வைத மதத்தை நாடுகின்றனர். ஆகவே அத்வைத மதம் ஒன்றை நிராகரித்தார் என்றால், அனைத்து மதங்களையும் நிராகரித்தது போலாகும்.

**கே: சங்கராச்சார்யர் ஒருவரை மட்டுமே ஸ்ரீமதாசார்யர் தனது கிரந்தங்களில் கண்டிக்கிறார். இது ஏன்?**

ப: இப்படி நினைப்பது தவறு. ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களை சரிவர படித்தால், சங்கராசார்யரின் பெயரைச் சொல்லி ஒருமுறைகூட அவர் கண்டனம் செய்யவில்லை என்று தெரியவரும். அவர் எந்த மதாசார்யரின் பெயரைச் சொல்லியும் பேசவில்லை. பஞ்சபேதம், தாரதம்யம் ஆகிய விஷயங்களுக்கு எதிரானவைகளை மட்டுமே எதிர்ப்பது ஸ்ரீமதாசார்யரின் நோக்கம். இதுவே அவரது காம்பீர்யத்தின் உச்சம்.

**கே: அப்படியென்றால், இன்றைய விஞ்ஞான மதத்தையும் ஸ்ரீமதாசார்யர் கண்டித்திருக்கிறாரா?**

ப: ஆம். இயற்கையே அனைத்திற்கும் அடிப்படை. ஸ்ரீஹரியின் பங்கு இல்லாமலேயே, உலகத்தின் அனைத்து நடவடிக்கைகளும் இயங்குகின்றன என்றவாறு, வேதங்களையும் ஒதுக்கிவைக்கும் நாத்திகர்களின் வாதங்களை, ஸ்ரீமதாசார்யர் தனது கிரந்தங்களில் திட்டவட்டமாக கண்டிக்கிறார்.

**கே: நீங்கள் சொல்லும் விஷயம், ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்கள் எதிலுமே காணப்படவில்லையே?**

ப: சுருங்கச் சொல்லி விளங்க வைப்பவர் ஆசாரியர். பக்கம்பக்கமாக விளக்க வேண்டிய விஷயங்களை ஒரே ஒரு வாக்கியத்தில் சொல்லும் திறன் படைத்தவர். அவரது கிரந்த நடை, எப்பேர்ப்பட்ட மேதாவிகளும் பின்பற்றக் கஷ்டப்படுவர்.

‘ப்ராந்திமூலதயா ஸர்வஸமயானுயமுக்தித: ।
ந தத்விரோதத்வஜனம் வைதிகம் சங்க்யதாம் ப்ரஜேத் ॥’

அணுபாஷ்யத்தின் இந்த வரியானது, உலகத்தில் உள்ள அனைத்து குபாஷ்யங்களை கண்டித்ததற்கு ஒரு சரியான உதாரணமாகும்.

**கே: அத்வைத மதம் மட்டுமல்லாது இதர மதங்களை கண்டனம் செய்ததற்கு ஏதேனும் உதாரணம் இருக்கிறதா?**

ப: மத்வவிஜயத்தில் 15ம் சர்க்கத்தில், த்ரிவிக்ரம பண்டிதருடன் வாதம் செய்யும் நேரத்தில், இதர பல மதங்களையும் கண்டனம் செய்ததற்கு உதாரணம் உள்ளது.

**கே: த்ரிவிக்ரம பண்டிதர் யார்?**

ப: ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களைக் காப்பதற்காக சங்கர பண்டிதர் என்று ஒருவர் இருந்தார். அவரது சகோதரரே த்ரிவிக்ரம பண்டிதர். பஜத்தாய வம்சத்தில் பிறந்த இவர், குமரி முதல் இமயம் வரை பயணித்து, அத்வைத சாஸ்திரத்தை பிரசாரம் செய்வதில் மிகவும் முக்கியமானவராக இருந்தார்.

**கே: அத்வைத சித்தாந்தத்தில் மூழ்கியிருந்த இவர், வாயுஸ்துதி இயற்றுவதற்கு எப்படி சாத்தியமாயிற்று?**

ப: ஸ்ரீமதாசார்யருடன் வாதத்திற்கு இறங்கி, கேள்வி மழைகளைக் கேட்டு, பின் ஆசாரியரிடம் வாதத்தில் தோற்றுப் போனார். அதுமட்டுமல்லாமல் ஆசாரியரின் சித்தாந்தத்திற்கு ஒப்புதல் அளித்து, அவரின் சிஷ்யராகி, தன் வாழ்க்கையை மாற்றிக்கொண்டார். ஆசாரியரின் சிஷ்யர்களில் இவர் தலைசிறந்தவர் ஆனார். ஸ்ரீமதாசார்யர் இவருக்கு செய்த உதவியை எண்ணி, தன் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொண்டார். அவரிடம் மிகுந்த பக்தி கொண்டு, வாயுஸ்துதியை இயற்றி, அனைத்து மாத்வர்களுக்கும் மிகப்பெரிய உதவியைச் செய்தார்.

**கே: தனது கிரந்தங்களை ஆசாரியர், மிகவும் கடினமான சொற்களால் / வாக்கியங்களால் எழுதியிருக்கிறார். ஏன்? இப்படி எழுதினால் மக்களுக்கு இவை போய் சேருவதில் கஷ்டம் இருக்கும்தானே?**

ப: இதற்கான பதிலையும் ஸ்ரீமதாசார்யரே சொல்லியிருக்கிறார். தனது மூலகிரந்தங்களை சாதாரண மக்களிடம் போய் சேர்ப்பதற்கு, அவரே பல பாடல்களை இயற்றியிருக்கிறார். இதிலிருந்தே தாச-பரம்பரையும் தொடங்கியது. ஹ்ருஷிகேச தீர்த்தர் மற்றும் நரஹரி தீர்த்தர் இருவரும் அந்தப் பாடல்களினால் கவரப்பட்டனர். பிறகு, ஸ்ரீபாதராயர், ஸ்ரீவியாசராஜர், ஸ்ரீவாதிராஜர், மிகுந்த திறமைகளுடன் அந்த பாடல்களை வளர்த்தெடுத்தனர். இப்படியாக வியாஸ-பரம்பரை, தாச-பரம்பரை இரண்டுமே ஹரிசர்வோத்தமத்வத்தை நிறுவுவதற்காக எல்லா இடங்களிலும் வளர்ந்தது. புரந்தரதாசர், கனகதாசர், விஜயதாசர், கோபாலதாசர், ஜகன்னாததாசர் ஆகியோர் ஸ்ரீமதாசார்யர் போட்டுக்கொடுத்த

பாதையிலேயே சென்று, வேதங்களின் பொருளை சாதாரண மக்களுக்கு தெளிவான கன்னடத்தில் விளக்கினர். இதெல்லாம் ஸ்ரீமதாசார்யரின் கொடையே அன்றி வேறெதுவும் இல்லை.

**கே: மத்வவிஜயத்தின் சாராம்சம் என்ன?**

ப:

ந மாதவ ஸமோ தேவோ ந ச மத்வஸமோ குரு: |
ந தத்வாக்யஸமம் சாஸ்திரம் ந ச தக்ஞ: ஸம: புமான் ||

நாராயணருக்கு நிகரான இன்னொரு தெய்வம் இல்லை. மத்வருக்கு நிகரான இன்னொரு குரு இல்லை. அவரது சொல்லிற்கு நிகரான இன்னொரு சாஸ்திரம் இல்லை. இவற்றைத் தெரிந்துகொண்ட புருஷருக்கு நிகரான இன்னொரு புருஷர் இல்லை.

இந்த விஷயத்தை மத்வர் தாமே, தமது சிஷ்யர்களுக்கு, அவர் மௌனவிரதத்தில் இருந்தபோது தெரியப்படுத்தியிருக்கிறார். ‘நேத்ருஷம் ஸ்தலமலம் ஷமலக்னம் நாஸ்ய தீர்தஸலிலஸ்ய ஸமம் வா: | நாஸ்தி விஷ்ணுஸத்ருசம் நனு தைவம் நாஸ்மதுக்திஸத்ருசம் ஹிதரூபம் || பத்ரிக்கு நிகரான இன்னொரு இடம் இல்லை. கங்கைக்கு நிகரான இன்னொரு தீர்த்தம் இல்லை. விஷ்ணுவிற்கு நிகரான இன்னொரு தெய்வம் இல்லை. நம் பேச்சிற்கு நிகரான இன்னொரு நற்சொற்கள் இல்லை.

இந்த ஸ்லோகத்தில் மத்வர் தெரியப்படுத்தியிருக்கும் தத்வமே மிகவும் முக்கியமானதாகும். இதுவே நாராயண பண்டிதர் இயற்றியிருக்கும் மத்வவிஜயத்தின் சாராம்சம் ஆகும். இதனை நாம் நன்கு அறிந்து, நம் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக மாற்றிக்கொள்ள வேண்டும்.

**கே: மத்வரே குருகளாவதற்கு என்ன பாக்கியம் செய்திருக்கவேண்டும்?**

ப:

ஸதிய ஜடரதொள் அவதரிஸி பாரதிரமண மத்வாபிதானபி
சதுரதசலோகதொளு மெரெவ அப்ரதிமக்பிவந்திஸுவே

மணிமந்தன் முதலான பல்வேறு அசுரர்கள் பூமியில் பிறந்து, 21 குபாஷ்யங்களை இயற்றினர். அப்போது த்ரைலோகாசார்யரான முக்யபிராணர், மத்யகேஹ பட்டரின் வீட்டில் பிறந்தார். மத்வ என்னும் பெயர் பெற்று, 14 உலகங்களிலும் புகழ்பெற்றார். இப்படியாக ஜகன்னாததாசர், மத்வரை வெறும் நம் உலகிற்கு குரு அல்ல, 14 உலகங்களுக்கும் குருவானவர் என்று நிறுவியிருக்கிறார். இத்தகையவரை நம் இந்த வாழ்க்கையில் குருவாகப் பெற்றதற்கு, ஆயிரமாயிரம் ஆண்டுகளில் நாம் செய்த நற்செயல்களே ஆகும் என்று மகிழ்ச்சியடைவோம்.

**கே: மத்வாசாரியரின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: தனக்கு நல்ல வாரிசு உருவாகவேண்டுமென்று, மத்யகேஹ பட்டர் உடுப்பியின் அனந்தேஸ்வர ஆலயத்தில் 12 ஆண்டுகள் பல்வேறு விரதங்களைச் செய்து வேண்டி வந்தார். இதன் பலனாக, ஜகத்குருவான வாயுதேவரே அவரிடம் அவதரித்தார். மத்யகேஹ தம்பதிகள் அந்த குழந்தைக்கு வாசுதேவ என்று பெயரிட்டனர்.

வாசுதேவன் குழந்தையாக இருந்தபோதே கொள்ளைத் தின்று ஜீரணம் செய்தான். மூன்று வயதிலேயே, தன் பெற்றோருக்குத் தெரியாமல், தன்னந்தனியாக காடுகளில் அலைந்து, உடுப்பி அனந்தேஸ்வர ஆலயத்திற்குச் சென்றான். புளியங்கொட்டையின் மூலம் தந்தை பட்ட கடனை அடைத்தான். இந்தக் குழந்தையைக் கொல்வதற்காக மணிமந்த அசுரன் பாம்பின் வடிவத்தில் வந்தபோது, அதை தன் கால் கட்டைவிரலால் நசுக்கிக் கொன்றான்.

ஐந்தாம் வயதில் அக்ஷராப்யாசம் ஆயிற்று. சரியான வயதில் உபநயனமும் ஆயிற்று. பத்து வயதில் குருகுலவாசமே முடிந்தது. பதினோறாம் ஆண்டில் சன்யாச ஆசிரமத்தை ஸ்வீகரித்து, வாசுதேவனே பூர்ணப்ரக்ஞனானார்.

பதினோறாம் வயதில் பூர்ணப்ரக்ஞருக்கு கங்கா ஸ்நானம் செய்ய விருப்பம் வந்தபோது, கங்காதேவியே மத்வசரோவரத்தில் வந்து இறங்கினாள். வாதிசிம்ஹ மற்றும் புத்திசாகரன் என்னும் அத்வைத பண்டிதர்களை வாதத்தில் தோற்கடித்தார். தென்னிந்தியாவிற்கு தனது முதல் பயணத்தை மேற்கொண்டார். பிறகு கீதா பாஷ்யத்தை இயற்றி, வட இந்திய பயணத்திற்காகப் புறப்பட்டார். சர்வமூல கிரந்தங்களில் முதலாம் கிரந்தமான கீதா பாஷ்யத்தை பத்ரிஆசிரமத்தில் நாராயணனுக்கு சமர்ப்பித்தார். பிறகு மேல் பத்ரிக்குச் சென்று பிரம்மசூத்திரத்தின் முழுமையான பொருளை வேதவியாசரிடமிருந்து உபதேசம் பெற்றார். மறுபடி உடுப்பிக்கு வந்து, பிரம்மசூத்திர பாஷ்யம் மற்றும் பிற கிரந்தங்களை எழுதினார். அத்வைத மற்றும் பல துர்மதங்களைக் கண்டித்து, வைஷ்ணவ சித்தாந்தத்தை நிறுவினார்.

விஷ்ணுவே சர்வோத்தமன். வாயுவே ஜீவோத்தமன். பஞ்சபேதங்கள் இருப்பது உண்மையாகும். ஒவ்வொருவரிடமும் தாரதம்யம் (படிநிலை) உள்ளது. மோட்சத்திலும்கூட தாரதம்யம் உள்ளது. அனைத்து வேதங்களாலும் போற்றப்படுபவன், விளக்கப்படுபவன் விஷ்ணு மாத்திரமே. இவை போன்ற தத்துவங்களை உலகத்தில் நிறுவினார். இந்த தத்துவங்களை நான் உருவாக்கவில்லை. அனைத்தும் ஏற்கனவே ஸ்ருதி-ஸ்ம்ருதி, பிரம்மமீமாம்ச சாஸ்திரம் மற்றும் புராணங்களில் ஏற்கனவே நன்றாக விளக்கப்பட்டிருக்கிறது என்று நிரூபித்தார். இத்தனை சிறப்பு வாய்ந்த மத்வாசார்யரே நமது குரு. என்றென்றும் இவரே நம்மை கரை சேர்க்கக்கூடியவர்.

***

# ஜகத்குரு ஸ்ரீமதாசார்யரின் சர்வமூலகிரந்தங்கள்

**கேள்வி: சர்வமூல கிரந்தங்களை பெண்கள் படிக்கலாமா?**

பதில்: கண்டிப்பாக படிக்கக்கூடாது.

**கே: சில கல்லூரிகளில் பெண்களுக்கும் சர்வமூல கிரந்தங்களை சொல்லிக் கொடுக்கிறார்களே?**

ப: இது தவறு.

**கே: வேதத்திற்கு சம்பந்தப்பட்டவற்றைத் தவிர இதர சர்வமூல கிரந்தங்களை படிக்கலாம் என்கிறார்களே?**

ப: சர்வமூல கிரந்தங்கள் அனைத்தும் வேதங்களுக்கு சமம் என்றே கருதப்படுகின்றன. பெண்கள், நான்காம் வர்ணத்தவர்கள் மற்றும் பிரம்மபந்துகளுக்கு (பிறப்பால் பிராமணராக இருந்தாலும், அதற்கான தகுதியை இழந்தவர்கள்) சர்வமூல கிரந்தங்களைப் படிப்பதற்கு அதிகாரமில்லை.

**கே: 'க்ராமே க்ராமீணஸாமான்யே' (மத்வவிஜய, 15-1) என்னும் ஸ்லோகத்தைப் பார்த்தால், ஸ்ரீமதாசார்யரே பொதுமக்களின் முன் சர்வமூல கிரந்தங்களின் உபன்யாசத்தை செய்திருக்கிறார் என்று தெரிகிறதே?**

ப: உபன்யாசத்தின் மூலம் அனைத்து சர்வமூல கிரந்தங்களையும் அனைவரும் கேட்கலாமே தவிர, புத்தகம் வைத்துக்கொண்டு பாடம் படிப்பதற்கு அவர்களுக்கு அதிகாரம் இல்லை என்பதே இதன் பொருள்.

**கே: த்வாதச ஸ்தோத்திரத்தை மட்டும் பெண்கள் ராகத்துடன் பாடலாம் என்கிறார்களே?**

ப: த்வாதச ஸ்தோத்திரம் சர்வமூல கிரந்தத்தில் சேர்த்தி இல்லை என்று அவர்கள் நினைத்தார்களேயானால், தாராளமாகப் பாடட்டும்.

**கே: சர்வமூல கிரந்தங்கள் என்றால்?**

ப: ஜகத்குரு ஸ்ரீமதாசார்யர் இயற்றிய கிரந்தங்களுக்கு சர்வமூல கிரந்தங்கள் என்று பெயர்.

**கே: எவ்வளவு கிரந்தங்கள்?**

ப: சரியான பதில் அளிப்பது கஷ்டம்.

**கே: அப்படியென்றால் சர்வமூல கிரந்தங்கள் மொத்தம் 37 என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வதில்லையா?**

ப: 37 கிரந்தங்களே சர்வமூலம் என்று யார் சொல்கிறார்களோ, அவர்களே இன்னும் அதிக கிரந்தங்கள் உள்ளன என்று நம்பிக்கையுடன் இருக்கிறார்கள். ஆகையால் ஸ்ரீமதாசார்யர் நிறைய கிரந்தங்கள் எழுதியிருக்கிறார் - அவற்றில் நமக்குக் கிடைத்தது 37 மட்டுமே என்று அறியவேண்டும்.

**கே: நீங்கள் இப்படி சொல்வதற்கு என்ன ஆதாரம்?**

ப: நானாசுபாஷிதஸ்தோத்ர காதாதிக்ருதிஸத்க்ருதீ: |
த்வயி ரத்னாகரே ரத்னஷ்ரேணீர்வா கணயந்தி கே ||
(மத்வ விஜய 15-84)

ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங்களை எண்ணுவதற்கு யாராலும் சாத்தியமில்லை என்று நாராயண பண்டிதர் கூறுகிறார். பல கிரந்தங்களை ஆசாரியரின் சிஷ்யர்கள் படி எடுத்துள்ளனர். பற்பல கிரந்தங்களை அவர்களால் படியெடுக்க முடிந்திருக்கவில்லை.

**கே: நமக்குக் கிடைத்த கிரந்தங்களை மட்டும் கணக்கிட்டு மொத்தம் 37 சர்வமூல கிரந்தங்கள் என்று சொல்லலாமல்லவா?**

ப: சொல்லலாம். ஆனால் மேலும் கிரந்தங்கள் கிடைத்தால், அவற்றை ஒப்புக்கொள்ளும் பரந்த மனம் வேண்டும்.

**கே: ஹ்ருஷிகேச தீர்த்தரின் கையெழுத்துப் பிரதியில் 51 கிரந்தங்கள் கிடைத்துள்ளன என்கிறார். அந்த மிச்ச 14 கிரந்தங்கள் எவை?**

ப: கந்துக ஸ்துதியையும் சேர்த்து மொத்தம் 38 கிரந்தங்கள் என்பது வாடிக்கை. இதனுடன் நியாய பத்ததி மற்றும் திதி நிர்ணய கிரந்தங்களைச் சேர்த்தால் 40 ஆகிவிடும். த்வாதச ஸ்தோத்திரங்களை தனித்தனி கிரந்தங்களாக கணக்கிட்டால் மொத்தம் 51 என்று சொல்லலாம். ஆனால், நாராயண பண்டிதர், ஸ்ரீமதாசாரியரை 'ஷத கிரந்தகர்த்ரு' (நூறு கிரந்தங்கள் எழுதியவர்) என்கிறார். முன்னர் சொன்ன ஸ்லோகத்தில் 'அஸங்க்ய கிரந்தகர்த்ரு' (எண்ணிக்கையில்லாத கிரந்தங்கள் எழுதியவர்) என்றும் சொல்லியிருக்கிறார்.

**கே: சர்வமூல கிரந்தத்தில் எந்த கிரந்தத்தை நாராயண பண்டிதர் அதிகமாகப் புகழ்ந்திருக்கிறார்?**

ப: அனைத்தையுமே சரிசமமாகவே புகழ்ந்திருக்கிறார். ஒன்பதாம் சர்க்கத்தில், பிரம்மசூத்திர பாஷ்யத்தை பற்பல ஸ்லோகங்களின் மூலம் வர்ணித்திருக்கிறார்.

**கே: பிரம்மசூத்திர பாஷ்யத்தின் சிறப்பு என்ன?**

ப: மோட்ச சாஸ்திரம் என்றே இதற்குப் பெயர். 'மஹானந்த தீர்த்தஸ்ய யே பாஷ்யபாவம்' என்னும் மத்வவிஜய ஸ்லோகம் - மோட்சம் வேண்டுமென்றால் இந்த கிரந்தத்தை முழுவதுமாக படிக்கவேண்டியது அவசியம் - என்கிறது. இந்த சிறப்பான கிரந்தத்தை, ஸ்ரீமதாசார்யர், பத்ரி நாராயணரின் சன்னிதியில் இயற்றியிருக்கிறார். 21 குபாஷ்யங்களில் இருக்கும் தோஷங்களை கவனித்து, பிரம்மசூத்திரத்தின் சரியான பொருளை அனைவரும் தெரியப்படுத்துவதற்காக இந்த கிரந்தத்தை இயற்றியிருக்கிறார்.

அனைத்து வேதங்களையும் ஸ்ரீஹரியிடம் சமர்ப்பிப்பதன் மூலம் அவரின் குணபரிபூர்ணத்தை நிறுவினார். அத்தகைய ஸ்ரீஹரியிடம் ஒரு துளி தோஷம் இருப்பதற்கும் சாத்தியம் இல்லை என்று நிரூபித்து, வாழ்க்கையில் முக்கியமான சாதனையைப் பற்றி தெரிவித்து, மோட்ச ஸ்வரூபத்தை மிகவும் அற்புதமாக இந்த கிரந்தத்தில் நிர்ணயம் செய்திருக்கிறார்.

இதே பிரம்மசூத்திர பாஷ்யத்தை பாடம் எடுக்கும்போது, சனகாதி ரிஷிகள், சேஷாதி தேவதைகள் ஆகியோர் வந்து அந்த பாடத்தை கேட்பர் என்று பண்டிதர் எழுதியிருக்கிறார்.

**கே: உபநிஷத்களில் ஆசார்யருக்கு மிகவும் பிடித்தமான உபநிஷத் எது?**

ப: ஐதரேய உபநிஷத் ஆசார்யருக்கு மிகவும் பிடித்ததாகும். அவர் தன்னுடைய அவதார வேலையை முடிக்கும் அந்த இறுதிக் கணத்திலும், அனந்தேஷ்வரத்தில், இந்த உபநிஷத்தையே பாடம் எடுத்துக்கொண்டிருந்தார். இது ரிக்வேதத்தை சேர்ந்தது. நாராயண தத்வத்தின் ரகசியம் இதில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த உபநிஷத்தை பிரம்மதேவர், ரிஷிபரம்பரைக்கு உபதேசிப்பதாக உள்ளது.

**கே: பத்து உபநிஷத்களின் விவரங்களைக் கூறவும்.**

ப:

1. ஐதரேய உபநிஷத்
2. ப்ருஹதாரண்யக உபநிஷத் - இது சுக்ல யஜுர்வேதத்தை சேர்ந்தது. சூர்யதேவர் இதை கற்று, யக்ஞவால்க்யருக்கு உபதேசித்தார். இதை காண்வோபநிஷத் என்றும் அழைக்கிறார்கள்.
3. சந்தோக்ய உபநிஷத். ஹயக்ரீவ தேவரின் வாயிலிருந்து வந்த இந்த உபநிஷத்தை, சேஷசாயியான ஸ்ரீஹரியைக் குறித்து ரமாதேவி துதிக்கிறார்.
4. தலவகாரோபநிஷத். பிரம்ம-ருத்ரர் இருவரும் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்வதைப் போல் இருக்கும் இந்த உபநிஷத், சாமவேதத்தை சேர்ந்தது.

5. காடகோபநிஷத். மிகவும் பிரபலமான நசிகேதனின் கதை இதில் உள்ளது. யஜுர்வேதத்தைச் சேர்ந்தது.
6. தைத்திரிய உபநிஷத். இது கிருஷ்ண யஜுர்வேதத்தை சேர்ந்தது. இதில் ஸ்ரீஹரியின் ஐந்து ரூபங்களை பூஜிக்கும் விதம் மற்றும் அதன் சிறப்புகளும் உள்ளது.
7. அதர்வண உபநிஷத். இது அதர்வண வேதத்தை சேர்ந்தது. பர-அபர வித்யைகளின் பிரச்னைகளை தீர்ப்பதற்காக இது பிறந்தது.
8. ஷட்ப்ரஷ்னோபநிஷத். இது அதர்வண வேதத்தை சேர்ந்தது. முக்தியிலும்கூட ஜீவர்கள் தாஸ்ய-பாவத்திலேயே இருக்கிறார்கள் என்று வர்ணிக்கிறார்கள்.
9. ஈசாவாஸ்யோபநிஷத். இது சுக்லயஜுர் வேதத்தை சேர்ந்தது. மிகவும் சிறிய உபநிஷத் ஆனாலும், தத்வங்களின் மிகச் சிறந்த விஷயங்களைப் பற்றி பேசுகிறது.
10. மாண்டுகோபநிஷத். இது அதர்வண வேதத்தை சேர்ந்தது. ஸ்ரீஹரியின் ரூபத்ரய (மூன்று ரூபங்கள்) பற்றி இதில் சிறந்த தகவல்கள் உள்ளன.

இந்த 10 உபநிஷத்களுக்கும் ஸ்ரீமதாசார்யர் உரை எழுதியிருக்கிறார். இதற்கு 'உபநிஷத் ப்ரஸ்தான' என்று பெயர். இவற்றிக்கு ஸ்ரீமதாசார்யர் உரை எழுதியதின் மூலம், இவற்றைப் படிப்பதற்கு மிகவும் எளிய வழியை சொல்லித் தந்திருக்கிறார்.

**கே: வேதபிரவசனாச்சார்யர் என்று பெயர் பெற்றிருக்கும் ஸ்ரீமதாசார்யர், வேதத்திற்கு உரை எழுதியிருக்கிறாரா?**

ப: வேத அர்த்தங்களை நிர்ணயம் செய்வதற்காக ஸ்ரீமதாசார்யர், ரிக் பாஷ்யம் எழுதியிருக்கிறார். 40 ஸ்லோகங்களுக்கு பொருளை எழுதி, மொத்த வைதிக உலகத்திற்கும் அதன் உட்கருத்தை தெரிவித்திருக்கிறார். அனைத்து கிரந்தத்திற்கும் முடிவுரை இருந்தும், ரிக் பாஷ்யத்திற்கு மட்டும் ஸ்ரீமதாசார்யர் முடிவுரை எழுதவில்லை. இதிலிருந்து, இன்னும் சில வேத பாகங்களுக்கு அவர் உரை எழுதியிருக்கலாம் என்று அறிஞர்கள் சொல்கிறார்கள்.

**கே: கீதா ப்ரஸ்தானம் என்றால் எந்த கிரந்தங்கள்? அவற்றின் சிறப்பு என்ன?**

ப: முதன்முதல் கிரந்தமாக ஸ்ரீமதாசார்யர் எழுதிய கிரந்தமே - கீதா பாஷ்யம். முதலாம் பத்ரி பயணத்தில், நாராயணனுக்கு சமர்ப்பிக்கவேண்டும் என்று கொண்டு சென்ற கிரந்தமே இந்த கீதா பாஷ்யம். மற்றொரு கிரந்தம் கீதா தாத்பர்ய நிர்ணயம். கீதையின் சாராம்சத்தை, அதன் தத்வத்தை அனைவரும் அறியுமாறு இந்த கிரந்தத்தை இயற்றியுள்ளார். கீதா தாத்பர்யம் மற்றும் கீதா பாஷ்யம் இந்த இரண்டு கிரந்தங்களும், சூரிய சந்திரர்களைப் போல, மொத்த உலகத்திற்கும் ஒளியைத் தருகின்றன என்று வர்ணிக்கிறார் நாராயண பண்டிதர்.

**கே: புராண மற்றும் இதிகாச கிரந்தங்களை நாம் எப்படி படிக்கவேண்டுமென்று ஸ்ரீமதாசார்யர் ஏதேனும் வழி காட்டியிருக்கிறாரா?**

ப: இந்த கேள்விக்கு பதில் அளிப்பதற்காகவே ஸ்ரீமதாசார்யர், மகாபாரத தாத்பர்ய நிர்ணய கிரந்தத்தை எழுதியிருக்கிறார். இது வெறும் மகாபாரத்தின் பொருளை நிர்ணயம் செய்வதற்காக எழுதப்பட்டது அல்ல, மொத்த சாஸ்திரங்களின் பொருளை நிர்ணயம் செய்வதற்காக எழுதப்பட்டது என்று ஸ்ரீமதாசார்யர் அவரே 'சமஸ்த சாஸ்த்ரார்த்த வினிர்ணயோsயம்' சொல்கிறார். இரண்டாம் முறையாக பத்ரி யாத்திரை செய்தபோது, அங்கு நாராயணரின் ஆசிரமத்தில், வேதவியாசரின் கட்டளைக்கிணங்க, ஸ்ரீமதாசார்யர் எழுதிய கிரந்தமே இது. அதனாலேயே இந்த கிரந்தம் மிகச் சிறப்பு வாய்ந்தது என்று கருதலாம். இதனை படிக்காதவர்கள் மாத்வர் என்று சொல்லிக்கொள்ளவே கூடாது என்னும் வாக்கியம் பிரபலமாக இருக்கிறது.

**கே: பாகவத கிரந்தத்தை படிப்பதற்கு ஸ்ரீமதாசார்யர் என்ன வழி காட்டியிருக்கிறார்?**

ப: 18 புராணங்களில், பாகவத புராணத்திற்கு ஸ்ரீமதாசார்யர் பொருள் எழுதியிருக்கிறார். அனைத்து புராணங்களையும் எப்படி புரிந்து கொள்ளவேண்டும் என்று இதிலிருந்து வழி காட்டியிருக்கிறார். ரகசிய, தத்துவ, சாராம்ச வாக்கியங்களை அறிந்து புராணங்களை எப்படி படிக்கவேண்டும் என்பதை இந்த கிரந்தத்தில் மூலம் தெரிவிக்கிறார். மிகவும் சுருக்கமான உரையானாலும், இது ஒரு பெரிய கிரந்தம் ஆகும்.

**கே: வாஸ்து சாஸ்திரம், சில்ப சாஸ்திரம், ஜப-தபம், ஆசார-விசாரம் இதற்கு சம்பந்தப்பட்டவாறு எந்த கிரந்தத்தை எழுதியிருக்கிறார்?**

ப: இவை அனைத்திற்கும் பதில் அளிக்கும் விதமாக, தந்திரசார சங்க்ரஹம் என்னும் கிரந்தத்தை எழுதியிருக்கிறார். தேவதைகள் எப்படி கல்பவிருக்ஷத்தை வேண்டி தமக்கு வேண்டியதை பெறுகின்றரோ, அப்படியே தந்திரசார என்னும் கல்பவிருக்ஷத்தை படிக்கும் சாதகர்கள் தாங்கள் வேண்டியவற்றைப் பெறுகின்றனர், என்கிறார் நாராயண பண்டிதர். இந்த கிரந்தத்தில் மொத்தம் 400 ஸ்லோகங்கள் உள்ளன. அஷ்டமஹா மந்திரங்கள், தேவரபூஜை, ஆலய நிர்மாண விதிகள், பிரம்மகலச, உற்சவம், சிற்பக்கலை, 70 மந்திரங்கள், ஜபம், தியானம், யந்திரம், ஹோமவிதிகள் - ஆகிய அனைத்தைப் பற்றியும் இந்த கிரந்தத்தில் விளக்கமாகச் சொல்லியிருக்கிறார்.

**கே: ப்ரகரண கிரந்தங்கள் என்றால் எவை என்று சொல்லுங்கள்.**

ப: மொத்தம் 10 ப்ரகரண கிரந்தங்கள் உள்ளன.

1. ப்ரமாண லக்ஷணம்: பிரமாணம் இரு வகைப்படும். வெறும் பிரமாணம். அனுபிரமாணம். இதைப் பற்றி இந்த கிரந்தத்தில் விளக்கியிருக்கிறார். எந்தவொரு விஷயத்தையும் விளக்குவதற்கு, கொடுக்கப்படும் ஆதாரங்களைப் பற்றி தெரியவேண்டுமென்றால், நமக்கு இருப்பது இந்த ஒரே ஒரு கிரந்தம் மட்டுமே.

2. கதாலக்ஷணம்: 24 ஸ்லோகங்கள் கொண்டது. அல்லது ஹ்ருஷிகேச தீர்த்தரின் பாடத்தின்படி, 32 ஸ்லோகங்களைக் கொண்டது. வாதவிவாதங்கள் எப்படி இருக்கவேண்டும், சிஷ்யருடன் எப்படிப் பேசவேண்டும், ஒரு பெரிய சபையில் எப்படி பேசவேண்டும், ஒரு சபையை எப்படி நடத்தவேண்டும், எதிராளியை எப்படி வாதத்தில் வீழ்த்தவேண்டும் - இவற்றைப் பற்றி தெரியவேண்டுமென்றால், கதாலக்ஷண கிரந்தத்தைப் படிக்கவேண்டும்.

3. விஷ்ணுதத்வ நிர்ணயம்: இருக்கும் விஷயத்தினாலும் மற்றும் அளவினாலும் இது மிகப்பெரிய கிரந்தம். இதில் மூன்று பாகங்கள் உள்ளன. வேதங்களின் துவக்கம், வர்ண நிர்ணயம், பிரபஞ்ச சத்யத்வ (உலகம் உண்மை) ஆகிய விஷயங்களைப் பேசும் கிரந்தம் இது.

4. தத்வோத்யோத: இந்த கிரந்தத்திற்கு வாதம் என்றே பெயர். காசர்கோடில் விஷ்ணுமங்கள என்னும் கிராமத்தில் பத்மதீர்த்தருடன் செய்த வாத விவாதத்தின் விவரங்கள் இதில் உள்ளது. மாயாவாதிகள் எப்படிப்பட்டவர்கள் என்பதை இந்த கிரந்தத்தில் விளக்கியுள்ளார்.

5. மாயாவாத கண்டனம்: எந்த அஞ்ஞானத்தினால் அத்வைத மதம் ஆகியிருக்கிறதோ, அந்த அஞ்ஞானத்தை கண்டனம் செய்து, அதன் மூலம் அனைத்து அத்வைத மதங்களையும் ஒதுக்கிய மிக அற்புதமான கிரந்தம் இது.

6. உபாதி கண்டனம்: அஞ்ஞானம் என்னும் உபாதி நீங்கினால், ஜீவபிரம்ம ஐக்யம் ஏற்படுகிறது என்பது அத்வைதிகளின் வாதம். இந்த வாதத்தை ஸ்ரீமதாசார்யர் பல்வேறு நிலைகளில் கண்டனம் செய்கிறார். ஜீவனுக்கும் பரமாத்மாவிற்கும் ஸ்வபாவத்திலேயே வேறுபாடு உள்ளது. இவை எப்போதும் ஒன்றாகவே முடியாது என்கிறார். அத்வைதிகள் சொல்லும் உபாதியை கண்டனம் செய்வதற்கு வந்த கிரந்தமே இது.

7. மித்யாத்வ அனுமான கண்டனம்: அத்வைதிகள் உலகத்தை 'வித்யாபூத' என்கிறார்கள். மித்யாத்வத்தை கண்டனம் செய்வதன் மூலம், ஜகத்-சத்யம் என்பதை நிரூபிக்க இந்த கிரந்தம் பிறந்திருக்கிறது. இந்த மூன்று கிரந்தங்களை கண்டய-த்ரய என்று அழைக்கின்றனர். ஹ்ருஷிகேச தீர்த்தரின் புத்தகத்தில் மாயாவத தூஷண, உபாதி தூஷண, மித்யாத்வ அனுமான தூஷண என்று இவற்றின் பெயர்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

8. தத்வசங்க்யான: வெறும் 12 ஸ்லோகங்கள் மட்டுமே உள்ள சிறிய கிரந்தம். ஆனால் உலகத்தில் உள்ள அனைத்து விஷயங்களையும் 'இதமித்தம்' என்று பிரித்து விளக்கியிருக்கிறார்.

9. தத்வ விவேக: 11 ஸ்லோகங்கள் மட்டுமே உள்ள சிறிய கிரந்தம். தத்வசங்க்யான என்னும் மூல கிரந்தத்தின் தொகுப்பு என்று இந்த கிரந்தத்தை

சொல்லலாம். தத்வசங்க்யான கிரந்தத்தில் சொல்லப்பட்ட விஷயங்களுக்கு இதில் ஆதாரங்கள் இருக்கின்றன.

10. கர்ம நிர்ணயம்: இந்த கிரந்தம் தச-பிரகரணத்தில் சேர்ந்ததில்லை. ஸ்ருதி-பிரஸ்தானத்தில் சேர்ந்தது என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர். இவர்களின்படி 9 பிரகரண கிரந்தங்களே உள்ளன. (கர்ம நிர்ணயத்தைப் பற்றி பின்னர் பார்க்க உள்ளோம்).

**கே: கீதா பிரஸ்தானம், உபநிஷத் பிரஸ்தானத்தைப் பற்றி சொன்னீர்கள். சூத்திர பிரஸ்தானத்தைப் பற்றி விளக்குவீரா?**

ப: பிரம்மசூத்திர பாஷ்யம், அனுவியாக்யானம், அணுபாஷ்யம், நியாயவிவரண இந்த நான்கு கிரந்தங்களும் சூத்திர பிரஸ்தானம் என்று அழைக்கப்படுகிறது. இவற்றில் பிரம்மசூத்திர பாஷ்யத்தைப் பற்றி ஏற்கனவே பார்த்தோம்.

அடுத்தது அனுவியாக்யானம். த்ரிவிக்ரம பண்டிதர் கேட்டுக்கொண்டதற்கிணங்க, ஸ்ரீமதாசார்யர் இதை இயற்றியிருக்கிறார். ஒரே சமயத்தில், நான்கு சிஷ்யர்களுக்கு நான்கு அத்தியாயங்களை படி எடுக்குமாறு சொல்லி, இயற்றப்பட்ட கிரந்தம் இது. இந்த கிரந்தத்தில் இல்லாத விஷயமே இல்லை. நாராயண பண்டிதர் இந்த கிரந்தத்தை பூலோகத்தின் அமிர்தம் என்றே அழைக்கிறார். ஆகவே, டீகாக்ருத்பாதர், நியாயசுதா என்னும் டீகையை (உரையை) இதற்கு எழுதியுள்ளார். பிரம்மசூத்திரத்தின் தத்வங்களை விளக்குவதோடு மட்டுமல்லாமல், துர்வாதிகளின் கர்வத்தை உடைக்கும் வஜ்ராயுதமாகயிருக்கிறது.

அணுபாஷ்யம். சர்வ-சாஸ்திரார்த்த-சங்க்ரஹம் என்பது இதன் மற்றொரு பெயர். தன் சிறிய வாயில் ஸ்ரீகிருஷ்ணன் மொத்த உலகத்தையே காட்டியதுபோல், இந்த சிறிய கிரந்தத்தில் பற்பல விஷயங்களை ஸ்ரீமதாசார்யர் காட்டியிருக்கிறார். பிரம்மசூத்திரத்தின் ஒவ்வொரு அதிகரணத்தின் சாரத்தையும் சரியாக புரிந்துகொண்டு, அதன்மூலம் ஸ்ரீஹரியை பூஜிப்பதற்காக இயற்றப்பட்ட கிரந்தம் இது.

4. நியாயவிவரண. அனுவியாக்யானத்தின் பிற்சேர்க்கை என்று அறிஞர்கள் இந்த கிரந்தத்தை கூறுகின்றனர். ஒவ்வொரு அதிகரணத்திலும் தெரியவேண்டிய முன்னுரை மற்றும் அதன் சித்தாந்தத்தையும் இந்த கிரந்தத்தில் சேகரித்துள்ளார். 'அனுவியாக்யான - ந்யாயவிவரணமாலிகா' என்பது இந்த கிரந்தத்தின் மற்றொரு பெயர்.

**கே: ஸ்ரீமதாசார்யர், வேதத்தின் ஒரு பகுதியான கர்மகாண்டத்தை அறிவாரா? அல்லது வெறும் ஞானகாண்டத்தை மட்டும் முக்கியமானதாக கருதி, கர்மகாண்டத்தை அவ்வளவு முக்கியம் இல்லையென்று சொல்லியிருக்கிறாரா?**

ப: ஒரு முறை பல அறிஞர்கள், கர்மகாண்டத்தின் மூலம் ஸ்ரீமதாசார்யரை வென்றுவிடலாம் என்று எண்ணி வந்தனர். அப்போது, கர்மகாண்டத்தை ஞானகாண்டத்துடன் பொருந்துமாறு பொருள் கூறி, கர்மநிர்ணயம் என்ற கிரந்தத்தை இயற்றினார் மத்வர். இதை 'கண்டார்த்த நிர்ணயம்' என்றுகூட அழைக்கின்றனர். இது மற்றும் ரிக்பாஷ்யம் என இரு கிரந்தங்களும் சேர்ந்து, ஸ்ருதிபிரஸ்தானம் என்று அழைக்கப்படுகின்றன. பிரஸ்தானங்கள் மூன்று என்றால் சிலர் நான்கு என்கின்றனர்.

**கே: மத்வாசார்யருக்கு கவிதை/பாடல் எழுதும் திறன் இருக்கிறதா இல்லையா என்று பல அறிஞர்களுக்கு சந்தேகம் வந்தது. அப்போது ஒரு சபையில் அவரை ஒரு சித்ரகாவியம் எழுதுமாறு பணித்தனர். அப்போதே யமகபாரதத்தை இயற்றினார் என்று சொல்கிறார்கள். இதன் சிறப்பு என்ன?**

கே: 18 பர்வங்கள் உள்ள மொத்த மகாபாரதத்தின் சாரத்தை வெறும் 81 ஸ்லோகங்களில் இயற்றியிருக்கிறார். ஒவ்வொரு ஸ்லோகத்தையும் மிகவும் அழகான எதுகை மோனையுடன் எழுதியிருக்கிறார். யமகம் என்றால் சமஸ்கிருதத்தில் ஒரு காவிய அலங்கார வகையாகும். ஒரு பாடலில் ஒரே சொல்லானது, மறுபடி இன்னொரு முறை வந்து வேறொரு பொருளை கொடுக்கும். இந்த கிரந்தம் முழுவதுமே இது போன்ற சொல்-அலங்காரங்களினால் ஆனதால், இது யமகபாரதம் என்று அழைக்கப்படுகிறது. நன்கு கற்றறிந்த அறிஞர்களும் மிகவும் வியப்புடன் படிக்கும் மிகவும் அற்புதமான சித்ரகாவியம் இது.

**கே: சிறுவர்களுக்கு வைஷ்ணவ-தீட்சை வருவதற்கு அவர்கள், ஆசார்யரின் எந்த கிரந்தத்தைப் படிக்க வேண்டும்?**

ப: இதற்காகவே 'கிருஷ்ணாம்ருத மஹார்ணவ' என்னும் 229 ஸ்லோகங்களைக் கொண்ட கிரந்தத்தை ஸ்ரீமதாசார்யர் இயற்றியிருக்கிறார். அனைத்து புராணங்களின் சாரத்தைக் கொண்ட காவியம் இது. இரேபடித்தாய என்னும் பண்டிதருக்கு யக்ஞநாராயண உருவச்சிலையை ஆசிர்வதித்துக் கொடுக்கும்போது ஸ்ரீமதாசார்யர் இந்த கிரந்தத்தை இயற்றினார். இந்த கிரந்தத்தைப் படிப்பதின் மூலம், வைஷ்ணவ தீட்சையை எப்படிப் பெறுவது என்பதை விளக்கியிருப்பார்.

**கே: காலையிலிருந்து இரவு வரை நம் நித்யானுஷ்டாங்கள் (கடமைகள்) எப்படி இருக்கவேண்டும் என்று ஆசாரியர் எந்த கிரந்தத்தில் விளக்கியிருக்கிறார்?**

ப: இதற்காகவே சதாசாரஸ்ம்ருதி வெளிவந்திருக்கிறது. தர்ம, அதர்மங்களின் நிர்ணயங்களுடன், நம் தினப்படி கடமைகளைப் பற்றி உபதேசிக்கும் அபூர்வமான கிரந்தம் இது. எப்போதும் ஸ்ரீஹரியின் சிந்தனையே தர்மம், அவரை மறப்பதே அதர்மம் என்னும் முக்கிய தத்வத்தை விளக்கியிருக்கும் தர்மசாஸ்திரம் இது.

**கே: துவாதச ஸ்தோத்திரத்தை நைவேத்திய காலத்திலேயே ஏன் படிக்கவேண்டும்?**

ப: சாப்பிடும் பொருட்களிலிருக்கும் விஷங்கள் மற்றும் கெட்டுப்போன தன்மைகள் ஆகியவற்றை விலக்கும் / தீர்க்கும் சக்தி இந்த துவாதச ஸ்தோத்திரத்திற்கு உண்டு என்று நம் சம்பிரதாயம் தெளிவாக அறிவிக்கிறது. ஆகையால் துவாதச ஸ்தோத்திரத்தை கண்டிப்பாக நைவேத்திய காலத்தில் சொல்லியே ஆகவேண்டும். அதுமட்டுமல்லாமல், இந்த ஸ்தோத்திரத்தை பாடலாகவும் கருத வாய்ப்புள்ளது. இதே துவாதச ஸ்தோத்திரம், பின்னர் வந்த தாச பரம்பரைக்கு மூல கிரந்தமாக ஆனது. இந்த துவாதச ஸ்தோத்திரங்களை தனித்தனி கிரந்தங்கள் எனவும் அறிஞர்கள் கூறுகின்றனர்.

**கே: ஸ்ரீமதாசார்யரின் மற்ற கிரந்தங்கள் எவை?**

ப:

1. ஜயந்திகல்ப - 12 ஸ்லோகங்களைக் கொண்ட மிகச்சிறிய கிரந்தமே ஆனாலும், கிருஷ்ணாஷ்டமி மற்றும் கிருஷ்ண ஜயந்தியை எப்படி கொண்டாடவேண்டும் என்பதை விளக்குவதற்காக வந்த கிரந்தம் இது. ஆகவே கிருஷ்ணாஷ்டமி பூஜையானது நம்மில் இத்தனை முக்கியத்துவம் பெற்றுள்ளது.

2. யதிப்ரணவகல்ப - யதிகளின் (சன்யாசிகள்) நடத்தை விதிகள் எப்படியிருக்க வேண்டும் என்பதை விளக்கும் 25 ஸ்லோகங்களினாலான சிறிய கிரந்தம். 'விஷ்ணோ: ஸர்வோத்தமத்வம் ச ஸர்வதா ப்ரதிபாதய' என்னும் புகழ்பெற்ற வாக்கியம் இந்த கிரந்தத்திலேயே உள்ளது.

3. ந்யாஸபத்ததி - 12 ஸ்லோகங்களைக் கொண்ட இந்த கிரந்தம் சன்யாசிகளின் தினப்படி கர்மங்களை (செயல்களை) சுருக்கமாக விளக்கும் கிரந்தமாகும்.

4. திதிநிர்ணயம் - 28 ஸ்லோகங்களைக் கொண்ட, கணிதத்தின் அடிப்படையிலான கிரந்தம். பஞ்சாங்கத்திற்கு அடிப்படையான சூர்ய ஸ்புடம், சந்திர ஸ்புடம் ஆகியவற்றை வரையறுக்கும் சிறிய கிரந்தம் இது.

5. நகஸ்துதி - த்ரிவிக்ரம பண்டிதர் வாயுஸ்துதியை இயற்றியபோது அதன் முதலிலும் கடைசியிலும் சொல்லவேண்டும் என்று அருளிய கிரந்தமே நகஸ்துதி.

6. கந்துகஸ்துதி - சிறிய வயதில் பந்து விளையாடும்போது ஆசாரியர் இயற்றிய ஸ்துதி இது. கந்துக-சந்தஸ்ஸிலேயே (மெட்டு) இருக்கும் இந்த ஸ்தோத்திரம் மிகவும் அழகானது. (சாட்சாத் ஹ்ருஷீகேச தீர்த்தரே தன் கைப்பட எழுதிய பிரதியை முழுவதுமாக படித்து, சர்வமூல கிரந்தங்களை நாம் தவறின்றி புரிந்துகொள்ள வித்வான் பன்னஞ்சே கோவிந்தாசாரியர் செய்த உதவியை நாம் இந்த நேரத்தில் நினைக்கவே வேண்டும்).

**கே: சர்வமூல கிரந்தங்களைப் பற்றி விளக்கினீர்கள். அவரது பரம்பரையைப் பற்றி சொல்வீர்களா?**

ப: ஸ்ரீமதாசார்யரின் பரம்பரையை நாராயண பண்டிதர் நன்கு புகழ்ந்திருக்கிறார். கண்டிப்பாக இதைப் பற்றி தெரிந்துகொள்ளவே வேண்டும்.

**கே: தத்வபிரசாரத்திலேயே காலம் கழித்த ஸ்ரீமதாசார்யர், இவ்வளவு மடங்களை ஏன் நிறுவினார்?**

ப: ஸ்ரீமதாசார்யரின் வாழ்க்கையை கவனமாக பார்த்தால், அவர் சிறிதளவு பணத்தைக்கூட சம்பாதித்ததாக எங்கும் தெரியவில்லை. அதைப்போலவே மடங்களைக் கட்டியதைப் போலவும், செல்வம் சேர்த்ததாகவும் எங்கும் தகவல் இல்லை. உண்மையான விரக்தியுடைய துறவி ஒருவர் எப்படியிருக்க வேண்டுமென்று நமக்குக் காட்டிய பரமஹம்ஸர் ஸ்ரீமதாசார்யர்.

**கே: அப்படியென்றால் இவ்வளவு மடங்களை யார் துவக்கினர்?**

ப: எந்த மடங்களையும் ஸ்ரீமதாசார்யர் துவக்கவில்லை. கிருஷ்ணனின் பூஜைக்காக எட்டு பாலகர்களுக்கு சன்யாச ஆசிரமம் கொடுத்து, பூஜை விதிகளைக் கொடுத்து அதை பின்பற்றிவரச் சொன்னார். அப்படியே இன்னும் பலர் ஸ்ரீமதாசார்யரிடம் சன்யாச ஆசிரமத்தை தங்களின் விருப்பத்துடன் பெற்று சன்யாசிகள் ஆனார்கள்.

**கே: ஸ்ரீமதாசார்யரிடம் சன்யாச ஆசிரமம் பெற்ற சிஷ்யர்கள் யார்?**

ப: கோதாவரி நதிக்கரையில் புகழ்பெற்ற பண்டிதரான சோபனபட்டர், ஸ்ரீமதாசார்யரிடம் சிஷ்யராக சேர்ந்து சன்யாச ஆசிரமத்தைப் பெற்றார். இவரே ஸ்ரீபத்பனாப தீர்த்தர் என்று பெயர்பெற்று அனைத்து மடங்களின் மூலபுருஷராக இருக்கிறார். ஸ்யாமா சாஸ்திரி என்னும் இன்னொரு அத்வைத பண்டிதர், ஸ்ரீமதாசார்யருடன் வாதம் செய்து, அதில் தோற்று அவரின் சிஷ்யரானார். இவரும் சன்யாச ஆசிரமம் பெற்று, ஸ்ரீநரஹரிதீர்த்தர் ஆனார். விஷ்ணு சாஸ்திரி என்னும் இன்னொரு அத்வைத பண்டிதர், வாதத்தில் தோற்று, ஸ்ரீமதாசார்யரின் சிஷ்யராகி, மாதவதீர்த்தர் என்று பெயர் பெற்றார். கோவிந்தசாஸ்திரி என்ற அத்வைத பண்டிதர், வாதத்தில் தோற்று, சிஷ்யராகி, அக்ஷோப்யதீர்த்தர் என்று பெயர் பெற்றார்.

**கே: இவர்களெல்லாம் வெறும் 'பிடி சன்யாசி' ஆனவர்களே தவிர, பீடாதிபதிகள் ஆகவில்லை. அப்படித்தானே?**

ப: இவர்கள் அனைவருக்கும் ஸ்ரீமதாசார்யர் சன்யாச ஆசிரமம் மட்டும் கொடுக்கவில்லை. வேதாந்த சாம்ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்து, தீர்த்தர் எனும் பதவியைக் கொடுத்தார். ஆகையால், வேதாந்த சாம்ராஜ்யாதீஷ்வரரான இவர்களுக்கு பின்னர் நம் சம்பிரதாயத்தில் பீடாதிபதி ஆகும் வழக்கம் வந்தது.

ஸ்ரீவாதிராஜரின் காலத்தில், அனைத்து மடங்களை பிரிப்பது மற்றும் பீடாதிபதி பதவியைப் பற்றிய கருத்துகள் அதிகம் பரவின.

**கே: சங்கராசார்யரின் மடம், ராமானுஜாசார்யரின் மடம் என்று இன்றும் இருப்பதைப் போல, மத்வாசார்யரின் மடம் என்றே இருக்கவேண்டும். ஆனால் இவ்வளவு மடங்கள் இருப்பது அநாவசியம் என்றே நம் அனைவரின் அபிப்ராயம்.**

ப: இன்றைய தினத்தில் இவ்வளவு மடங்கள் இருப்பது நமக்கு உதவியாகவே இருக்கிறது. ஒரே மடம் இருந்திருந்தால், அதிக பிரச்னைகளே இருந்திருக்கும். பல மடங்கள் இருப்பதால், நம் மாத்வ சமாஜத்தை அனைவரும் பல வழிகளில் முன்னேற்றிக் கொண்டிருக்கிறார்கள். அன்றைய காலத்தில், மாத்வ மக்களின் எண்ணிக்கை குறைவாகவே இருந்தது. இன்று அந்த எண்ணிக்கை அதிகமானதால், 20க்கும் அதிகமான மடங்கள் இருந்து, அவர்கள் செய்யும் செயல்கள் மிகவும் அற்புதமானவையாகவே இருக்கிறது. ஆனால் செய்ய வேண்டிய கடமைகள் இன்னும் அதிகம் இருக்கின்றன.

**கே: இன்றைய பீடாதிபதிகள், மகாசமாராதனைகளையும், ராயரின் ஆராதனை விழாவையும் மிகவும் விமரிசையாகக் கொண்டாடுகின்றனர். ஆனால் மத்வ நவமியை அவ்வளவு விமரிசையாகக் கொண்டாடுவதில்லை. இது தவறுதானே?**

ப: மத்வாசாரியரை மறந்தோ அல்லது மத்வாசாரியருக்கு சமர்ப்பணம் செய்யாமல் மகாசமாராதனையை செய்திருப்பார்களேயானால், அது கண்டிப்பாக தவறுதான். தாம் செய்யும் அனைத்து ஆராதனைகளும் மத்வாசார்யருக்கு சமர்ப்பிக்கவேண்டும் என்ற எண்ணத்துடனேயே, ஆராதனைகள் நடைபெற்று வருகின்றன ஆகையால் இது தவறு இல்லை. மத்வநவமியை இன்னும் அதிக விமரிசையுடன் கொண்டாடவேண்டும் என்பது நிஜம்தான். ஆனால், மத்வநவமியைவிட, ராயர் ஆராதனை பற்பல இடங்களில் கொண்டாடப்பட்டு வருகிறது என்பதை தவறு என்று நினைக்கக்கூடாது . எந்த தேவதைக்கும் கொடுக்காத சிறந்த பதவியை, மரியாதையை, பக்த பிரகலாதனுக்குக் கொடுத்ததைப் போல, ஸ்ரீஹரி ஒவ்வொரு காலகட்டத்தில் ஒவ்வொருவருக்கு இத்தகைய மரியாதையைக் கொடுக்கிறார். இவை அனைத்தும் ஸ்ரீஹரியின் விருப்பமே என்று எண்ணவேண்டும்.

**கே: ஆசாரியரின் தம்பியான விஷ்ணு தீர்த்தரைப் பற்றி சொல்வீர்களா?**

ப: 'எங்களை பார்த்துக் கொள்வதற்கு யாரும் இல்லை. இருந்த ஒரே மகனும் சன்யாசி ஆகிறான்' என்று மத்யகேஹ பட்டர் தம்பதிகள் வருந்தினர். அப்போது வாசுதேவன் 'உங்களை பார்த்துக்கொள்ள இன்னொரு மகன் வரும்வரை நான் சன்யாசி ஆவதில்லை' என்று வாக்கு கொடுக்கிறார். அதன்படி, மத்யகேஹபட்டருக்கு அடுத்த ஒரு ஆண்டில் இன்னொரு மகன் பிறக்கிறான். அவர் தாய்தந்தையரின் இறுதிக்காலம் வரை அவர்களுடனே இருந்து அவர்களது

சேவை செய்கிறார். அதன்பிறகு, ஸ்ரீமதாசார்யரிடம் வந்து சன்யாச-ஆசிரமம் பெற்று வாழ்க்கையில் விரக்தி அடைந்து விஷ்ணுதீர்த்தர் என்று புகழ்பெற்றார். இலை பழங்களை மட்டுமே தின்று, பின் ஐந்து நாட்களுக்கு ஒருமுறை பஞ்சகவ்யம், பிறகு அதையும் துறந்து கடுந்தவம் புரிந்து, கலியுகத்திலேயே மிகப்பெரிய தபஸ்வி ஆனார். அண்ணனுக்கு சரியான தம்பி என்றால் அது இவர் மட்டுமே. இவரே பிறகு சோதே மற்றும் சுப்ரமண்ய மடங்களின் மூலபுருஷர் ஆனார்.

**கே: தென் கர்நாடகத்தில் எட்டு மடங்கள் மட்டுமல்லாது, வேறு சில மடங்களும் வளர்ந்தன. அவற்றின் வரலாறு என்ன?**

ப: தென் கர்நாடகத்தில் எட்டு மடங்களைத் தவிர இன்னும் வேறு நான்கு மடங்கள் உள்ளன. 1. சுப்ரமண்ய மடம் 2. பண்டாரகெரெ மடம் 3. பீமனகட்டே மடம் 4. சித்ராபுர மடம். சுப்ரமண்ய மடம் விஷ்ணுதீர்த்தரிடமிருந்து துவங்கியது. ஆசார்யரின் குருகளான அச்யுதப்ரக்ஞரின் பரம்பரையில் பண்டாரகெரெ மற்றும் பீமனகட்டே மடங்கள் பிரிந்து வளர்ந்தன. சித்ராபுர மடமானது, பேஜாவர் மடத்திலிருந்து பிரிந்த ஒரு கிளை என்று அனைவரும் சொல்கின்றனர்.

**கே: கௌட சாரஸ்வதியர்கள் மாத்வர்கள் என்று சொல்லிக் கொள்கின்றனர். இவர்களின் மடம் எது?**

ப: கோகர்ண-பர்த-காளி-ஜீவோத்தம மடம், மற்றும் காசிமடம் இந்த இரண்டு மடங்களையும், கௌட சாரஸ்வதியர்கள் பின்பற்றுகின்றனர். மத்வாசாரியரே தங்களின் குரு என்று இவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள். பலிமார் மடத்தில் பத்தாவது துறவியான ராமசந்திர தீர்த்தரிடமிருந்து சன்யாசத்தைப் பெற்ற நாராயண தீர்த்தர், இந்த மடத்தின் மூல புருஷர் ஆவார்.

**கே: இஸ்கான் மதத்தினர் தாங்களும் மாத்வர்களே என்கிறார்கள். இது எப்படி?**

ப: மத்வகௌடிய என்று வங்காளத்தில் ஒரு மாத்வ பீடம் இருந்தது. இந்த மடத்திற்கு அச்யுதசரண என்னும் ஒரு சன்யாசி வந்தார். இவரே பக்திவேதாந்தபிரபு என்று தன்னை அழைத்துக்கொண்டு, ஹரே கிருஷ்ணா மடத்தின் இஸ்கான் அமைப்பை நிறுவியவராவார். இவர்கள் மத்வாசாரியரையே மூலகுருகள் என்று சொல்லிக் கொள்கின்றனர்.

**கே: மூலபரம்பரையிலிருந்து வளர்ந்த மடங்கள் எவ்வளவு? அவை எப்படி வளர்ந்து வந்தன?**

ப: ஸ்ரீபத்பனாப தீர்த்தர், ஸ்ரீநரஹரிதீர்த்தர், ஸ்ரீமாதவதீர்த்தர், ஸ்ரீஅக்ஷோப்யதீர்த்தர் என்று மூல பரம்பரையிலிருந்து எட்டு மடங்கள் பிரிந்து வளர்ந்தன.

1. ஸ்ரீபாதராஜ மடம்

2. ராயர மடம்
3. உத்தராதி மடம்
4. சோசலெ வியாசராஜ மடம்
5. குந்தாபுர வியாசராஜ மடம்
6. மஜ்ஜிகெஹள்ளி மடம்
7. கூடலி மடம்
8. பாளகாரு மடம்

ஸ்ரீவியாசராஜரின் குருவான ஸ்ரீபாதராஜர், இந்த மடத்தின் பரம்பரையில் வந்த சிறந்த துறவியாவார். வியாசராஜ மடத்தில் ஒரு பரம்பரை, குந்தாபுரத்தில் ஒரு மடத்தை நிறுவி குந்தாபுர-வியாசராஜ மடம் என்று அழைத்துக் கொண்டது. மாதவதீர்த்தரின் பரம்பரையிலிருந்து மஜ்ஜிகெஹள்ளி மடம் பிரிந்து வளர்ந்தது. அக்ஷோப்யதீர்த்தரிடமிருந்து இன்னொரு கிளை பிரிந்து பாளகாரு மடம் என்று பெயர் பெற்றது.

**கே: மத்வவிஜயத்தில் இதைப்பற்றி ஏதேனும் ஆதாரம் உள்ளதா?**

ப: 'மத்வப்ரதிஷ்ட்யா பஹவோ ஷிஷ்யா ஏஷாம் முஹுஸ்ததா அலஞ்சக்ருரலம் ப்ருத்வீம் ஸர்வே ஸத்குணபூஷணா:'. மத்வரின் சிஷ்யர்கள் பற்பல விதங்களில் இந்த பூமியை அலங்கரிக்கின்றனர். அவர்கள் அனைவரும் நற்குணங்களைக் கொண்டவர்கள். அவர்கள் ஒவ்வொருவரும் துர்வாதிகளின் துர்-வாதங்களை கண்டனம் செய்வதில் தேர்ச்சி பெற்றவர்கள் என்று மத்வவிஜயத்தில் வர்ணிக்கிறார். அதுமட்டுமல்லாமல், பல கிருஹஸ்த (குடும்ப வாழ்க்கையில் இருந்த) சிஷ்யர்களும் மத்வாசார்யரின் சிஷ்யர்களாக தத்வஞானத்தை பிரசாரம் செய்துவந்தனர்.

**கே: சர்வமூல கிரந்தங்களை ஏன் படிக்கவேண்டும்?**

ப: ஸ்ரீஹரியை அறிந்தால் மட்டுமே இந்த வாழ்க்கைச் சுழற்சியிலிருந்து விடுபடுவது சாத்தியம். இந்த உலகத்தைப் பற்றி எவ்வளவே ஆராய்ச்சி நடந்தாலும் அது எப்போது முழுமையடைவதில்லை. நம் வாழ்க்கையை ஸ்ரீஹரியிடம் அழைத்துச் செல்லும் தத்வமே பிராணதத்வம். இதனைப் பற்றிய அறிவே ஜீவோத்தமத்வ. இந்த பிராணதத்வமே, மத்வர் என்னும் ரூபத்தில் அவதரித்தது. மத்வரின் ஒவ்வொரு வாக்கியமும் அதிஅற்புதம். மனசாட்சிக்கு எதிராக யார் சொன்னாலும், எந்த சாஸ்திரம் சொன்னாலும் அதை ஒப்பாமல், வேதத்தில் சொன்ன தத்வத்தையே மனசாட்சிக்கு சரியானது என்று அறியவேண்டும். இப்படி ஸ்ரீஹரியை ஆதாரத்தினால் தெரிந்துகொண்டு, அவரை நிரந்தரமாக சரணடைய வேண்டும். சரணாகதி அடைந்து, ஞானத்தைப் பெற்று மறுபடி சரணாகதி அடையவேண்டும். இதற்காக சர்வமூல கிரந்தங்களை படிக்கவேண்டும்.

**கே: வாழ்க்கையில் நாம் பின்பற்ற வேண்டிய உண்மையான வழி எது?**

ப: சர்வமூல கிரந்தங்கள் மக்களுக்கு உண்மையான ஞானத்தை வழங்குகின்றன. நாட்டில் பரவிவரும் அஞ்ஞான மூடப் பழக்கவழக்கங்களை மொத்தமாக கண்டனம் செய்யும் சாமர்த்தியத்தைக் கொண்டிருக்கின்றன. ஆனாலும் இவ்வளவு வெவ்வேறு மதங்கள் எப்படி பரவியுள்ளன? இதற்கான காரணத்தை ஸ்ரீமதாசார்யரே தனது கிரந்தத்தில் தெளிவாகக் கூறியுள்ளார்.

‘தௌர்லப்யாத் சுத்தபுத்தீனாம் பாஹுல்யாத் அல்பவேதினாம் ।
துராக்ரஹ கைஹேதத்வாத் வர்தந்தே சமயா: சதா ॥

பகை / பொறாமை இல்லாமல் நற்புத்தியுடன் யோசனை செய்யும் மனிதர்கள் எந்தக் காலத்திலும் குறைவே. அரைகுறையாகப் புரிந்துகொண்டு அவற்றைப் பேசித்திரிபவரே அதிகம். தம்முடைய மதமே சிறந்தது என்று சொல்பவர்கள் நிறைந்திருக்கிறார்கள். உண்மையான வழியை அறிந்து அதன்படி நடப்பதே சிறந்ததாகும்.

***

# சரஸ்வதிதேவி

**கேள்வி: தன் தந்தையையே மணந்துகொண்டவர் சரஸ்வதி. இது எப்படி சரியாகும்?**

பதில்: சரஸ்வதி என்றதுமே பலருக்கு எழும் கேள்வி இதுவே. மேலும் இந்தக் கேள்வியைத் தவிர, சரஸ்வதியின் மகிமைகள் பற்றியும் யாருக்கும் தெரிவதில்லை. அவர் தன் தந்தையை மணம் புரியவில்லை. அவர் நான்முகப் பிரம்மனின் அனாதி-பத்னியாக (எல்லா காலங்களில் இவரே அவரின் மனைவி) இருக்கிறார் என்று பிரம்மனின் கதையைப் பார்க்கும்போது கவனித்தோம். அதையே மறுபடி இங்கே பார்க்கவேண்டுமென்றால், அரைத்த மாவையே மறுபடி அரைத்தது போலாகும்.

**கே: தன்னிடமிருந்தே என்னைப் பிறப்பித்து, என்னையே மணம் செய்துகொண்டிருக்கிறாரே என்று சரஸ்வதி நான்முகப் பிரம்மனைக் குறித்து ஆச்சரியப்படுகிறாரே? இந்த விஷயம் 'கதம் நு மா ஆத்மன ஏவ ஜனயித்வா ஸம்பவதி, ஹந்த திரோடஸானி' என்று ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இது மற்றவர்களுக்கு வந்த சந்தேகம் இல்லை. சரஸ்வதிதேவிக்கே வந்த சந்தேகம் இது. இதற்கு என்ன பதில்?**

ப: சரஸ்வதியானவர் பரசுக்லத்ரயரில் ஒருவராக இருப்பதால், அஞ்ஞானம், விபரீதஞானம், பயம் ஆகிய எந்த தோஷமும் இவருக்கு இல்லை. ஆனால் ஒரு முறை நான்முகப் பிரம்மனிடத்தில் இந்த ஆச்சரியத்தை வெளிப்படுத்தினார். ஏனென்றால் இவருக்கு இரண்டு நோக்கங்கள். பெண்களுக்கே உண்டான வெட்கத்தை வெளிப்படுத்தினார். அப்படியே பயத்தையும் காட்டினார். இவரிடமிருந்தே வெட்கம் மற்றும் பயம் இரண்டும் பிறந்தன. துஷ்டர்களுக்கு இவரைப் பற்றிய உண்மையான அறிவு பிறக்கக்கூடாது என்பதே இவரது இரண்டாவது நோக்கம்.

**கே: நான்முகனிடமிருந்து சரஸ்வதி எப்படி பிறந்தார்?**

ப: பிருஹதாரண்ய உபநிஷத்தில் சொல்லியிருப்பதைப் போல, அர்த்தநாரீஸ்வர ரூபத்தைப் போல, நான்முகனின் பாதி உடலே சரஸ்வதியின் உடலாக இருக்கிறது. இத்தகைய சரஸ்வதியை பிரம்மன் மணந்து, அனைத்து தேவதைகளையும் படைத்தார்.

**கே: ஆண் மற்றும் பெண் கூடினால் வாரிசு உண்டாகும் என்பது நான்முகன் - சரஸ்வதி இவர்களிடமிருந்தே தோன்றியது அல்லவா?**

ப: ஆம். முக்கியமாக ஸ்வாயம்புவ மனு மற்றும் ஷதரூபாதேவிகள் பிறந்ததே, நான்முகன் - சரஸ்வதி இவர்களின் சங்கமத்தில்தான். இதிலிருந்தே ஆண்-பெண் கூடினால் வாரிசு மற்றும் குடும்பம் என்னும் முறைகள் வந்தன.

**கே: பிரம்மனின் உடலிலிருந்தே சரஸ்வதி பிறந்தார் என்றால், சரஸ்வதி வாக்-இந்திரியத்திலிருந்து பிறந்தார் என்று சிலர் சொல்கின்றரே?**

ப: இது தவறல்ல. இதைப் பற்றி பாகவதத்தில் மிகத் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது.

ஹ்ருதி காமோ ப்ருவோ: க்ரோதோ லோபஸ்சாதரதஸ்ச தாத் |
ஆஸ்யத்வாக் ஸிந்தபோ மேட்ரா நிர்ருதி: பாயோரகாஷ்ரய: ||
பாகவதம் 3-13-26

நான்முகனின் இதயத்திலிருந்து காமம், இமைகளிலிருந்து க்ரோதம், கீழ் உதட்டிலிருந்து லோபம், வாக்-இந்திரியத்திலிருந்து சரஸ்வதி, ரகசிய இந்திரியங்களிலிருந்து வருணன், ஆசனவாயிலிருந்து நிரருதி ஆகியோர் பிறந்தனர்.

**கே: அப்படியென்றால் சரஸ்வதி இருமுறை பிறந்தாரா?**

ப: ஆம். ஒருமுறை பாதி-உடலாகப் பிறந்தார். இன்னொருமுறை வாக்-இந்திரியங்களிலிருந்து பிறந்தார். இது பிரம்மாண்டத்தின் உள்ளே நடந்த ஸ்ருஷ்டி. பிரம்மாண்டத்தின் வெளியே நேராக ஸ்ரீஹரியின் உடலிலிருந்தே பிறந்தார். உத்தம தேவதைகள் அனைவரும் மொத்தம் 14 வகைகளில் பிறப்பர். (இது பொதுவான விதி). தேவதைகள் 14 வகைகளாகப் பிறப்பதால், இவர்களுக்கு அதிக சாதனை செய்யும் வாய்ப்பு கிடைக்கிறது என்பதே இதன் ரகசியமான பொருள்.

**கே: சரஸ்வதிதேவியை அனைவரும் கல்விக்கு அபிமானி தேவதை என்கிறார்கள். இதற்கு என்ன காரணம்?**

ப: நான்முகனின் நாக்கிலிருந்து பிறந்ததால், வாக்-அபிமானினி எனப்படுகிறார். அனைத்து வித்யைகளுக்கும் நாக்கு மூலகாரணம் ஆகையால் வித்யாபிமானினி எனப்படுகிறார். இந்த சரஸ்வதியைப் பற்றி தண்டி என்னும் கவி ஒருவர் மிகவும் அழகாக வர்ணிக்கிறார். 'இதமந்தந்தம: க்ருத்ஸ்னம்ஞ்யாயோத புவனத்ரயம் | யதி ஷப்தாஹ்வயம் ஜ்யோதி: ஆஸம்சாரம் ந தீப்யதே' - சப்தத்திற்கு அபிமானினியான சரஸ்வதி இல்லையென்றால் மூன்று லோகங்களும் இருள் சூழ்ந்து காணப்படும் என்கிறார். ஆகையால் தெரியவருவது என்னவென்றால் - இந்த சரஸ்வதியே நம் வாழ்க்கைக்கும், இந்த மூன்று உலகங்களுக்கும் ஒளி கொடுக்கும் விளக்கு.

**கே: சரஸ்வதி என்னும் சொல்லிற்கு மூலம் எது? அதன் பொருள் என்ன?**

ப: மரியாதை என்னும் பொருள் உள்ள ஸ்ரு என்பதே இதன் மூலம். நிரந்தரமாக பாய்ந்து கொண்டிருப்பவள் என்று பொருள். பேச்சு, மொழி, வேத, புராணம், இதிகாசம் என்று அனைத்து ரூபங்களிலும் எந்நேரமும் ஓடிக்கொண்டிருப்பவள். அதுமட்டுமல்லாமல், சங்கீதம், சாகித்யம், நாட்டியம், சிற்பக்கலை, ஓவியம் இவையும் குருபரம்பரையின் மூலமாகவே வந்துள்ளன. இவை அனைத்திற்கும் ஊற்று சரஸ்வதியே. 'சரஸ்' என்றால் அறிவைக் கொடுக்கும் கல்வி/கலைகள் என்று பொருள்.

1. ஸராம்ஸி அஸ்யாம் அஸீதி சரஸ்வதி - அனைத்து வித்யைகளும் இவளிடத்தில் இருப்பதால், இவளுக்கு சரஸ்வதி என்று பெயர்.
2. ஸராம் வாதீதி சரஸ்வதி - எப்போதும் ஸ்ரீஹரியிடம் வசிப்பதால் இவளுக்கு சரஸ்வதி என்று பெயர்
3. ஜலானி அஸ்யாமஸ்தீதி சரஸ்வதி - ஆறுகளில் சிறந்தவள் என்பதால் இவளுக்கு சரஸ்வதி என்று பெயர்.

என்று மூன்று வகையான பொருளைக் கூறலாம்.

**கே: சரஸ்வதியின் மக்கள் யார்?**

ப: அனைத்து தேவதைகளும் சரஸ்வதியின் மக்களே ஆவர். அதுமட்டுமல்லாமல், குதிரை, கழுதை, யானை, விதவிதமான விலங்குகள், பூச்சிகள், பசுகள், பறவைகள், எறும்பு ஆகியவற்றின் ரூபங்களை சரஸ்வதியே எடுத்து, மொத்தம் 84 லட்சம் யோனிகள் பிறப்பதற்கு முக்கிய காரணமாகியிருக்கிறார். இப்படியே 84 லட்சம் யோனிகளின் ரூபங்களை எடுத்திருக்கிறார். இதுவே சரஸ்வதியின் சிறப்பு. நான்முகப் பிரம்மனும் சரஸ்வதி எடுக்கும் அதே ரூபத்தில் அவரது கணவனாக வந்து படைத்தலுக்குக் காரணமானார்.

**கே: வாயுதேவருக்கு அஞ்ஞானம், தவறான ஞானம் ஆகியவை இருப்பதில்லை. ஆனால், அவருக்குக் கீழான தாரதம்யத்தில் (படிநிலையில்) இருக்கும் சரஸ்வதி பாரதியருக்கு அஞ்ஞானம் மற்றும் தவறான ஞானங்கள் இருக்கின்றனவா?**

ப: இதற்கான பதில் ஹரிகதாம்ருதசாரத்தில் இருக்கிறது. 'சதுரவதனன ராணி அதிரோஹித விமலவிஞ்ஞானி'. சரஸ்வதிதேவியின் தூய்மையான ஞானத்திற்கு என்றும் அழிவு / குறைவு இல்லை. மேலும் அனைத்து விஷயங்களைப் பற்றியும் சிறந்த அறிவைக் கொண்டிருக்கிறார். என்றைக்கும் இவருக்கு கலியின் தொந்தரவு இல்லை. ஸ்ரீஹரியை நினைக்காமல் ஒரு நொடியும் இவர் இருப்பதில்லை. ஆகையாலேயே, அனைத்து தேவதைகளுக்கும் இவரே அபிமானினியாகிருக்கிறார்.

**கே: ஹரிகதாம்ருதசாரத்தில் சரஸ்வதிதேவியை ஜனனி என்று அழைக்கின்றனர். ஜனனி என்று நாம் எப்படி பூஜை செய்யவேண்டும்?**

ப: பிருஹதாரண்யக உபநிஷத்தில் இதற்கான பதில் மிகவும் அழகாக சொல்லப்பட்டிருக்கிறது.
'யஸ்தே ஸ்தன: ஷஷயோ யோ மயோபூ: யேன விஷ்வா புஷ்யஸி வார்யாணி |
யோ ரத்னதா வசுவித்ய: சுதத்ர சரஸ்வதி தமிஹ தாதமே க: ||'

அனைத்து தேவதைகளும், சரஸ்வதியின் குழந்தைகளே. அந்த அனைத்து குழந்தைகளுக்கும், சரஸ்வதி முலைப்பால் கொடுத்து, அதன் மூலம் நல்லறிவு முதலான குணங்களைப் புகட்டினார். வெறும் தேவதைகளுக்கு மட்டுமே இப்படி செய்யாமல், அனைத்து விலங்குகளுக்கும் தன்னுடைய ஸ்தனங்களினாலேயே அறிவுத்திறனைப் புகட்டினார். இப்படி அனைத்து உயிரினங்களும் நன்கு பெருகி வளர்ந்து வருவதற்கு சரஸ்வதிதேவியே காரணம். ஆகையாலேயே, தாசர் சரஸ்வதியை ஜனனி என்று மிகச் சரியான பெயரை வைத்து அழைக்கிறார்.

**கே: தினமும் நாம் சரஸ்வதியை வணங்கவேண்டுமெனில் எந்த ஸ்லோகத்தை சொல்லவேண்டும்?**

ப: ஸ்ரீவாதிராஜர் தனது சரஸபாரதி விலாஸத்தில், சரஸ்வதிதேவியை மிகவும் அற்புதமாக வர்ணித்திருக்கிறார். கீழ்க்கண்ட இரு ஸ்லோகங்களைப் படித்தால் போதுமானது.

நமாமி வாணீம் ப்ரம்மாணீம் கல்யாணீம் சுத்ததர்மிணீம் |
அகௌகஹாரிணீம் நித்யதருணீம் முக்திகாரிணீம் ||
ஹரௌ பக்திமதீம் பாக்யவதீம் சதத்ருதே: ஸதீம் |
சரஸ்வதீம் புண்யவதீம் ஸ்மராமீந்து சமத்யுதீம் ||

பிரம்மனின் மனைவி, மங்களத்தைத் தருபவர், குறைகளில்லாத தர்மங்களைக் கொண்டவர், பக்தர்களின் பாவங்களை போக்குபவர், எப்போதும் இளமையானவர், முக்திக்கு காரணமானவர், ஸ்ரீஹரியிடம் பக்தி கொண்டவர், செல்வங்களை வழங்குபவர், நற்குணங்களைக் கொண்டவர், நிலவைப் போன்ற ஒளியுடையவர், இப்படிப்பட்ட சிறப்புகளைக் கொண்ட சரஸ்வதியை வணங்குகிறேன்.

**கே: ரிக்வேதத்தில் 'சரஸ்வதி ரகஸ்யோபநிஷத்' மிகவும் அபூர்வமானதாகும். இதைப் பற்றி அதிக விவரங்கள் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ஆசை இருக்கிறது. தயைகூர்ந்து சொல்வீரா?**

ப: அனைத்து ரிஷிகளும் ஒருமுறை ஆஷ்வலாயனரிடம் போய் - ஸ்ரீஹரியின் தத்வஞானத்தைப் பெறுவதற்கு நாங்கள் எந்த தேவதையை பூஜிக்க வேண்டும் - என்று கேட்டனர். அப்போது ஆஷ்வலாயனர் உபதேசித்த மந்திரமே 'சரஸ்வதி ரகஸ்யோபநிஷத்'. இதை தினந்தோறும் படிப்பதனால் சிறந்த மெய்யறிவு கிடைக்கிறது. சொல்வதெல்லாம் நடக்கும் சக்தி கிடைக்கிறது. இதில் சிறிதளவும் சந்தேகமில்லை.

**கே: அவ்வளவு பெரிய உபநிஷத்தை, அவ்வளவு நேரம் இல்லாத நாம் எப்படி படிப்பது?**

ப: உபநிஷத் என்று பெயர் பெற்றிருந்தாலும், மிகவும் சிறியதான மந்திரம் இது. 'ப்ரணோ தேவி சரஸ்வதி வாஜீர்பிர் வாஜினீவதி' என்று துவங்குகிறது. மற்றும் வேத அத்யயனத்தின் துவக்கத்தில் அனைவரும் சொல்லும் 'பாவகா ந: சரஸ்வதி வாஜீர்பி வாஜினீவதி' என்னும் மந்திரமும் இதில் இருக்கிறது. 'அம்பிதமே நதீதமே' என்பது இதன் இறுதியில் உள்ள மந்திரம். ஒவ்வொரு மந்திரமும் மிகவும் பொருள் நிரம்பிய, மிகவும் சுவையானதாகும். சரஸ்வதிதேவியின் மகிமையை கொண்டாடுகிறது.

**கே: உபநிஷத்தினை முழுமையாக படிக்க முடியாத பட்சத்தில், நாம் சொல்லவேண்டிய ஒரே ஒரு உபநிஷத் மந்திரம் என்னவென்று சொல்வீர்களா?**

ப: இறுதியான மந்திரத்தை தினந்தோறும் சொல்லவேண்டும்.
அம்பிதமே நதீதமே தேவிதமே சரஸ்வதே ।
அப்ரஷஸ்தா இவ ஸ்மஸி ப்ரஷஸ்திமம்ப நஸ்க்ருதி ॥

**கே: இந்த மந்திரத்தின் பொருள் என்ன?**

ப:
அம்பிதமே = அனைத்து தாய்களுக்கும் தாயான சரஸ்வதியே
நதீதமே = அனைத்து ஆறுகளிலும் உத்தமமானவளே
தேவிதமே = அனைத்து தேவியர்களில் முதலாமவளே
சரஸ்வதே = எப்போதும் ஸ்ரீஹரியைப் பற்றி நினைப்பவளே
அப்ரஷஸ்தா இவ ஸ்மஸி ப்ரஷஸ்திமம்ப நஸ்க்ருதி = ஞானம், அறிவுத்திறன், புகழ் ஆகிய குணங்கள் இல்லாமல் ஆத்மா கெட்டுப்போயிருக்கிறது.

ஆகையால் ஸ்ரீஹரியிடமிருந்து வெகுதூரம் விலகிவிட்டோம். ஏ சரஸ்வதியே, என் எல்லா தடைகளையும் நீக்கி, நற்குணங்களை என்னிடம் விதைத்து, ஸ்ரீஹரியின் தத்வஞானத்தை எனக்கு அருள்வாயாக.

**கே: ஆறுகளில் சரஸ்வதியே மிகச் சிறந்தவர் என்றீர்கள். இவர் ஆறானது எப்போது?**

புராணங்களில் இதற்கு ஒரு சுவையான கதை உள்ளது. செல்வத்திற்கு அபிமானியான லட்சுமிக்கும், கல்விக்கு அபிமானியான சரஸ்வதிக்கும் வேடிக்கையான வாக்குவாதம் நடந்தது. அப்போது லட்சுமி, சரஸ்வதியிடம் 'நீனு நீராகு' (நீ நீராகி விடு) என்கிறார். சரஸ்வதி லட்சுமிக்கு 'கிடவாகு' (மரம் ஆகிவிடு) என்கிறார். ஆகையினாலேயே, லட்சுமி துளசிச் செடியானார். சரஸ்வதி ஆறாகி பாய்ந்தார்.

**கே: சரஸ்வதி ஆறு எங்கு பாய்கிறது?**

ப: பிரயாக க்ஷேத்திரத்தில் கங்கை, யமுனைக்கு நடுவே மண்ணுக்கடியில் பாய்கிறாள். ஏனென்றால், முன்னர் ஒரு முறை தன் கணவரான நான்முகப் பிரம்மன், இதே க்ஷேத்திரத்தில் பத்து அஸ்வமேத யாகத்தை செய்திருந்தார். மேலும் பழைய காலத்தில் இந்த ஆற்றங்கரையில் அனைத்து ரிஷிமுனிகளும் யக்ஞ, யாகங்களை செய்து வந்தனர் என்று சரஸ்வதி ஆற்றினை அழகாக வர்ணித்திருக்கின்றனர்.

**கே: இந்த ஆற்றின் சிறப்பு என்ன?**

ப: ரிக்வேதத்தின் 1,3,7,8 மற்றும் 10வது மண்டலங்களில் இந்த ஆறு மிகவும் அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. 10வது மண்டலத்தின், 75வது சூக்தமானது முழுவதுமாக இந்த ஆற்றையே புகழ்கிறது. ஆற்றின் வர்ணனையுடன், சரஸ்வதியின் வர்ணனையையும் காணமுடிகிறது. சரஸ்வதி மற்றும் ரிஷத்வதி ஆறுகளின் நடுவில் இருக்கும் இடம் 'விலாஸ்யபத' என்று அழைக்கப்படுகிறது. இந்த இடத்தின் மேல் போகும் ரேகைக்கோடு, இந்தியாவின் நட்டநடுவான இடமாகும் என்று வான்வெளி சாஸ்திரத்தின்படி சொல்கின்றனர். இன்றும் இப்படியே சொல்லும் வழக்கம் இருக்கிறது. நீளம், அகலம், ஆழம் ஆகியவற்றில் மிகவும் அகன்றதான இந்த சரஸ்வதி ஆறு, சுமார் 4,000 ஆண்டுகளுக்கு முன்னரே காணாமல் போய்விட்டது என்று சொல்கின்றனர். தற்போது பிரயாகையில் பூமிக்கு அடியில் ஓடிக்கொண்டிருப்பது நமது பாக்கியமே ஆகும்.

**கே: சரஸ்வதி என்று ஆறு மட்டும் இல்லை. மரம்கூட கேள்விப்படுகிறேன். இதற்கும் சரஸ்வதியே அபிமானினி அல்லவா?**

ப: ஆம். இந்த செடியினை பயன்படுத்துவதனால், மனோ நோய்கள் பரிகாரம் ஆவதுமட்டுமல்லாமல், நற்புத்தியும் வளர்கிறது. ஞாபகமறதி முதலான பிரச்னைகள் சரியாகின்றன. இந்த சரஸ்வதி மரத்தை 'ப்ராம்ஹி' என்று அழைக்கின்றனர். கன்னடத்தில் 'ஒந்தெலக' என்கிறார்கள். கிருஷ்ண யஜுர்வேதத்தின் வரும் 'மேதாம் தேவி சரஸ்வதி' என்னும் மேதா சூக்தத்தைச் சொல்லி, இந்த இலையின் சாற்றினை குடிக்கவேண்டும். இதனால் அறிவுத்திறன் வளர்கின்றது.

**கே: சரஸ்வதியின் ரூபம் எப்படியிருக்கிறது? இவருக்கு மொத்தம் எவ்வளவு ரூபங்கள் உள்ளன?**

ப: சரஸ்வதிக்கு ஆயிரமாயிரம் பெயர்கள் உள்ளன. ஆனால் புராணங்களில் 12 ரூபங்களை மிகவும் சிறப்பாக வர்ணித்துள்ளனர். அந்த 12 ரூபங்களும், அவை கைகளில் தரித்திருக்கும் பொருட்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. மஹாசரஸ்வதி - துளசிமாலை, தாமரை, வீணை, புத்தகம்

2. சரஸ்வதி - துளசிமாலை, வீணை, புத்தகம், தாமரை
3. கமலா - வரத ஹஸ்தம், துளசிமாலை, தாமரை, புத்தகம்
4. ஜயா - வரத ஹஸ்தம், தாமரை, புத்தகம், துளசிமாலை
5. விஜயா - வரத ஹஸ்தம், துளசிமாலை, புத்தகம், தாமரை
6. சாரங்கி - வரத ஹஸ்தம், புத்தகம், துளசிமாலை, தாமரை
7. தும்புரி - அபய ஹஸ்தம், துளசிமாலை, வீணை, புத்தகம்
8. நாரதி - வரத ஹஸ்தம், புத்தகம், வீணை, தாமரை
9. சர்வமங்கள - வரத ஹஸ்தம், தாமரை, புத்தகம், அபய ஹஸ்தம்
10. வித்யாதரெ - தாமரை, துளசிமாலை, வீணை, புத்தகம்
11. சர்வவித்யா - துளசிமாலை, தாமரை, புத்தகம், அபய ஹஸ்தம்
12. சாரதா - அபய ஹஸ்தம், தாமரை, புத்தகம், துளசிமாலை

**கே: சரஸ்வதி வைத்திருக்கும் வீணையின் சிறப்பு என்ன?**

ப: 'கச்சபே' என்பது அந்த வீணையின் பெயர். 'வல்லகே' என்று இன்னொரு வீணையையும் வைத்திருக்கிறார் என்று சொல்கின்றனர். தேவதைகளில் அனைவரும் ஒவ்வொரு வீணையை ஏந்தியிருக்கின்றனர்.

சிவனின் வீணை ருத்ரவீணை.
நாரதரின் வீணை மஹதி.
தும்புருவின் வீணை கலாவதி.
விஷ்வாவசுவின் வீணை ப்ருஹதி.
ஸ்யாமளாதேவியின் வீணை மாணிக்ய.
தக்ஷனின் வீணை தும்புரு.
உதயனனின் வீணை கோஷவதி என்று சொல்கின்றனர்.

பழைய கிரந்தங்களில் சொன்னபடி மொத்தம் 19 வீணைகள் உள்ளன. வீணையின் நாதமானது பத்து விதமான தெய்வீக நாதங்களில் ஒன்றானதாகும். இப்படி சங்கீத உலகத்தில் வீணைக்கு மேன்மை வந்துள்ளது.

**கே: சரஸ்வதியின் வாகனம் எது?**

ப: இவரது வாகனம் அன்னப்பறவை. ஹம்ஸவாஹினி என்று இவரை புராணங்களில் வர்ணிக்கின்றனர். மயில்கூட இவரின் வாகனம் என்று சிலர் சொல்கின்றனர். ஆனால் இதற்கு எங்கும் சரியான ஆதாரம் காணப்படவில்லை.

**கே: சரஸ்வதிதேவி வெறும் வித்யைக்கு (கல்வி) அபிமானினியா?**

ப: 'சங்கீதமபி ஸாஹித்யம் சரஸ்வத்யா ஸ்தனத்வயம்' என்னும் பிரபல வசனத்தின்படி சங்கீதம், சாகித்யம் என்ற இரண்டும் சரஸ்வதியும் ஸ்தனங்கள். இதன்படியே கல்வியின் பரம்பரை வளர்ந்து வந்துள்ளது. அதனால் வெறும் வேதங்களின் கல்விகளுக்கு மட்டுமல்லாமல், சங்கீதம், நாட்டியம், சிற்பக்கலை,

வரைக்கலை, ஆகிய பல விதமான கலைகளும் சரஸ்வதியிடமே தோன்றிவந்தன. அவை அனைத்திற்கும் இவரே அபிமானினியாக இருக்கிறார்.

**கே: சரஸ்வதிதேவி பிறந்தது எப்போது?**

ப: மாக சுத்த பஞ்சமியன்று சரஸ்வதி தோன்றினார் என்று சொல்கின்றனர். அன்றைய தினம், சரஸ்வதி கோயில்களில் மிகவும் விமரிசையாகக் கொண்டாடுகின்றனர்.

**கே: ஆஸ்வின மாதத்தில் வரும் நவராத்திரியில், அனைவரும் சரஸ்வதி பூஜை செய்கின்றனர். சரஸ்வதிதேவி அப்போதுதான் பிறந்தாரா?**

ப: நவராத்தியில், சஷ்டி திதியில், மூலா நட்சத்திரத்தன்று துவங்கி சரஸ்வதியை விசேஷமாக பூஜிக்கின்றனர். இது சரஸ்வதி தோன்றிய நாள் அல்ல. புராணங்களில் சொல்லியவாறு, இது சரஸ்வதியின் விரதம் மட்டுமே. விரதம் என்பது வேறு, தோன்றிய (அவதரித்த) நாள் என்பது வேறு. இதை அனைவரும் பின்பற்றியே ஆகவேண்டும்.

**கே: நவராத்திரி தினங்களில் சரஸ்வதிக்கு பூஜை செய்வது ஏன்?**

ப: சரஸ்வதியின் மற்றொரு பெயர் சாரதா. சரத் காலத்திற்கு இவரே அபிமானினி ஆனதால் சாரதா எனப்படுகிறார். குமரி முதல் இமயம் வரை அனைவரும் நவராத்திரி விழாவைக் சிறப்புடன் கொண்டாடுகின்றனர். நவராத்திரிக்கு இத்தகைய மேன்மை வந்திருப்பதே, சரஸ்வதி பூஜையால்தான்.

**கே: நவராத்திரி விழாவின்போது சரஸ்வதிதேவியை எப்படி பூஜிக்கவேண்டும்?**

ப: சரஸ்வதியின் சிலையென்றால் அது புத்தகமே. நற்சாஸ்திரங்களின் புத்தகங்களை வைத்து அன்று பூஜிக்கவேண்டும். தியான, ஆவாஹன முதலான 16வித உபசார பூஜைகளை செய்யவேண்டும். ஒவ்வொரு உபசாரங்களின்போது, சரஸ்வதி சம்பந்தமான ஸ்லோகங்கள் உள்ளன. அங்கபூஜை, புஷ்பபூஜை, பத்ரபூஜை மற்றும் அஷ்டோத்தர நாமாவளி பூஜைகளை செய்யவேண்டும். இறுதியில், 'சதுர்தஷஸு வித்யாஸு ரமதே யா சரஸ்வதே, சதுர்தஷஸு லோகேஷு ஸா மே வாசே வஸேத் ஸதா' என்று பக்தியுடன் வணங்கவேண்டும்.

**கே: மூலா நட்சத்திரத்தன்று மட்டும் சரஸ்வதி பூஜை செய்தால் போதுமல்லவா?**

ப: 'மூலேனாவாஹயேத் தேவீம் ஸ்ரவணேன விசர்ஜயேத்'. மூலா நட்சத்திரத்தில் சரஸ்வதியை ஆவாஹனம் செய்து, பூஜையை துவக்கி, ஸ்ரவண நட்சத்திரம் வந்தபோது விசர்ஜனம் செய்யவேண்டும். பொதுவாக சஷ்டியன்று சரஸ்வதி பூஜை துவங்கினால், விஜயதசமியன்று முடிவடைகிறது. இப்படி தினமும் பூஜை

செய்யவேண்டும். முடியாவிட்டால், மூலா நட்சத்திரத்தன்று விசேஷ பூஜை செய்து, மற்ற நாட்களில் சுருக்கமாக பூஜை செய்யலாம்.

**கே: சரஸ்வதி பூஜையன்று புதிய கல்வி / படிப்பை துவங்கலாம் அல்லவா?**

ப: தவறு. அனைத்து புத்தகங்களையும் பூஜையில் வைத்து, அன்று அனத்யயனத்தை (படிக்கக்கூடாத நாள்) பின்பற்ற வேண்டும். அன்று புதிய கல்வியை / படிப்பை துவக்கக்கூடாது. வெறும் மந்திர-ஜபம், பாராயணங்களை மட்டுமே செய்வதற்கு அன்று அனுமதி.

**கே: சரஸ்வதிதேவி பூமியில் எப்போது அவதரித்தார்? அவரது அவதாரங்கள் எவ்வளவு?**

ப: நான்முகப் பிரம்மனுக்கு எப்படி பூமியில் அவதாரம் இல்லையோ, அதைப்போல சரஸ்வதிதேவிக்கும் பூமியில் அவதாரம் இல்லை. பக்தர்களுக்காக பலமுறை மூலரூபத்திலேயே வந்து அருள்கிறார்.

**கே: ஶ்ரீமா சாரதாதேவி என்று சரஸ்வதிதேவியை 1850ம் ஆண்டில் அவதரித்தவர் என்று ராமகிருஷ்ண ஆசிரமத்தினர் சொல்கிறார்களே?**

ப: ராமகிருஷ்ணரின் மனைவியான சாரதாதேவியை சாட்சாத் சரஸ்வதிதேவியின் அவதாரம் என்று ராமகிருஷ்ண ஆசிரமத்தினர் சொல்கின்றனர். ஆனால் இதற்கு புராணங்களில் ஆதாரம் இல்லை. தேவதைகளின் அவதாரங்களைப் பற்றி வேதவியாஸரோ அல்லது ஶ்ரீமதாசார்யர் சொன்னவை மட்டுமே சரியான ஆதாரங்கள் ஆகும்.

**கே: சங்கராச்சாரியரை பின்பற்றுபவர்கள் சரஸ்வதியை விசேஷமாகக் கொண்டாடுகின்றனர். இதற்கு பின்புலம் என்ன?**

ப: 'காஷ்மீரபுர வாஸினி' என்பதுபோல, காஷ்மீரத்தில் சாரதாபீடம், அவர்களது சக்திபீடமாக இருக்கிறது. ஹம்ஸ நாமக பரமாத்மனிடமிருந்து பரமஹம்ஸ பரம்பரை வளர்ந்து வந்திருக்கிறது என்று நாம் எப்படி சொல்கிறோமோ, அது போல காஷ்மீரத்து சக்திபீடத்திலிருந்து பரம்பரை வளர்ந்து வந்திருக்கிறது என்கிறார்கள். 'சாரதாம்பா' என்னும் பெயரிலேயே பல கோயில்களை கட்டியிருக்கின்றனர். அவற்றை சாரதாபீடம் என்று பெயரிட்டே அழைக்கின்றனர். அதுமட்டுமல்லாமல், மதுசூதன சரஸ்வதி என்பதுபோல் சரஸ்வதி என்னும் பெயரையும் வைத்துக்கொள்கின்றனர்.

**கே: சிருங்கேரி க்ஷேத்திரத்திற்கும் சரஸ்வதிக்கும் என்ன சம்பந்தம்?**

ப: காஷ்மீரத்திலிருந்து சாரதாதேவியை சங்கராச்சாரியர் அழைத்து வந்தபோது, முன் செல்லும் சங்கராச்சாரியர் எங்கு தன்னை திரும்பிப் பார்க்கிறாரோ தான்

அங்கேயே நின்றுவிடுவேன் என்று கறாராகச் சொன்னாராம். ஆனால், கூடலி அருகில் வந்தபோது, தேவியின் கொலுசு சத்தம் கேட்காததால், சங்கராச்சாரியர் திரும்பிப் பார்த்திடவும், அவர் அங்கேயே நின்றுவிட்டாராம். ஆகையால், கூடலியில் மற்றும் சிருங்கேரியில் சரஸ்வதி நிலைத்திருக்கிறார் என்பது அவர்களின் கருத்து.

**கே: சங்கராச்சாரியாரின் சம்பிரதாயத்தில் சரஸ்வதி பூஜை எப்படி செய்கின்றனர்?**

ப: நாம் சரஸ்வதிதேவியை பரசுக்ல-த்ரயர் என்றும், ருஜுகளில் உத்தமரான பிரம்மனின் மனைவி என்றும் அழைக்கின்றோம். ஆனால் அவர்கள் அவரை அப்படி நினைப்பதில்லை. இவரை ஆதிசக்தி என்று சொல்கின்றனர். மேலும் லட்சுமியுடன் இவரை சேர்த்து, ஒரே தாரதம்யத்தில் பூஜிக்கின்றனர். இதெல்லாம் நம்முடைய சாஸ்திரத்திற்கு எதிராக இருக்கிறது.

**கே: ராமகிருஷ்ண ஆசிரமத்தைச் சேர்ந்தவர்கள் ஆகட்டும், ஸ்மார்த்தர் ஆகட்டும் சரஸ்வதியை விடாமல் பூஜிக்கின்றனர். ஆனால் நம்மிடம் இந்த வழிமுறையே இல்லை. இது தப்புதானே?**

ப: நான்முகப் பிரம்மனுக்கு தனியான பூஜை என்பது நம் வழிமுறையில் இல்லை. ஆகையாலேயே, அவரின் மனைவியான சரஸ்வதிதேவிக்கும் தனியாக பூஜை செய்வதென்பது நம் வழக்கத்தில் வரவில்லை. ஆனால், பாரதிதேவிக்கு விதிகளின்படி பூஜை செய்யும் வழக்கம் நம்மிடம் இருக்கிறது. முக்யபிராணரின் பிரதிமையில் (உருவச்சிலையில்), பிரம்மன் வசிப்பதைப்போல், பாரதிதேவியின் பிரதிமையில் சரஸ்வதிதேவி வசிக்கிறார். ஆகையால் பாரதிதேவிக்குப் பூஜை செய்யும்போது சரஸ்வதிதேவிக்கும் சேர்த்து பூஜை செய்வது நம் சம்பிரதாயம். அதுமட்டுமல்லாமல், எந்த நற்காரியத்தையும் துவக்கும்போது 'வாணீ ஹிரண்யகர்பாப்யாம் நம:', என்று சொல்லி நான்முகப் பிரம்மன் மற்றும் சரஸ்வதிதேவிக்கு அந்தச் செயலை சமர்ப்பிக்கும் வழக்கமும் நம்மில் உள்ளது.

**கே: நம் நாட்டில் சரஸ்வதிதேவிக்கு கோயில் இருக்கிறதா?**

ப: முன்னர் சொன்னதுபோல், ஸ்மார்த்தர் கட்டிய கோயில்கள் பல உள்ளன. சரஸ்வதிக்கு நூற்றுக்கும் மேற்பட்ட கோயில்கள் உள்ளன. இது மட்டுமல்லாமல், ஜைனர், பௌத்தர்கள்களில்கூட சரஸ்வதியை வணங்கும் வழக்கம் உள்ளது. சரஸ்வதிக்கு அவர்கள் கட்டிய கோயில்களும் உள்ளன.

**கே: சரஸ்வதிக்கு மூன்று ரூபங்கள் உள்ளன. அவை காயத்ரி, சாவித்ரி மற்றும் சரஸ்வதி. ஆகையால், தினமும் காயத்ரி ஜபம் செய்யும்போது நாம் சரஸ்வதியை நினைக்கவேண்டும் என்று ஸ்மார்த்தர் சொல்கின்றனர். இது சரியா?**

ப: தவறு. காயத்ரி மந்திரத்தில் சூர்யநாராயணனே வணங்கப்படும் தெய்வம் என்று ஸ்ரீமதாசார்யர் தெளிவாக சொல்லியிருக்கிறார். ஆகையால் காயத்ரி மந்திரத்தை ஜெபிக்கும்போது, நான்முக பிரம்மனின் மனைவியான சரஸ்வதியை நினைப்பது அநாவசியம்.

**கே: அப்படியென்றால், சரஸ்வதிதேவிக்கு மேலே கூறிய மூன்று ரூபங்கள் இல்லையா?**

ப: அப்படியில்லை. மூன்று ரூபங்கள் உண்டு. ஆனால் அந்த ரூபங்களில் அந்தர்யாமியாக ஸ்ரீஹரியே இருக்கிறான் என்று நினைக்கவேண்டும். காயத்ரி என்னும் ரூபத்தினால் காலையில், சாவித்ரி என்னும் ரூபத்தினால் மதியத்தில், சரஸ்வதி என்னும் ரூபத்தினால் மாலையில், நான்முகனின் மனைவியான தேவி அபிமானினியாக இருக்கிறாள்.

**கே: அப்படியென்றால், சரஸ்வதியின் காயத்ரி ரூபத்தை, காயத்ரி மந்திரம் ஜெபிக்கும்போது அபிமானினி என்று நினைக்கலாமா?**

ப: கண்டிப்பாக நினைக்கலாம். இதையே ப்ருஹதாரண்யக உபநிஷத் பாஷ்யத்தில், ஸ்ரீமதாசார்யர் தெரிவிக்கிறார் - 'அபிமானினீ து காயத்ர்யா முக்யா ஸ்ரீ: பரிகீர்திதா |' காயத்ரி மந்திரத்திற்கு லட்சுமியே முக்கியமான அபிமானினி. சரஸ்வதி அ-முக்கியமான அபிமானினி என்று இதன் பொருள். இப்படி நினைத்து பூஜிப்பது தவறில்லை. ஆனால் சூரியநாராயணனை மறந்து, சரஸ்வதி ஒருவரே காயத்ரி மந்திரத்தின் அதிபதி என்று நினைத்து ஜெபிப்பது தவறு என்பது ஸ்ரீமதாசார்யரின் அபிப்பிராயம்.

**கே: சரஸ்வதிதேவிக்கு காயத்ரி முதலான பெயர்கள் எப்படி வந்தன?**

ப: ப்ருஹதாரண்யக உபநிஷத்தின் ஐந்தாவது அத்தியாயத்தில் இதைப் பற்றி பல விவரங்கள் உள்ளன. சரஸ்வதியின் மகிமைகளைப் பற்றி அங்கு பல இடங்களில் புகழ்ந்து எழுதப்பட்டிருக்கிறது. ஸ்ரீஹரியின் காயத்ரி முதலான ரூபங்களை ஆதரிப்பதால், இவருக்கு காயத்ரி ரூபங்கள் வந்திருக்கின்றன என்று பொதுவாக சொல்லலாம்.

**கே: சரஸ்வதியையே மகாகாளி, துர்கா, பார்வதி என்றெல்லாம் சிலர் சொல்கிறார்களே? இது சரியா?**

ப: இது தவறு. துர்காசப்தசதி, சரஸ்வதியை புகழ்கிறது என்றும் சிலர் சொல்கின்றனர். ஆனால் ஸ்ரீஹரியின் மனைவியான துர்கையே வேறு, நான்முகனின் மனைவியான சரஸ்வதி வேறு, ருத்ரரின் மனைவியான பார்வதி வேறு. இம்மூவரையும் ஒன்று என்று எப்போதும் அறியக்கூடாது. அப்படி ஒருவேளை இவர்களில் ஒற்றுமையைக் கண்டால் அவர்களுக்குள் இருக்கும் அந்தர்யாமியை நினைக்கவேண்டும். அதிக பலன் வேண்டுமென்றும், விரைவான

பலன் கிடைக்கவேண்டுமென்றும், மூன்று தேவியரையும் சேர்த்து வணங்கச் செய்யும் தந்திரங்கள் இவை. இந்த தந்திரத்தின்படி இவர்களைப் பூஜித்தாலும் இவர்களுக்கு ஸ்வரூப-ஐக்கியம் (இவர்கள் மூவரும் ஒன்றாகமுடியாது) என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

**கே: சரஸ்வதிதேவியை எப்படி வணங்கவேண்டும்?**

ப: நான்முகனின் நாக்கிலிருந்து பிறந்த சுத்த-சாத்வீகளான சரஸ்வதி, நம் நாக்கிலும் நிரந்தரமாக நிற்கட்டும் என்று வணங்கவேண்டும். ராகவேந்திர ஸ்வாமியின் நாக்கில் சரஸ்வதியின் சன்னிதானம் இருக்கிறது என்று மிகவும் அழகாக வர்ணிக்கிறார். மோட்சம் கிடைக்கவேண்டுமென்றால் சரஸ்வதியின் அருள் நமக்கு கண்டிப்பாகத் தேவை. அவரின் அருள் இல்லையென்றால், நாம் அதோகதிக்கு போகவேண்டியிருக்கும். மேலும் ஒவ்வொருவரும் வித்யாரம்பக் காலங்களில் சொல்லும் ஸ்லோகம் - 'சரஸ்வதி நமஸ்தும்பம் வரதே காமரூபிணி, வித்யாரம்பம் கரிஷ்யாமி ஸித்திர்பவது மே சதா'. இந்த ஸ்லோகத்தினால் சரஸ்வதியை வணங்கி, ஸ்ரீஹரியின் தத்வத்தை அறிய முற்படவேண்டும். அதற்காக சரஸ்வதியின் அருளை வேண்டுவோமாக.

**கே: சரஸ்வதியை பூஜிக்கும்போது கவனிக்கவேண்டிய அம்சங்கள் என்ன?**

ப: அஞ்ஞானம், தவறான ஞானங்களை சரஸ்வதிதேவியிடம் காணமுடியாது. ஆகையினாலேயே இவர் பரசுக்லத்ரயரில் சேர்ந்தார். மிகுந்த சக்தி/கருணை மிக்கவர் என்று அறியப்படுபவர். காயத்ரி மந்திரத்தை ஜெபிக்கும்போது, சரஸ்வதியே காயத்ரி மந்திரத்தின் அதிபதி (போற்றப்படுபவர்) என்று அறியக்கூடாது. அப்படியே, லட்சுமி மற்றும் பார்வதியுடன் சரஸ்வதியும் ஐக்கியம் (ஒரே தாரதம்யத்தைச் சேர்ந்தவர்கள்) என்று நினைக்கக்கூடாது. இப்படி உண்மையான ஞானத்தைப் பெற்று பூஜித்தால் மட்டுமே, சரஸ்வதிதேவியின் பரிபூர்ண அருள் நமக்குக் கிடைக்கும். அப்போது மட்டுமே சரஸ்வதி தேவி ஞானத்தை வழங்குபவர் ஆகிறார்.

**கே: சரஸ்வதிதேவியின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: படைப்பின் துவக்கத்தில், நான்முகப் பிரம்மன் படைப்பதைத் துவக்கினார். அப்போது அவரின் ஒவ்வொரு உறுப்பிலிருந்து ஒவ்வொரு தேவதைகள் பிறந்தனர். அவரது நாக்கிலிருந்து சரஸ்வதி பிறந்தார். வாக்கிற்கு அபிமானியான இவர் மிகவும் அழகாக இருந்தார். அப்போது நான்முகன் இவரை விரும்பியதாக, அசுர மோகனத்திற்காக ஒரு நாடகமாடினார். மகளை விரும்பியது தவறு என்பதாக மரீசி முதலானவர்கள் நான்முகனுக்கு உபதேசம் செய்தனர். இதுவும் ஒரு நாடகமே. இதைக் கேட்ட நான்முகன் சரஸ்வதியை திருமணம் செய்யாமல் ஒதுக்கினார். அப்படி ஒதுக்கியவரை துர்ஜனர்கள் ஸ்வீகாரம் செய்தனர். ஆனால், இவர் பிரம்மனின் உண்மையான மனைவி அல்ல. இவரே துஷ்சாஸ்திரங்களுக்கு மற்றும் துர்ஜனர்களுக்கு அபிமானியாகி இருக்கிறார். லௌகிக விஷயங்களில்

மிகவும் ஆசைப்படுபவராக இருக்கிறார். இவரையே பிரம்மன் விரும்பியதாக நாடகம் ஆடினார்.

வேதங்களுக்கு அபிமானியான சரஸ்வதியே வேறு. இவர் பிரம்மனின் பாதி-உடலிலிருந்து பிறந்தவர். இவர் பிரம்மனின் நியத-பத்னி (எந்தக் காலத்திலும் எப்போதும் இவரே அவரின் மனைவி), பிரம்மனிடம் போய் சேர்ந்தாள். பிறகு பிரம்ம-சரஸ்வதியர் வெவ்வேறு ரூபங்களை தரித்து, பின் இணைந்தனர். இவர்கள் இணைந்ததில் இரு ஜீவன்கள் பிறந்தன. பிறந்த ஆண் ஜீவனே ஸ்வாயம்புவ மனு. பெண் ஷதரூபாதேவி ஆவார். பின்னர் இவர்கள் இருவரும் இணைந்து, இவர்களது பரம்பரை வளர்ந்தது.

பல விலங்குகள், பறவைகளின் ரூபங்களை சரஸ்வதி ஏற்றார். அதற்கேற்றாற்போல், பிரம்மனும் அந்தந்த விலங்குகள், பறவைகளின் ஆண் ரூபங்களை ஏற்றார். பிறகு அவர்கள் இருவரும் இணைந்ததால் அந்தந்த விலங்குகள், பறவைகளின் கூட்டம் பெருகியது. இப்படி படைப்பிற்கு முக்கியப் பங்கு வகித்த சரஸ்வதிதேவியின் மகிமை மிகவும் அபாரமானது. அதுமட்டுமல்லாமல், அனைவருக்கும் கல்வியறிவு அளிப்பவரும் இவரே ஆவார். இத்தகைய சரஸ்வதியின் அருள் நமக்கு நிரந்தரமாகக் கிடைக்கட்டும்.

**கே: நம் உடலில் சரஸ்வதி எங்கிருக்கிறார்? அவரை எப்படி நினைத்து வணங்கவேண்டும்?**

ப: ‘இடா பாகீரதீ நாம்னே பிங்களா யமுனா ஸ்ம்ருதா தயோர்மத்யே கதனாடி சுஷும்னாக்யா சரஸ்வதி’ என்ற வாக்கியத்தின்படி இடா நாடியில் கங்கா, பிங்களா நாடியில் யமுனா, சுஷும்னா நாடியில் சரஸ்வதி ஆகியோர் நிலைத்திருக்கிறார்கள். எப்படி கங்கா, யமுனைக்கு நடுவில் சரஸ்வதி நதியும் ரகசியமாக ஓடிக்கொண்டிருக்கிறாரோ, அதேபோல் நம் உடலிலும்கூட கங்கா-யமுனைகளின் நடுவில் சரஸ்வதியும் ஓடிக்கொண்டிருக்கிறார். சுஷும்னா நாடியின் வழியே இறந்தாலே அது மோட்சத்திற்கான வழியாகும். ஆகையால் மோட்சத்தை விரும்புபவர்கள், சுஷும்னா நாடியில் இருக்கும் சரஸ்வதியை எந்நேரமும் நினைத்து பூஜிக்கவேண்டும்.

***

# பாரதிதேவி

**கேள்வி: பாரதிதேவியின் நைவேத்தியத்தை நாம் ஏற்றுக்கொள்ளலாமா?**

பதில்: கண்டிப்பாக. நான் உண்ணும் ஒவ்வொரு உணவு பொருட்களையும் பிராணதேவருக்கு நைவேத்தியம் செய்வதைப்போல, பாரதிதேவிக்கும் நைவேத்தியம் செய்யவேண்டும்.

**கே: ஸ்ரீஹரி இல்லாத பிற தேவதைகளின் நைவேத்தியத்தை ஏற்றுக்கொண்டால், சாந்திராயன விரதத்தை செய்யவேண்டும் என்கிறார்களே?**

ப: கலிபிரவேசம் ஆகக்கூடிய ருத்ரர் முதலிய தேவதைகளின் நைவேத்தியத்தை ஏற்றுக்கொள்ளக்கூடாது என்கிறார்கள். ஆனால் எக்காலத்திலும் கலிபிரவேசம் செய்வதற்கு வாய்ப்பேயில்லாத, பரசுக்ல-த்ரயர்களின் நைவேத்தியத்தை ஏற்றுக்கொள்வதால் எந்தவித தோஷமும் வருவதில்லை.

**கே: அப்படியென்றால், தினந்தோறும் பூஜை நேரத்தில், பாரதிதேவிக்கும் நாம் பூஜை செய்யவேண்டுமா?**

ப: ஆம். அதில் சந்தேகமே இல்லை. ஆனால், எப்படி லட்சுமியை விட்டு எப்படி ஸ்ரீஹரியை தனியாக பூஜிப்பதில்லையோ, அப்படியே பிராணதேவரை விட்டு பாரதிதேவியை தனியாக பூஜிக்கக்கூடாது.

**கே: அப்படியென்றால், லட்சுமிதேவியைப் போல, பாரதிதேவியும்கூட நித்யா-வியோகினியா? (கணவனை என்றும் பிரியாதவர்).**

ப: லட்சுமியிடம் இருக்கும் மிகச்சிறப்பான குணங்கள், பாரதிதேவியிடம் இருப்பதற்கு சாத்தியமில்லை. ஆகையால், நித்யாவியோக என்று சொல்வதற்கு பதில், பிராணதேவரை விட்டு மற்றவர்களை கணவன் என்று எப்போதும் நினைக்காதவள் என்று சொல்லலாம்.

**கே: ஸ்ரீமதாசார்யர் அவதரித்தபோது, பாரதிதேவியும் இவ்வுலகில் அவதரித்தாரா?**

ப: கல்யாணிதேவியாக அவதரித்தார் என்று சிலர் சொல்கின்றனர். பாரதிதேவியின் அவதாரங்களைப் பற்றி வரும் பக்கங்களில் பார்ப்போம்.

**கே: பாரதிதேவியை எப்படி அறியவேண்டும்?**

ப: 'சமஸ்தகுண சம்பூர்ண பாரதே ச சரஸ்வதே | சமஸ்ததோஷரஹிதா ஷர்வஷக்ராதிவந்திதா || சரஸ்வதி மற்றும் பாரதிதேவியர் இருவரும் அனைத்து நற்குணங்களால் நிரம்பியவர்கள். எந்தவித தோஷங்களும் இல்லாதவர்கள். பிரம்ம-ருத்ரர்களுக்கு சமமானவர்களாக சரஸ்வதி-பாரதியரும் அனைத்து நற்குணங்களால் நிரம்பியவர்கள். தாரதம்யத்தில் பாரதிதேவியை விட சரஸ்வதி சிறிது மேலே இருந்தாலும், ஸ்வரூப-யோக்யதைகளில் இருவரும் சமமாகவே கருதப்படுகின்றனர்.

**கே: பாரதிதேவி எதற்கு அபிமானினியாக இருக்கிறார்?**

ப: நம்பிக்கை, திருப்தி, அனுபவம், சுகபோகங்கள், குருபக்தி, ஹரிபக்தி ஆகிய சாத்விக குணங்களுக்கு பாரதிதேவி அபிமானினியாக இருக்கிறார். இந்த குணங்களைப் பெறவேண்டுமென்றால், பாரதிதேவியை சரணடையவேண்டும்.

**கே: தத்வந்யாஸத்தில் 'பராய அவ்யக்தாத்மனே பிரம்மணே பாரதீப்யம் நம:', 'பராய மஹதாத்மனே ப்ரம்ஹவாயுப்யாம் நம:' என்றிருக்கிறது. அவ்யக்த தத்வத்திற்கு சரஸ்வதி பாரதியர் அபிமானினியாக இருக்கின்றனர். மஹத் தத்வத்திற்கு பிரம்மவாயுகள் அபிமானியாக இருக்கின்றனர் என்று தத்வந்யாஸத்தில் சொல்லியிருக்கின்றனர். அத்தகைய அவ்யக்ததத்வத்திற்கு சரஸ்வதி பாரதியர் அபிமானினியர் என்று வணங்கி, பிறகு மஹத்தத்வத்திற்கு அபிமானியான பிரம்மவாயுகளை வணங்கவேண்டும் என்பது எப்படி சரியாகும்?**

ப: இந்தக் குழப்பம் பலருக்கு உள்ளது. பதில் கீழ்வருமாறு. 'மஹத்தத்வாதி ஜனனீ ப்ரக்ருத்யாத்யபிமானினி' என்று சரஸ்வதி பாரதியர் அவ்யக்த தத்வத்திற்கு மட்டுமல்லாது அதற்கும் மூலகாரணமான ப்ரக்ருதிக்கும் அபிமானினியராக இருக்கிறார்கள் என்று பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், ப்ரக்ருதிக்கும், அவ்யக்த தத்வத்திற்கும் லட்சுமிதேவியே அபிமானினியாக இருக்கிறார். சரஸ்வதி பாரதியர் தற்காலிக அபிமானினியாக இருக்கின்றனர். இந்த கோணத்திலேயே 'அவ்யக்தாத்மனே ப்ரம்மணிபாரதீப்யாம் நம:' என்கிறார்கள். மேலும் பிரம்ம வாயுகளை முதலில் சொல்லாமல், சரஸ்வதி பாரதியை வணங்கினால், அது தாரதம்யத்திற்கு எதிரானது ஆகும்.

**கே: வாயுதேவர் மற்றும் பாரதிதேவி - இருவரும் எதில் சமம்? எதில் சமமில்லை?**

ப: லட்சுமி நாராயணரிடம் எப்படி காலத்திற்கேற்றவாறு சமானம் இருக்கிறதோ, அதைப்போலவே, முக்யபிராணர்-பாரதியரிடமும் இருக்கிறது என்று தெரியவேண்டும். முக்தியில் இருவருக்கும் ஒரே இடம் இருந்தாலும், குணத்தில் வேறுபாடு இருப்பதால் ப்ராணதேவரிடம் இருக்கும் ஆனந்தம் / குணம், பாரதிதேவியிடம் இருப்பதில்லை. இதைப்போலவே பிரம்ம சரஸ்வதியிடமும் வேறுபாடு அறிந்துகொள்ள வேண்டும்.

**கே: லட்சுமிதேவியிடம் இருக்கும் பல ரூபங்களில், தட்சிணா என்னும் ரூபத்திற்கு சிறந்த இடம் இருப்பதைப்போல, சரஸ்வதி பாரதியிடம்கூட சிறந்த ரூபங்கள் உள்ளனவா?**

ப: ஆம். எப்போது பிரம்மனும் வாயுதேவரும் அர்த்தநாரி ரூபத்தை எடுக்கிறார்களோ, அப்போது மற்ற அனைத்து ரூபங்களின் ஆதிக்கமும் இவர்களிடத்தில் இருக்கிறது. 'அர்த்தநாரீனரத்வேன யதா பர்த்ரா ஸஹ ஸ்திதா | ததோத்தமா தக்ஷிணாவத் ததன்யத்ராவரா மதா'.

**கே: பாரதிதேவியின் தேகத்தின் லட்சணங்கள் என்ன? அவரின் ஆயுள் எவ்வளவு?**

ப: சரஸ்வதி மற்றும் பாரதியரின் தேகங்கள் 32 லட்சணங்களினால் ஆனது. 96 அங்குல உயரம் கொண்டவர்களாக இருக்கின்றனர். ருத்ராதி அனைத்து தேவர்களால் என்றென்றும் முழுதாக அறியமுடியாத மகாமகிமையைக் கொண்டவர். மனிதர்களின் ஆயுளைப் போன்று 311 ட்ரில்லியன் ஆண்டுகள் ஆயுளைக் கொண்டவர்.

**கே: பாரதிதேவி எப்படி சர்வக்ஞர் ஆகிறார்?**

ப: உலகத்தில் உள்ள அனைத்து விஷயங்களைப் பற்றியும் முழுமையாக அறிந்தவர் பாரதிதேவி. ஆனால் ஸ்ரீஹரியைப் பற்றி முழுவதுமாக இவர் அறிந்திருப்பதில்லை. கூடவே லட்சுமி, பிரம்மா, வாயு இவர்களைப் பற்றியும்கூட இவர் முழுவதுமாக அறிந்திருப்பதில்லை. ஆனால் மற்ற அனைத்து தேவதைகளைவிடவும் அதிகமாகத் தெரிந்து வைத்திருப்பவர்.

**கே: 'உத்க்ராந்திகத்யாகதீனாம்' என்னும் சூத்திரத்தில் சொல்லியிருப்பதைப்போல, பிரம்மா, வாயு, சரஸ்வதி மற்றும் பாரதி இவர்களின் ஸ்வரூபம் (தேகம்) அணுவைப் போல இருக்கிறது. இவ்வளவு சிறியதாக உள்ள அணு, அனைத்து இடங்களிலும் நிலைத்திருப்பதற்கு எப்படி சாத்தியம்? மேலும் அனைத்து ஞானங்களையும் பெறுவதற்கு எப்படி சாத்தியம்?**

ப: நறுமணம் மிகுந்த கஸ்தூரியை வீட்டில் வைத்தால், வீடு முழுவதும் எப்படி அந்த நறுமணம் வீசுமோ, அப்படியே தேவதைகளும் அணு ரூபமே ஆனாலும் தங்களின் தாரதம்ய தகுதிக்குத் தக்கவாறு அனைத்து இடங்களிலும் நிலைத்திருப்பர். இதைப்போலவே, பாரதிதேவியும் அனைத்து பெண்-ஜீவர்களைவிட அதிக குணம் / ஞானங்களைப் பெறுபவளாகிறார்.

**கே: ஸ்வரூபத்தில் பரிமாணாதிக்யவை (பரிமாணாதிக்யம் = வளர்வது அல்லது சுருங்குவது) ஒப்பினால் என்ன பிரச்னை?**

ப: ஆம். ஸ்ரீஹரியின் மிகவும் அற்புதமான சக்தியினால், ஸ்வரூபத்தில் பரிமாணத்தை ஒப்பலாம். இதையே ப்ருஹத்பாஷ்யத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்லியிருக்கிறார் - 'அல்பதேஜஸ்ததைவால்பம் ஜீவரூபம் ஹி ஸம்ஸ்ருதௌ | ததேவ ஸுமஹத்தேஜ: கரோதி பகவான் மஹத்'.

**கே: விகாரத்தை ஒப்பினால் அநித்வத்வ (தாற்காலிக நிலைமை) என்று ஆகிறதா?**

ப: விரிவடைவது - சுருங்குவது இவற்றை விகாரம் என்று சொல்லமுடியாது. இந்த விரிவடைதல் - சுருங்குதல் இவை ஸ்ரீஹரியின் அற்புத சக்தியினால் நடைபெறுகிறது. அணிமா முதலான யோக சித்திகளை, ஜீவர்கள் பெறுகிறார்கள். மேலும் முக்தியில் அனைவரும், மிகச் சிறியதான தன் ஸ்வரூபத்தை பெரிதாக்கிக் கொள்கிறார்கள். ஆகையால், அநித்வத்வ என்னும் சந்தேகத்திற்கு இடமில்லை.

**கே: நம் வலது கண்ணில் வாயுதேவர் மிகவும் அழகான கோவத்ஸ ரூபத்தில் இருக்கிறார். அங்கு பாரதிதேவியை எப்படி நினைக்கவேண்டும்?**

ப: தன் கணவரின் மிகவும் அழகான கன்றுக்குட்டியின் ரூபத்தைக் கண்டு, பாரதிதேவிக்கு மிகவும் அதிகமான பாசம், பக்தி உண்டாகிறது. தான் கண்ணின் மேல் பாகத்தில் அமர்ந்து, அந்த கன்றின் அழகினை முழுமையாக ரசிக்கிறாள். அது மட்டுமல்லாமல், அத்ரி என்னும் பெயரைக் கொண்டு, ஒரு மனதுடன் அந்தக் கன்றினையே தியானம் செய்கிறாள். இந்த கணவன் - மனைவியரின் ஒற்றுமை வேறெங்கும் காணமுடியாதது.

**கே: நாம் மூச்சு விடுவதற்கு காரணம் பிராணதேவர். இவருடன் சேர்த்து பாரதிதேவியையும் சிந்திக்க வேண்டுமா?**

ப: 'நாஸத்யதஸ்ரரு ஸ்வாஸமானி பாரதி' (ஹரி-8-8) என்று சொல்லியிருப்பதைப் போல, அஸ்வினி தேவதைகளுக்குள் வாயுதேவர் மற்றும் பாரதிதேவி நிலைத்திருந்து நாம் சுவாசம் செய்யும் செயலை நடத்துகின்றனர்.

**கே: அப்படியென்றால் பாரதிதேவியும், பிராணதேவருடன் சேர்ந்து ஹம்ஸமந்திரத்தை ஜெபிக்கிறாரா?**

ப: 'சுததியிம்தெடகொடி ஹம்ஸோபாஸனெய மாள்ப' என்பதுபோல் பாரதிதேவியின் கூட இருந்து ஹம்ஸமந்திரத்தை பிராணதேவர் ஜெபிக்கிறார்.

**கே: நம் தேகத்தில் பாரதிதேவியை எங்கு, எப்படி பூஜிக்கவேண்டும்?**

ப: ‘த்விதளபத்மவு ஷோபிபுது கண்டதலி’ என்று சொல்வதைப்போல நம் கழுத்தில் இரண்டு இதழ்கள் உள்ள தாமரை உள்ளது. வாயுதேவர் அந்த தாமரையின் வலது இதழில் நிலைத்திருக்கிறார். இடது இதழில் பாரதிதேவி இருக்கிறார். இருவரும் தைஜஸ ரூபியான ஸ்ரீஹரியை நிரந்தரமாக பூஜித்து வருகிறார்கள். இத்தகைய சிறப்பு வாய்ந்தவர்களான பிராண-பாரதியரை வணங்குவதைவிட சிறந்த காரியம் வேறு என்ன இருக்கப்போகிறது?

**கே: பாரதியை வாக்-அபிமானினி என்கிறார்கள். ஆகையால் வாக்-இந்திரியத்திலும் (நாக்கு) பாரதி இருக்கிறாரா?**

ப: ஆம். வாக்-இந்திரியத்தில் ஹயக்ரீவரூபியான ஸ்ரீஹரி பெண் ரூபத்தில் இருக்கிறார். இவரை பூஜித்தவாறு, பாரதிதேவி அங்கிருந்துகொண்டு, வாக்-அபிமானினியாக இருக்கிறார்.

**கே: வலது கண்ணில், கழுத்தில், நாக்கினில் இப்படி மூன்று இடங்களில் நிலைத்து, பாரதிதேவி நம்மை ரட்சிக்கிறார் என்று கூறினீர். உடலின் வேறு பகுதிகளிலும் பாரதிதேவி இருக்கிறாரா?**

ப: நம் உடலின் வலது பாகத்தில் இருக்கும் அனைத்து நாடிகளிலும்கூட பாரதிதேவியின் சன்னிதானம் இருக்கிறது. அதுமட்டுமல்லாமல், நாடிகளில் ஆறாகவும் பாய்ந்து நம்மை சுத்தப்படுத்துகிறார். பெண்-உடலுக்கு பாரதிதேவி முக்கிய அபிமானினியாக இருக்கிறார். இதனை பெண்கள் விசேஷமாக நினைத்துப் பூஜிக்கவேண்டும்.

சிரி சரஸ்வதி பாரதி சௌபர்ணி வாருணி பார்வதிமுகரு
இருதிஹரு ஸ்த்ரீயரொளு அபிமானி தாவெனிஸி (ஹரி-11-29)

**கே: நாம் உண்ணும் உணவுப் பொருட்களில் பாரதிதேவியின் அபிமான்யத்தைப் பெற்றது எவை?**

ப: ‘அன்னமானி சஷாங்கதொளு காருண்யசாகர கேசவனு பரமான்னதொளு பாரதியு’ (ஹரி-31-14) என்று சொல்வதைப்போல பரமான்னத்தில் (பாயசம்) பாரதிதேவி இருக்கிறார். ஆகவே அவர் சன்னிதானம் இருக்கும் பாயசத்தை, மிச்சம் வைக்காமல் சாப்பிடவேண்டும் என்றும்; இதர பொருட்களை சிறிதளவு மிச்சம் வைத்தே சாப்பிடவேண்டும் என்பதும் வழிவழியாக நம்மிடம் இருந்துவரும் ஒரு நம்பிக்கை. லட்சுமிசோபான’வில் முக்யபிராணரின் வீட்டில் பாரதிதேவி, நாராயணரூபியான ஸ்ரீஹரிக்கு, பாயசம் ரசான்னத்தை பரிமாறினார் என்று வருகிறது.

**கே: நம் ஆயுளில், பாரதிதேவி எப்போது அபிமானினியாகிறார்?**

ப: நம் ஆயுளில், 30 வயதுவரை பிரம்மதேவர், 57 வயதுவரை வாயுதேவர், 82 வயதுவரை சரஸ்வதிதேவி, 100 வயதுவரை பாரதிதேவி அபிமானினியாக இருக்கின்றனர். இப்படி அனைவரின் ஆயுளுக்குக் காரணமாகி, வாழ்க்கை என்னும் யக்ஞத்தை சமர்ப்பிப்பதற்கு பாரதிதேவி முக்கிய காரணம் ஆகிறாள்.

**கே: பாரதிதேவியிடம், ஸ்ரீஹரியின் எந்த ரூபத்தை நினைக்க வேண்டும்?**

ப: 'பாரதி வாக்தேவி வாயு ஸரோருஹாஸனரல்லி னெலெஸிஹரெல்ல காலதலி' (ஹரி-8-26) என்று சொன்னதைப்போல, அனிருத்த ரூபியான ஸ்ரீஹரி சக்திநாமகனாக பாரதிதேவியில் எப்போதும் நிலைத்திருக்கிறார். இதையே நாமும் நினைக்க வேண்டும்.

**கே: பாரதிதேவி எப்படி பிறந்தார்?**

ப: ஸ்ரீஹரியின் பிரத்யும்ன ரூபம் மற்றும் லட்சுமியின் க்ருதி ரூபத்திற்குப் பிறந்தவர் பாரதிதேவி. பிரத்யும்ன மற்றும் க்ருதிக்கு இரு பெண்குழந்தைகள் பிறந்தனர். முதலாமவர் சரஸ்வதி, அடுத்ததே பாரதி.

தாத்பர்ய நிர்ணயத்தில் ஸ்ரீமதாசார்யர் இதையே 'சூத்ரம் ஸ வாயு: புருஷோ விரிஞ்சி: ப்ரத்யும்னதஸ்சாத் க்ருதௌ ஸ்த்ரீயௌ த்வே' என்று விளக்கியிருக்கிறார்.

**கே: பாரதிதேவியின் சாதனை எவ்வளவு கல்பங்கள்?**

ப: பிராணதேவரைப் போலவே 200 கல்ப சாதனை. ஆனால், அவரை விட யோக்யதையில் சிறிது குறைவானவர்.

**கே: ஸ்ரீஹரியை பாரதிதேவி எப்போதும் பார்த்தவாறு இருக்கிறாரா?**

ப: சரஸ்வதி மற்றும் பாரதிதேவி இருவரும், ஸ்ரீஹரியை தங்களின் இதயத்தில் சந்திரனைப் போல பிம்பரூபியாக எப்போதும் நினைத்தவாறு பூஜித்துக் கொண்டிருக்கின்றனர்.

**கே: ஜீவன-ஸ்வரூபத்தில் ப்ராணதேவருக்கு பிரவேசம் இருக்கிறது என்று சொல்வதற்கு பல ஆதாரங்கள் உள்ளன. அதேபோல, பல விவரங்களும் உள்ளன. ஆனால் பாரதிதேவிக்கு பிரவேசம் இருக்கிறது என்று சொல்வதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது?**

ப: ஸ்வரூப-சரீரத்தில் பாரதிதேவிக்கு பிரவேசம் இல்லை என்று சொல்வதற்கு எங்கும் ஆதாரம் இல்லை. ஆனால், 'பாரதி மஜ்ஜனனீ' என்று ஜகன்னாததாசர் இயற்றிய பாடலில், மூன்று குணங்களால் ஆன லிங்க-தேகத்தில் அணுவின் அளவில் இருக்கிறார் என்று சொல்கிறார். இதைத்தவிர, ஹரிகதாம்ருதசாரத்தில்

பல இடங்களில், பாரதிதேவிக்கு லிங்கதேகத்தில் பிரவேசம் இருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்.

**கே: எவ்வளவு குணங்களால், பாரதிதேவி வாயுதேவரைவிட குறைவானவர்?**

ப: ஞான, ஆனந்தம் முதலான குணங்களில் 100 குணங்களால் குறைவானவர்.

**கே: ஹரிகதாம்ருதசாரத்தில், விஜாதீய (நடப்பில் இல்லாத / அசாதாரண) 100 குணங்களால் வாயுதேவரைவிட பாரதிதேவி குறைந்தவர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனா, ஞான, ஆனந்த முதலான குணங்களால் குறைவானவர் என்று நீங்கள் சொல்கிறீர்களே?**

ப: பெல்லாரி ஆச்சாரியர் முதலான பல உரையாசிரியர்களும், ஞானம் முதலான குணங்களால் குறைவானவள் என்று சொல்கின்றனர். 'உமா யாவதனந்தாம்ஷான்' என்னும் அனுவியாக்யானத்தின் ஸ்லோகத்தை பார்க்கும்போதும் அப்படியே தெரியவருகிறது. ஆனால் இங்கிருக்கும் 'அனந்த' என்னும் சொல்லிற்கு 100 என்றே பொருள் கொள்ளவேண்டும்.

**கே: பற்பல அம்சத்தினால் குறைந்தவர் என்று நினைத்தால் என்ன பிரச்னை?**

ப: பிருஹதாரண்யக பாஷ்யத்தில் மற்றும் அனுவியாக்யானத்தில் ஸ்ரீமதாசார்யர் 'சந்த்ரேத்யாதி ஸ்வரூபாஸ்தேப்ய: ஷதகுணாவரா:' என்று மிகத் தெளிவாக, நூறு குணங்களால் குறைவானவள் என்று சொல்லியிருக்கிறார். பற்பல குணங்களால் குறைந்தவள் என்றால், பாரதிதேவிக்கும் மற்ற தேவதைகளுக்கும் தாரதம்யம் சரியாக வருவதில்லை.

**கே: ஞானத்தில் பற்பல அம்சத்தினால் குறைந்தவள் என்றும் ஆனந்தத்தில் 100 அம்சத்தின் குறைந்தவள் என்று கூறினால் என்ன பிரச்னை?**

ப: பாரதியின் ஞானத்தைவிட வாயுதேவரின் ஞானம் பற்பல அம்சத்தினால் அதிகம் என்று சொன்னால், ஆனந்தமும் அப்படியே சொல்லவேண்டியதாகிறது. ஏனென்றால், ஆனந்தத்திற்கு ஞானமே காரணமாகிறது. ஆனந்தம் 100 மடங்கு அதிகம் என்பதற்கு ஆதாரம் உள்ளது. அதற்குக் காரணமான ஞானமும் 100 மடங்கு அதிகம் என்பதே சரியாக இருக்கும்.

**கே: 'ஷதாவரள்' என்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது?**

ப: சாந்தோக்ய உபநிஷத்தின் பாஷ்யத்தில் 'ஷிவாதாஷா தத்தைவாஸ்யா: முக்யவாயு: ஷதோத்தர:' என்றும் ஐதரேய பாஷ்யத்தில்

'பிரம்மவாயு ச தத்பார்யே வீந்த்ரஷேஷௌ ச தத் ஸ்த்ரியௌ ।
ஷிவஸ்தத்தயிதா ஷக்ரகாமௌ தத்தயிதாதய: ॥

ஸர்வே ஸுரா: க்ரமேண்யைவ விஷ்ணோர்ஞாதா அபாகைகா: |
ஞானானந்தபலாத்யேஷு விஷ்ணுபக்தௌ ச ஸர்வஷ: |
ஹீனா: ஷதகுணேன்னைவ க்ரமேணானேன தே மதா: ||’

இத்தகைய ஆதார வாக்கியங்களை கவனமாகப் பார்த்தால், அனைத்து குணங்களை விடவும் 100 மடங்கு குறைவானவள் என்று அறியவேண்டும்.

**கே: அனைத்து ஹரிபக்தர்களும் பாரதிதேவியை என்னவென்று சொல்லி பூஜிக்கவேண்டும்?**

ப:
ஆசார்ய: பவனோஸ்மாகம் ஆசார்யாணீ ச பாரதீ |
தேவோ நாராயண: ஸ்ரேஷ: தேவி மங்களதேவதா ||

நம் அனைவருக்கும் ஆசாரியர் என்றால் அவர் ஸ்ரீமதாசார்யரே. ’ஆசார்யாணீ என்றால் அது பாரதிதேவி. சர்வோத்தமனான தேவன் என்றால் அவர் ச்ரேஷ. மங்களதேவதா என்றால் அது மகாலட்சுமி ஆவார். வித்யாரம்ப (புதிய கல்வியைத் துவக்கும்போது) பாரதிதேவியை ‘ஆசார்யாணீ’ என்று வணங்கவேண்டும் என்கிறார் ராஜர்.

**கே: பாரதிதேவியை வேதங்களுக்கு அபிமானினி என்கிறார்கள். இதன் பொருள் என்ன?**

ப: அபௌருஷேயமான (ஆதி காலத்திலிருந்து இருக்கும்) வேதங்கள் ஜடம் ஆகும். இத்தகைய ஜடமான வேதத்திற்கு பல தேவதைகள் அபிமானியாக இருக்கின்றனர். ஒவ்வொரு எழுத்திற்கும் ஒரு வர்ணாபிமானி தேவதைகளும் இருக்கின்றனர். இவர்கள் அனைவருக்கும் மேல், முக்கிய அபிமானி தேவதையாக இருப்பவரே பாரதிதேவி. இவரே அனைத்து தேவதைகளிலும் நின்று, ஸ்ரீஹரியை சர்வோத்தமன் என்று கொண்டாடுகிறார். இவரை மறந்து வேத-அத்யயனம் செய்தால், அந்த வேதங்களிலிருந்து தத்வஞானம் கிடைப்பது சாத்தியமே இல்லை.

**கே: அனைத்து வேத மந்திரங்களும் ஸ்ரீஹரியைத் தவிர, வேறு விஷயங்களைப் பற்றியும் புகழ்ந்து பேசியுள்ளன. ஜகத்-மித்ய (உலகம் பொய்யானது) என்றுகூட வேதம் சொல்கிறது என்று அத்வைதிகள் சொல்கின்றனர். இப்படியிருக்கும்போது, அனைத்து வேத மந்திரங்களினால் பாரதிதேவி, ஸ்ரீஹரியையே சர்வோத்தமன் என்று எப்படி கொண்டாடுவது சாத்தியம் ஆகிறது?**

ப: அனைத்து வேதங்களும், வேத மந்திரங்களில் இருக்கும் ஒவ்வொரு எழுத்து, சொல், வாக்கியம் ஆகிய அனைத்துமே ஸ்ரீஹரியையே புகழ்ந்து பாடியுள்ளன. இதனை அறியாத அஞ்ஞானிகள், வேதம் வேறு பல விஷயங்களையும் புகழ்கிறது என்கிறார்கள். அத்வைதிகள் நினைப்பதும் அப்படியே. இதெல்லாம் பாரதிதேவிக்கு

நாம் செய்யும் மிகப்பெரிய அவமானம் ஆகும். இப்படி தவறாக நினைத்து, பாரதிதேயின் அருள் நமக்கு கிடைக்காமல் போகக்கூடாதெனில், அனைத்து வேதங்களும் விஷ்ணுவையே புகழ்கின்றன என்று சரியாக நினைக்கவேண்டும்.

**கே: வேதங்களில் இருக்கும் எந்த மந்திரங்கள் பாரதிதேவியை புகழ்கின்றன?**

ப:
'கௌரீர்மாய ஸலிலானி தக்ஷத்யேகபதி த்விபதி ஸாசதுஷ்பதி । அஷ்டாபதி நவபதி பபூவுஷீ சஹஸ்ரக்ஷரா பரமேவ்யோமன் ॥'
'யஸ்தே ஸ்தன: ஷதயோ யோ மயோபூர்யேன விஷ்வா புஷ்யஸி தமிஹ வார்யாணி । யோ ரத்னதா வஸுவித்ய: சுதத்ர: சரஸ்வதி தமிஹ தாதவே க: ॥'

என்னும் இரு மந்திரங்கள் சரஸ்வதி மற்றும் பாரதி ஆகியோரை புகழ்கின்றன என்று தந்த்ரசார சங்க்ரஹத்தில் ஸ்ரீமதாசார்யர் சொல்கிறார். முதலில் இவை ஸ்ரீஹரியையும், பின்னர் சரஸ்வதி, பாரதியையும் புகழ்கின்றன என்று சொல்கிறார். ஆகையால், யாருக்கு பாரதிதேவியும் அருள் வேண்டுமோ, அவர் இந்த இரண்டு மந்திரங்களைச் சொல்லி அவரை வணங்கவேண்டும்.

**கே: பாரதிதேவியைப் பற்றி புராணங்களில் சொல்லப்பட்டிருக்கிறதா?**

ப: கருடபுராணத்தில், பாரதிதேவியின் பல ரூபங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அதில் 'புத்தி' என்பதும் ஒரு ரூபம் ஆகும்.

'ஸுபுத்தி ஜனகத்வாத்ஸா ஸஜ்ஜனானாம் ககேச்வர ।
அதோ ஸா புத்தினாம்னேதி பாரதீ ஸம்ப்ரகீர்திதா'

என்று இவரை வர்ணிக்கிறார். மற்றும் அனைத்து வேதங்களுக்கு அபிமானினியாக இருப்பதால், இவரை 'வேதாத்மிகா' என்றும் கருடபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஸர்வவேதாபிமானித்வாத் ஸர்வவேதாத்மிகா ஸ்ம்ருதா ॥'.

**கே: பாரதிக்கு புத்தி என்னும் பெயரைப் போல வேறு என்ன பெயர் உள்ளது?**

ப: இவரின் இன்னொரு பெயர் - அனுபூதி. ஸ்ரீஹரியின் தத்வஞானம் நம் அனுபவத்திற்கு வருமாறு செய்கிறார் ஆகையால் இவருக்கு அனுபூதி என்னும் பெயர் வந்தது என்று சொல்கிறார்கள். 'யதானுபூதம் ச ஹரிம் ஸம்யக் தர்சயதி யத: । அதோऽனுபூதிஸஞ்ஞா ஸா பாரதி பரிகீர்திதா ॥'

**கே: பாரதி என்னும் சொல்லின் பொருள் என்ன?**

ப: பா என்றால் சுகம் என்று பொருள். எப்போதும் சுகரூபியான இவருக்கு பாரதி என்று பெயர். அல்லது பா என்றால் ஞானம் என்று பொருள். ஞானரூபியான

வாயுதேவரின் மனைவியாக இருப்பதால் இவரை பாரதி என்று அழைக்கின்றனர். 'ஞானரூபஸ்ய வாயோஸ்து பார்யா ஸா பரிகீர்த்திதா | ஸதா ஸுகஸ்வரூபத்வாத் பாரதீதி ஸுகாத்மிகா ||'

**கே: ஹரிவாயுகளிடத்தில் பாரதிதேவி எப்படி பக்தி செய்கிறார்?**

ப: மகாகுரு என்று அழைக்கப்படும் வாயுதேவரிடம், ஒரு கணமும் விடாமல் பாரதிதேவி பக்தி செய்கிறார். ஆகையால் இவருக்கு 'குருபக்தி' என்னும் பெயரை வேதவியாஸதேவர் கொடுத்தார். இதைவிட அதிக பக்தியை ஸ்ரீஹரியிடம் செய்வதால் 'ஹரிப்ரீதி' என்னும் பெயரையும் வேதவியாஸதேவர் கொடுத்தார்.

'குருஸ்து வாயுரேபோக்த: தஸ்மின் பக்தியுதா ஸதா |
அதஸ்து பாரதீ நித்யம் குருபக்திரிதி ஸ்ம்ருதா |
மஹாகுரோஸ்து வாயோஷ்சபார்யா வை ஸம்ப்ரகீர்த்திதா |
ஹரௌ ஸ்னேஹயுதத்வாச்ச ஹரிப்ரீதிரிதி ஸ்ம்ருதா |

**கே: வேதங்களுக்கு மட்டும் பாரதிதேவி அபிமானினியாக இருக்கிறார் அல்லவா?**

ப: வேதங்களுக்கு மட்டும் அல்ல. அனைத்து மந்திரங்களுக்கும்கூட இவரே அபிமானினியாக இருக்கிறார். வேதங்களுக்கு அபிமானினியானதால் 'வேதாத்மிகா' என்னும் பெயரையும், அனைத்து மந்திரங்களுக்கும் அபிமானினியானதால் 'சகலமந்திராத்மிகா' என்ற பெயரையும் பெற்றிருக்கிறார். 'ஸர்வமந்த்ராபிமானித்வாத் ஸர்வமந்த்ராத்மிகா ஸ்ம்ருதா'.

**கே: பாரதிதேவியின் அருள் எத்தகையது?**

ப: ஒவ்வொரு ஆராய்ச்சியாளரின் தாய் பாரதிதேவி. இவரின் அருளால் பிறவி ஊமையும் பேச்சைப் பெறுகிறான். முட்டாள்கூட அறிவாளியாகிறான். இதைவிட பெரிய அருள் என்ன இருக்கப்போகிறது? இதற்கு எதிர்ப்பதமாக, பாரதிதேவியின் அருள் கிடைக்கவில்லையென்றால், அதோகதிக்கு செல்லவேண்டியதே ஆகும். அனைத்து வேதங்களுக்கும் அபிமானினியான பாரதிதேவியின் அருள் நமக்கு எப்போதும் கிடைக்கட்டும்.

**கே: பாரதிதேவியின் மகிமையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: 'பாரதீம் சுமதீம் கிருஷ்ணதீரதிம் ஸ்மரதாம் கதீம் இரதம்' என்று சரஸபாரதிவிலாஸத்தில் ஸ்ரீவாதிராஜர் பாரதிதேவியை துதித்துள்ளார். உலக விஷயங்களில் விரக்தியையும், கிருஷ்ணபக்தியில் நற்புத்தியையும் கொடுத்து நம்மை காப்பாற்றட்டும் என்று வேண்டுகிறார். நம் அனிருத்த-சரீரம் மற்றும் லிங்க-சரீரத்திற்குள் நின்று நம்மை சாதனைகளை (நற்செயல்களை) செய்ய

வைக்கிறார். முக்யபிராணருடன் சேர்ந்து ஹம்ஸமந்திரத்தை ஜபிக்கிறார். இவரைப் பற்றி மேலும் படிப்பதால், நம் வாழ்க்கைக்கு ஒரு புதிய அர்த்தம் பிறக்கிறது.

**கே: பாரதிதேவியின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: படைப்பின் துவக்கத்தில் க்ருதி மற்றும் ப்ரத்யும்னரிடம் இரு பெண் குழந்தைகள் பிறந்தனர். மூத்தவர் சரஸ்வதி. இளையவர் பாரதி. படைப்பிற்குக் காரணமான பிரம்மனை சரஸ்வதி மணம் முடித்தார். அனைத்து தேவர்களுக்கும் குரு என்று அழைக்கப்பட்ட, அனைவரின் ஸ்வரூபோத்தாரகன் ஆன வாயுதேவரை பாரதி மணம்முடித்தார்.

முக்யபிராணதேவரின் மனைவியான பாரதிதேவியிடம், மகனாக ருத்ரர் பிறந்தார். பிறகு மற்ற தேவதைகளும் அவருக்கு மகனாகப் பிறந்தனர். ஆகையால் இவர் 'தேவமாதா' என்று அழைக்கப்பட்டார். அது மட்டுமல்லாமல், அனைத்து தேவதைகளுக்கும் குரு என்றும் அழைக்கப்பட்டார். அனைத்து தேவதைகளும், பாரதிதேவியிடம் பாடம் படித்து, பிறகு முக்யபிராணரிடம் பாடம் படித்து, ஸ்ரீஹரியை கொண்டாடினர். இந்த முறையில் ஸ்ரீஹரியை குரு என்று பூஜை செய்தால், மோட்சம் அடைவதற்கு சாத்தியமாகின்றது.

ரிக்வேத, யஜுர்வேத, ஸாமவேத, அதர்வவேத வேதங்களுக்கு பாரதிதேவி அபிமானினியாக இருக்கிறார். வேத-ஸ்வரூபளான இவர் ஒரு கணமும் விடாமல் ஸ்ரீஹரியை, வேதங்களினால் துதித்துக்கொண்டே இருக்கிறார். மற்றும் மகாலட்சுமியையும், நான்முக பிரம்மனையும், தன் கணவரான வாயுதேவரையும் வேதங்களினால் துதித்து, தானும் வேதங்களினால் போற்றப்படுபவர் ஆகிறார்.

அதுமட்டுமல்லாமல், அனைத்து புராண, இதிகாச, மூலராமாயண, மகாபாரத, பஞ்சராத்ர ஆகிய சாஸ்திரங்களுக்கும்கூட பாரதிதேவியே அபிமானினி ஆகியிருக்கிறார். இவரின் அருள் இருந்தால் மட்டுமே வாக்-சித்தி (சொல்வதெல்லாம் பலிப்பது) ஆவதற்கும், அந்த சாஸ்திரங்களின் அறிவைப் பெறுவதற்கும் சாத்தியம் ஆகும்.

இத்தகைய பாரதிதேவியை வணங்கி அவரின் அருளைப் பெறுவோமாக.

**கே: தந்த்ரசார சங்க்ரஹத்தில் ஸ்ரீமதாசாரியார் பாரதிதேவியை எப்படி வர்ணித்திருக்கிறார்?**

ப: உத்யத்திவாகர சமூஹநிபாம் ஸ்வபர்து
ரங்க ஸ்திதாமபயஸ்த்வர பாஹுமுக்மாம் |
முத்ராம் ச தத்வ த்ருஷயே வர புஸ்தகம் ச
தோர்யுக்மகேன தததீம் ஸ்மரதாऽத்ம வித்யாம் ||

உதயசூரியனைப் போன்ற ஒளியைக் கொண்டவர், தன் கணவரின் தொடையில் அமர்ந்திருப்பவர், கீழ்க் கைகளில் அபய, வர முத்திரைகளை தரித்திருப்பவர், மேல் கைகளில் ஞான முத்திரை மற்றும் கிரந்தங்களைப் பிடித்துக்கொண்டிருப்பவர், கல்வியின் அபிமானினியாக இருக்கும் சரஸ்வதி பாரதியரை தியானம் செய்வோமாக.

***

# பாரதிதேவியின் அவதாரங்கள்

**கேள்வி: சரஸ்வதி மற்றும் பாரதியரைப் பற்றி தெரிந்துகொண்டோம். இவர்கள் பூமியில் எவ்வளவு முறை அவதரித்திருக்கின்றனர்?**

பதில்: பிரம்மனைப்போலவே சரஸ்வதிதேவிக்கும் பூலோகத்தில் அவதாரமில்லை. பாரதிதேவிக்கு அவதாரம் இருக்கிறது. இவர் ஐந்து அவதாரங்கள் செய்திருப்பதற்கு ஆதாரம் உள்ளது.

**கே: அந்த அவதாரங்கள் எவை?**

ப:

1. விப்ரகன்யா
2. நாளாயினி
3. திரௌபதி
4. காளி
5. சந்திரா

**கே: இந்த அவதாரங்கள் எப்போது நடைபெற்றன?**

ப: வாயுதேவரு ஹனுமந்தனாக அவதரித்தபோது, பாரதிதேவி 'விப்ரகன்யா' அல்லது 'ஷிவகன்யா' என்ற பெயரில் அவதரித்தார். த்வாபரயுகத்தில் நளதமயந்தியரிடம் 'இந்த்ரசேனையாக', த்ருபதராஜனின் மகளாக 'திரௌபதி' என்றும், காசிராஜனின் மகளாக 'காளி' என்றும், கலியுகத்தில் வாயுதேவர் மத்வராக அவதரித்தபோது 'சந்திரா' என்ற பெயரில் அவதரித்தார்.

**கே: இந்த ஐந்து அவதாரங்களும் பாரதிதேவியின் சுத்த அவதாரங்களா அல்லது வேறு தேவதைகள் யாரும் அதே உடலில் இருந்தனரா?**

ப: காளி என்பது மட்டும் பாரதிதேவியின் சுத்தமான அவதாரம். மற்ற நான்கிலும், பார்வதி, சசி, ஸ்யாமளா, உஷா - என்ற நான்கு தேவதைகளுடன் சேர்ந்து இருந்தார்.

**கே: பாரதிதேவியின் ஐந்து அவதாரங்களிலும் வாயுதேவர் அவரது கணவராக வந்திருந்தாரா?**

ப: காளியை பீமசேனதேவர் மட்டும் மனைவியாக ஏற்றுக்கொண்டார். திரௌபதியை மற்ற பாண்டவர்களுடன் சேர்ந்து பீமர் மனைவியாக ஏற்றுக்கொண்டார்.

**கே: அப்படியென்றால், இந்த்ரசேனை, விப்ரகன்யா, சந்திரா இந்த மூன்று அவதாரங்களும் பிரம்மசாரிணியாக இருந்தனரா?**

ப: முத்கல ரிஷிக்குள் இருந்த வாயுதேவர், இந்திரசேனையில் இருந்த பாரதிதேவியை மணம் புரிந்தார். ஆனால் ஹனுமந்த அவதாரத்தில், பாரதிதேவி விப்ரகன்யையாக அவதரித்தபோது, அவர்கள் மணம் முடிக்கவில்லை. ஹனுமந்தரைப் போலவே விப்ரகன்யையும் பிரம்மசாரிணியாகவே இருந்தார். அதைப்போலவே, கலியுகத்திலும் சந்திரா கூட பிரம்மசாரிணியாகவே இருந்தார்.

**கே: ஹிடிம்பை, பாரதிதேவியின் அவதாரம் இல்லையா?**

ப: ஹிடிம்பை, 'ஸ்ரீ' என்னும் ஸ்வர்கத்தின் அதிதேவதை. ஒரு சாபத்தினால் அசுர பிறவியை அடைந்தார்.

**கே: அப்படியென்றால் பீமசேனதேவர் இவரை எப்படி மணம் முடித்தார்?**

ப:

ஸா பாரதீ வரமீமம் ப்ரததாவமுஷ்ட்யை
ஸ்வாவேஷமாத்மதயிதஸ்ய ச ஸங்மேன ।
ஷாபத்விமுக்திமதிதீ ப்ரதப: ப்ரஸன்னா
தீனாஹ ஸா நிஜதனும் பவமானஸூனோ: ॥

ஸ்ரீ என்னும் ஸ்வர்க்கத்தின் அதிதேவதை, பாரதிதேவியைக் குறித்து தவம் புரிந்தார். அப்போது பாரதிதேவி அவளுக்கு தரிசனம் அளித்து, உன்னில் நான் தோன்றுவேன். பிறகு என் கணவரால் உன் சாபம் தீரும் என்று வரம் அளித்தார். இந்த பாரதிதேவியின் வரத்தினால் பீமசேனதேவர் ஹிடிம்பையில் கலந்திருந்த பாரதிதேவியை மணம் புரிந்தார்.

**கே: காளி என்பவரிடமும் இப்படி பாரதிதேவியின் சன்னிதானம் இருந்தது என்று ஏன் சொல்லக்கூடாது? இந்த அவதாரத்தை மட்டும் பாரதியின் சுத்தமான அவதாரம் என்று ஏன் சொல்கிறீர்கள்?**

ப: 'ஸா கேவலா பாரதி நான்யதேவ்யஸ்தத்ரா விஷ்டாஸ்தத் க்ருதே காஷிராஜ:' (தாத்பர்ய நிர்ணயம் 20-13) என்ற வாக்கியத்தின்படி காளியில் வேறு யாருடைய ரூபமும் சேர்ந்திருக்கவில்லை. தன்னுடைய விசேஷ சாதனைக்காக பாரதிதேவி காளியாக அவதரித்தார்.

**கே: ஹிடிம்பையிடம் யார் பிறந்தனர்? காளியிடம் யார் பிறந்தனர்?**

ப: நிர்ருதி, கடோத்கஜனாக ஹிடிம்பை - பீமசேனதேவரிடம் பிறந்தார். காளியிடம் 'சர்வ-த்ராதா' என்னும் பெயரில் ஸமானவாயு பிறந்தார்.

**கே: ஸ்ரீமதாசார்யர் பிறந்தபோது பாரதிதேவி சந்திரா என்ற பெயரில் அவதரித்தார் என்று எப்படி சொல்லமுடியும்?**

ப:

சதுர்ஜன்யபவேத்பூமெள த்வாம் நான்யோ மாருதாத் ப்ரஜேத் ।
நியமோடயம் ஹரேர்யஸ்மாத நாதிர்நித்ய ஏவ ச ॥
(தா.னி 18-114)

இந்த வாக்கியத்தில், நான்கு பிறவிகள் மட்டுமே என்று சொல்கிறார். கலியுகத்தில் நான்காவது பிறவி இல்லை என்று சொல்லவில்லை. பல உரையாசிரியர்கள், கலியுகத்தில் பாரதிதேவி இந்த நான்கு பேருடன் அவதரித்திருக்கிறார் என்று சொல்கிறார்கள். பிருஹதாரண்யக பாஷ்யத்தில் 'ஷிவகன்யா இந்த்ரஸேனா ச திரௌபதி காளி ச ததா சந்த்ரேத்யாதி ஸ்வர்ணபாமா:' என்று சொல்லியிருப்பதும் இந்த கேள்விக்கு ஆதாரமாக இருக்கிறது.

**கே: பாரதி, இந்த நான்கு தேவதா-ஸ்த்ரியர்களுடன் அவதரிப்பதற்கு என்ன காரணம்?**

ப: பார்வதி, ஸ்யாமளா, சசி மற்றும் உஷா இவர்களுக்கு பிரம்மதேவரின் சாபம் இருந்தது. இவர்கள் பூமியில் நான்கு முறை அவதரிப்பதற்கான நிலை உண்டாயிற்று. அப்போது அவர்கள் பாரதிதேவியைக் குறித்து தவம் செய்து வரம் வேண்டினர்.

**கே: பிரம்மன் இவர்களுக்கு ஒரே ஒருமுறை மட்டுமே சாபம் கொடுத்திருப்பார். நான்கு முறை பிறவிகள் வருவதற்கு என்ன காரணம்?**

ப: பிரம்மன் இவர்களுக்கு இரு முறை சாபம் அளித்தார். முதல்முறை பார்வதி, சசி, ஸ்யாமளா, உஷா ஆகிய நால்வரும் மற்றவர்கள் பார்க்குமாறு தம் கணவர்களுடன் கூடினர். இதைக் கண்ட பிரம்மன், 'உங்களுக்கு மனிதஜென்மம் கிடைக்கட்டும். இன்னொரு ஆணுடன் உங்களுக்கு மணம் நடக்கட்டும்' என்று கடுமையான சாபத்தைக் கொடுத்தார்.

ஒரு முறை இவர்கள் நால்வரும், ஒரே தேகத்தில் நுழைந்து, பிரம்மனை பரிட்சை செய்வதற்காக, மூன்று முறை அவரிடம் சென்றனர். அவர்களிடம் இருந்த அசுர-ஆவேசமே இதற்குக் காரணம். அப்போது பிரம்மன் 'மூன்று முறை என்னை மயக்க வந்திருக்கிறீர்கள். ஆகவே நீங்கள் அனைவரும் மனிதப்பிறவி எடுத்து ஒரே தேகத்தில் மூன்று முறை பிறக்கக்கடவீர்' என்று சாபம் அளித்தார்.

இந்த சாபங்களையும் பார்க்கும்போது மொத்தம் நான்கு முறை இவர்கள் பூமியில் பிறக்கவேண்டிய நிலை வந்தது என்று தெரியவருகிறது.

**கே: நான்கு பிறவிகளில் எந்தப் பிறவியில் இன்னொரு ஆணுடன் இவர்களுக்கு சங்கமம் ஆயிற்று?**

ப: இந்தக் கேள்வி, பார்வதி சசி ஆகியோருக்கும்கூட தோன்றியது. அதற்கான விடையை அறிந்துகொள்வதற்காக, அவர்கள் ஓராயிரம் ஆண்டுகள் பாரதிதேவியைக் குறித்து தவம் செய்தனர். அவர்களுக்கு தரிசனம் அளித்த பாரதிதேவியிடம், எங்களுக்கு மற்ற ஆண்களுடன் சங்கமம் ஆகக்கூடாது. ஆகவே நான்கு பிறவிகளிலும் நாங்கள் நால்வரும் உங்களுடனேயே ஒருடலில் இருக்கவேண்டும் என்ற வரத்தைக் கேட்டுப் பெற்றனர்.

**கே: மேற்சொன்ன இரண்டாவது சாபத்தின்படி, ஒரே தேகத்தில் இவர்கள் இருக்கவேண்டியது மூன்று பிறவிகளில் மட்டுமே. மற்ற ஆணுடனான சம்பந்தமும் ஒரே ஒரு பிறவியில் மட்டுமே. இப்படியிருக்கும்போது, நான்கு பிறவிகளிலும் ஒரே தேகத்தில் இருப்பதாக ஏன் வரம் பெற்றனர்?**

ப: எந்தப் பிறவியில் பிற ஆணுடன் சங்கமம் நடக்கப்போகிறது என்று அவர்களுக்கு தெரியவில்லை. ஆகவே நான்கு பிறவிகளிலும் பாரதிதேவியுடனேயே இருக்கவேண்டும் என்ற வரத்தைக் கேட்டுப் பெற்றனர்.

**கே: மத்வ அவதாரத்தின்போது, திரௌபதி, சந்திரா என்னும் பெயரில் அவதரித்தார் என்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது?**

ப:
ததைவ கிருஷ்ணாऽபி புவி ப்ரஜாதா ப்ரீத்யை ஹரேரந்தரமஸ்ய பாதயத் ।
மஹாஸுராத் விஷ்ணுபரார்ஜுனாத்யா: க்ருதே ப்ரஜாதா ஹரிதோஷணாய ।
புனஸ்ச தே ஸ்தானமவாப்ய ஸர்வே ஸ்வேயம் பராந்தே து விமுக்திமாப்னுயு: ॥

பீமசேனதேவர் மத்வராக அவதரித்தபோது க்ருஷ்ணை, சந்திராவாக அவதரித்தார். (தாத்பர்ய நிர்ணயம் 32-132) இங்கு திரௌபதியே அவதரித்திருக்கிறார் என்று சொல்லியிருப்பதால் பார்வதி, சசி ஆகிய நான்கு பேருடன் சேர்ந்தே அவதரித்திருக்கிறார் என்று சொல்லலாம்.

**கே: முதல் அவதாரத்தில் விப்ரகன்யையாக பாரதிதேவி என்ன செய்தார்?**

ப: பார்வதி முதலான நான்கு பேருடன், பாரதி ஒரு பிராமணரின் மகளாகப் பிறந்தார். சிவனைக் குறித்து இவர்கள் கடுந்தவம் புரிந்தனர். மற்ற நால்வரும் சிவனைக் குறித்து தவம் செய்ய, பாரதிதேவி சிவனில் இருக்கும் ஸ்ரீஹரியைக் குறித்து தவம் செய்தார். இப்படி அந்த பிறவி முழுவதையும் தபஸ்வினியாகவே கழித்தனர். அந்த சந்தர்ப்பத்தில் ஹனுமந்ததேவர் பிரம்மசாரியாக இருந்தார். அதற்குத் தக்கவாறு பாரதிதேவியும், தவத்திலேயே மூழ்கியிருந்தார்.

**கே: சிவனில் இருந்த ஸ்ரீஹரி பாரதிதேவிக்கு என்ன வரம் அளித்தார்? பார்வதி முதலானவர்களுக்கும் சிவன் என்ன வரம் அளித்தார்?**

ப: கணவரான வாயுதேவருடன், ஸ்ரீஹரியை மகிழ்ச்சி அடையச் செய்யவேண்டும் என்ற வரத்தினை ஸ்ரீஹரி அளித்தார். மற்றவர்களுக்கும் அவரவர் கணவருடன் சேர்ந்திருக்குமாறு சிவன் வரம் அளித்தார்.

**கே: அப்படியென்றால் பாரதிதேவிக்கு அனைத்து பிறவிகளிலும் வாயுதேவரே கணவராக வந்தார்தானே?**

ப: கணவருடன் சேர்ந்து விஷ்ணுவின் பூஜையை செய்யும் பாக்கியம் கிடைக்கட்டும் என்றே பாரதிதேவிக்கு ஸ்ரீஹரி வரம் அளித்தார். தாம்பத்யம் செழிக்கட்டும் என்று வரம் அளிக்கவில்லை. மற்ற நால்வரில், திரௌபதிக்கு மட்டும் தன் கணவருடன் தாம்பத்ய பாக்கியம் கிட்டியது. மூன்று முறை பிரம்மனை இவர்கள் பரிட்சை செய்ததால், மற்ற மூன்று பிறவிகளில் தம் கணவருடன் வாழும் பாக்கியம் இவர்களுக்கு கிடைக்கவில்லை.

**கே: இந்திரசேனை என்றால் யார்? யாரிடம் அவதரித்தார்? இவரது கணவராக யார் இருந்தார்?**

ப: த்வாபரயுகத்தில், நளதமயந்தியரிடம் பாரதிதேவி நான்கு தேவதா பெண்களுடன் இந்திரசேனையாக அவதரித்தார். நளனின் மகளானதால், நளநந்தினி அல்லது நாளாயினி என்று அழைக்கப்பட்டார். முத்கலரை மணம் புரிந்தார்.

**கே: இந்திரசேனை என்றால் என்ன? முத்கல என்றால் என்ன?**

ப: இந்திர என்றால் முக்யபிராண அல்லது நாராயண என்று பொருள். அவரையே தலைவனாக நினைத்துக் கொண்டதால், இவருக்கு இந்திரசேனை என்று பெயர் வந்தது. எப்போதும் ஸ்ரீஹரியின் பூஜையை செய்து, அதனால் மகிழ்ச்சியடைவதால் அந்த முனிவருக்கு முத்கல என்ற பெயர் வந்தது.

**கே: முத்கலர் ஒரு சாதாரண முனிவர். பாரதிதேவி வாயுதேவரின் மனைவி. இந்திரசேனையில் இருந்த பாரதிதேவி இந்த முத்கலரை மணம் புரிந்தது எப்படி சாத்தியம்?**

ப: இதற்கு ஒரு கதை உள்ளது.

பிரம்மதேவர் சரஸ்வதியை விரும்பினார் என்று பொதுவாக அறியப்படும் கதையைக் கேட்ட முத்கலர், பிரம்மதேவரை மரியாதைக்குறைவாக நினைத்தார். ஆகவே, பாரதி மற்றும் ஐந்து ரூபங்களைக் கொண்ட ஒருவருடன் சேர்ந்து பேரழிவை சந்திப்பீர் என்று பிரம்மனே இவருக்கு சாபம் கொடுத்தார். இதனால் மிகவும் துக்கமடைந்த முத்கலர், பிரம்மனைக் குறித்து கடுந்தவம் புரிந்தார். இந்த

தவத்தால் மனமகிழ்ந்த பிரம்மன், அவருக்கு சாபத்திற்கான பரிகாரத்தை தெரிவித்தார். நீ அந்த ஐந்து பெண்கள் சேர்ந்து இருக்கும் ரூபத்தை சேர்வதில்லை. உன் தேகத்தில் இருக்கும் வாயுதேவர், இந்திரசேனையுடன் சேர்கிறார். உனக்கு அப்போது மயக்க நிலை இருக்கும். அதனால் உனக்கு பாவம் வருவதில்லை. இதன்படியே, முத்கலர் இந்திரசேனையுடன் கிருஹஸ்தாஸ்ரமத்தை அனுசரிக்கவில்லை. முத்கலரில் இருந்த வாயுதேவர், இந்திரசேனையுடன் கிருஹஸ்தாஸ்ரமத்தை அனுசரித்தார்.

**கே: இந்திரசேனையின் பிறவிக்குப் பிறகு, திரௌபதியின் பிறவியில் ஐந்து கணவர்கள் வருவதற்கு என்ன காரணம்? இந்திரசேனைக்கு இருந்ததைப் போல ஒருவரே இங்கும் கணவராக ஏன் இல்லை?**

ப: பல காலங்களுக்கு வாயுதேவர் இந்திரசேனையில் இருந்து, பின் தனது லோகத்திற்கு திரும்பினார். அப்போது முத்கலரும் தவத்திற்கு கிளம்பினார். இந்திரசேனை கணவரிடமிருந்து பிரிந்தாள். அவளும் கடுந்தவத்தை புரிந்தாள். பார்வதி முதலானவர்களும் ருத்ரரைக் குறித்து தவம் மேற்கொண்டனர். பாரதிதேவி, ருத்ரரில் இருக்கும் ஸ்ரீஹரியைக் குறித்து தவம் மேற்கொண்டாள். ஸ்ரீஹரி அவருக்கு தரிசனம் அளித்தபோது 'பதிம் தேஹி' (ஒரு கணவரைக் கொடுக்கவும்) என்ற வரத்தை பாரதிதேவி கேட்டார். ஐந்து பேரும் 'பதிம் தேஹி' என்று கேட்டதால், வரத்தைக் கேட்டும் குரல் ஐந்து முறை கேட்டது. பாரதிதேவிக்கு 'அப்படியே ஆகட்டும்' என்று ஸ்ரீஹரியும், மற்ற நால்வருக்கு, ருத்ரரும் வரம் அளித்தனர். இதன்படியே, இந்திரசேனைக்கு ஐந்து கணவர்கள் அமைந்தனர். ஆகவே, திரௌபதி அவதாரத்தில் ஐந்து கணவர்கள் அமைந்தனர்.

**கே: ஒரு பெண்ணுக்கு ஐந்து பேர் கணவர்கள் என்றால், அது முறைதவறிய உறவு அல்லவா?**

ப: இந்தக் கேள்வி பார்வதி முதலானவர்களுக்கும் வந்தது. அதற்காக அவர்கள் சத்தமிட்டு அழுதனர். வரம் அளித்த ருத்ரர் மேல் இந்திரன் கோபப்பட்டான்.

**கே: ருத்ரரின் மேல் தேவேந்திரன் கோபப்பட்டது சரியா?**

ப: ஆம். சிவனின் சாபத்தால் தேவேந்திரன் பூலோகத்தில் பிறவி எடுத்து, திரௌபதியின் கணவனாக வேண்டியிருந்தது. ஸ்ரீஹரியின் அருளால் அர்ஜுனனாக அவதரித்தான். பிரம்மனிடம் கேட்காமல், ருத்ரர் தானாகவே வரம் அளித்ததால், பிரம்மன் ருத்ரருக்கு சாபம் அளித்தார். நீ பூலோகத்தின் மனிதனாகப் பிறக்கும்போது, மனைவியை அடையமாட்டாய் என்று சாபம் இட்டார்.

**கே: திரௌபதிதேவியில் பாரதி, பார்வதி, சசி, ஸ்யாமளா, உஷா என்று ஐந்து பேர் இருக்கின்றனர். மற்ற பெண்கள் தமது கணவருடன் கூடினாலும், பார்வதி மட்டும் ஏன் தன் கணவருடன் கூடவில்லை?**

ப: மேலே சொன்னதைப்போல, பிரம்மனின் சாபமே இதற்குக் காரணம். ருத்ரர் அஸ்வத்தாமனாக அவதரித்தார். அஸ்வத்தாமர் திருமணம் செய்யாமல், பார்வதியிடமிருந்து விலகியிருந்து, பிரம்மசாரியாகவே இருந்தார். ஆகையால், திரௌபதிதேவியின் தேகத்தில், பார்வதிதேவி உறங்கும் / செயலற்ற நிலையில் இருந்தார்.

**கே: திரௌபதியின் தந்தையான த்ருபதன், அவருக்கு திரௌபதி என்றே பெயர் வைத்தாரா, அல்லது வேறு பெயரும் இருக்கிறதா?**

ப: துருபதனின் மகளாகையால் இவருக்கு திரௌபதி என்றே பெயர். ஆனால், தந்தை வைத்த பெயர் 'கிருஷ்ணா' என்பதே. இவர் மிகவும் அழகானவராக இருந்தார். பெண்களிலேயே மிகவும் உத்தமமானவராக, மிகவும் அழகானவராக இருந்ததால் இவருக்கு 'கிருஷ்ணா' என்ற பெயர் மிகவும் பொருத்தமாக இருந்தது. இதைப்போலவே பார்வதி, யாக்ஞசேன, பாஞ்சாலி என்னும் பெயர்களும் இவருக்கு இருந்தது.

**கே: திரௌபதி துருபதனின் மகளாகப் பிறக்கவில்லை. நெருப்பிலிருந்து பிறந்தவர் என்று கேள்விப்படுகிறோம். இது சரிதானே?**

ப: துருபதன் செய்த யாகத்தின் பிரசாதத்தைப் பெறுவதற்கு அவனின் மனைவி தடைபோட்டார். அங்கிருந்த பிராமணர்கள், அந்த பிரசாதத்தை யக்ஞ நெருப்பிலேயே போட்டார்கள். அப்போது, அக்னி குண்டத்திலிருந்து அக்னியின் அவதாரமான த்ருஷ்டத்யும்னன் மற்றும் திரௌபதி அவதரித்தனர். திரௌபதி, ஒரு வளர்ந்த கன்னியாகவே நெருப்பிலிருந்து வந்தார். நகைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தார். விஷ்ணு துரோகிகளை அழிப்பதற்காகவே இவர் அவதரித்திருக்கிறார் என்று அசரீரி கேட்டது.

**கே: திரௌபதியைப் பற்றி கூறவும்.**

ப: திரௌபதி, பாரதிதேவியின் அவதாரம். ருஜுகணஸ்தர். சத்வகுணங்களால் நிரம்பியவர். 32 லட்சணங்களையும் கொண்டவர். நோய், நொடி ஆகிய எந்தவித தோஷங்களும் இல்லாதவர். பிறந்ததிலிருந்து இறுதிவரை இளம்பெண்ணாகவே இருந்தவர். இத்தகைய உத்தமமான தேகத்தில், மற்ற நான்கு பெண்களும் வசித்தனர். இது அவர்களின் பாக்கியம். 'யத்ர ரூபம் தத்ரகுணா:' என்பதுபோல், உருவத்திற்குத் தக்க குணங்கள் அவர்களில் நிரம்பியிருந்தன.

**கே: திரௌபதியின் சுயம்வரத்தின் விதிகளை த்ருபதன் அறிவித்தபோது, கர்ணனும் அந்தப் போட்டியில் பங்கேற்க வந்தான் என்று திரௌபதி 'நாஹம் வரயாமி சுதம்' என்கிறாரே, இது சரியா?**

ப: தாக்ஷிண்யாதி பாடங்களில் (தென்னிந்தியாவில் இயற்றப்பட்ட கிரந்தங்களில்) இந்த வசனம் வரவில்லை. ஆனால் இது மிகவும் சுவாரசியமான ஒரு சம்பவம்.

**கே: சுயம்வரத்தில் அர்ஜுனன் தன் பாணத்தால் அந்த மீனை துளைத்து போட்டியில் வென்றபோது, திரௌபதி அவரின் கழுத்தில் மாலையை அணிவித்தார். இதனால் அர்ஜுனனே தனது கணவன் என்று தீர்மானித்தாள். இப்படியிருக்கும்போது, தம்பியின் மனைவியை அண்ணன்களான பீமன் மற்றும் தர்மராஜர் எப்படி மணம் முடித்தனர்?**

ப: சுயம்வரத்தில் அர்ஜுனனின் கழுத்தில் திரௌபதி அணிவித்த மாலையானது, திருமண மாலையல்ல. அது போட்டியில் வெற்றி பெற்றதால் போட்ட வெற்றி மாலை மட்டுமே. அப்போது திருமணம் நடக்கவில்லை என்றே நினைக்கவேண்டும். பின்னர் அனைவரின் சம்மதத்துடன், வேதவியாஸரின் ஒப்புதலைப் பெற்று, ஐந்து பாண்டவர்களும் திரௌபதியை மணம் முடித்தனர்.

**கே: தன்னுடைய ஒரே மகளை, ஐந்து பேருக்கு திருமணம் செய்துகொடுக்க துருபதன் எப்படி சம்மதித்தார்? அப்போதைய காலகட்டத்தில் இது விவாதிக்கப்படவில்லையா?**

ப: பெரிய குழப்பமே நேர்ந்தது. திருஷ்டத்யும்ன மற்றும் துருபதன் இருவருக்கும் பெருங்குழப்பமே நேர்ந்தது. யுதிஷ்டிரன், குந்தி ஆகியோர் என்ன சொன்னாலும் கேட்பவரில்லை. இறுதியில் வேதவியாஸரே வந்து திருமணம் செய்யுமாறு பணித்தார்.

**கே: திரௌபதிக்குள் ஐந்து பேர் இருந்ததால், ஒருவருடன் கூடும்போது மற்றவர்களுடன் முறை தவறிய உறவு என்பதான தோஷம் வரவில்லையா?**

ப:
கன்யைவ ஸாऽபவதத: ப்ரதிவாஸரம் ச ।
ஜன்மாபவத்யபிமதே: ப்ருதகேவ நாஷாத் ॥

ஒவ்வொரு நாளும் திரௌபதி கன்னியாகவே இருந்தார். ஆகவே தன் கணவர்களுடன் கூடும்போது, ஒவ்வொரு முறையும் புதிய பிறவியே வந்திருந்தது. இதை காந்தர்வ விவாக முறை என்று கூறலாம். எந்த கணவருடன் கூடினாரோ, அப்போது அந்த கணவரின் மனைவி மட்டுமே அந்த தேகத்தில் நிலைத்திருந்தார். மற்றவர்கள் மயக்க / செயலற்ற நிலையில் இருந்தனர். ஆகையால் கணவருக்கு பிறர் மனைவியை கூடிய தோஷம் வரவில்லை. பெண்களுக்கு பிற கணவரைக் கூடிய தோஷம் வரவில்லை.

**கே: பாரதிதேவிக்கு 'நித்ராவஸ்தா' (மயக்க / செயலற்ற நிலை) இருப்பதற்கு சாத்தியம் இல்லை என்றானபிறகு, அவருக்கு பிற கணவருடன் கூடிய தோஷம் வரவில்லையா?**

ப: ஒவ்வொரு முறை திரௌபதி தன் கணவர்களுடன் கூடியபோதும், அவரின் தேகத்திலிருந்த பாரதிதேவி மற்றும் தர்மராஜன் முதலானவர்களின் தேகத்திலிருந்த வாயுதேவர்க்கு மட்டுமே சங்கமம் நடந்தது. ஆகையால் பிற கணவருடன் கூடிய தோஷம் பாரதிதேவிக்கு வரவில்லை.

ஏவம் ஸ வாயுரனு விஷ்ட யுதிஷ்டிராதி பீமாத்மனைவ ரமதே ஸததம் தயைக: | அன்யாத்ருஷா ஹி ஸூரபுக்திரதோ ऽன்யன்யரூபா மானுஷ்யபுக்திரிதி நாத்ர விசார்யமஸ்தி ||

வாயுதேவர், தர்மராஜர் முதலானவர்களிடம் நான்கு ஆவேசரூபத்திலும், பீமசேனராகவும், பாரதிதேவியுடன் எப்போதும் நிலைகொண்டிருந்தார். தேவதைகள் கூடும் விதமே வேறு. ஆகையால் இந்த விஷயத்தில் மேலும் விவாதிப்பதற்கு வேறு ஒன்றும் இல்லை.

**கே: திரௌபதிதேவி, மகாராணி ஆனபோது அவரின் கடமையை எப்படி சரிவர செய்தார்?**

ப: மகாராணி ஆனபோது, திரௌபதிதேவிக்கு அனைத்து செயல்களை நிர்வகிக்கும் பொறுப்பு வந்து சேர்ந்தது. தினமும் அவர் அரண்மனையில் 90,000 முனிவர்கள், 10,000 யதிகள் ஆகியோருக்கு உணவு வழங்கப்பட்டு வந்தது. ஒவ்வொருவருக்கும் 300 பேர் அளவுக்கு குடும்பம் இருந்தது. இந்த மாபெரும் வேலை திரௌபதிதேவியின் மேற்பார்வையிலேயே நடந்து வந்தது. இவருக்கு உதவி செய்வதற்கு லட்சம் பேர் இருந்தனர். இவ்வளவு பேர் இருந்தாலும், தன் கணவர்கள் மற்றும் மாமியாரின் சேவைகளை தானே செய்துவந்தார்.

**கே: ஒவ்வொரு பதிவிரதையும் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை திரௌபதி சொல்லிக் கொடுத்தார் என்று சொல்கிறார்கள். இதை நாம் எப்படி புரிந்துகொள்ள வேண்டும்?**

ப: சாட்சாத் லட்சுமியின் ஸ்வரூபமான சத்யபாமா, ஒருமுறை திரௌபதியிடம் 'எல்லா கணவர்களுக்கும் நீ எப்படி அன்பு செலுத்துகிறாய்? இதன் ரகசியம் என்ன?' என்று கேட்டார். சாதாரண மக்களுக்குப் புரியவைப்பதற்காக சத்யபாமா இப்படி கேட்டார் என்று அறிந்துகொண்ட திரௌபதி, ஒவ்வொரு மனைவியும் தம் கணவருடன் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை மிகவும் விவரமாகத் தெரிவித்தார். இந்தக் கதையானது, மகாபாரதத்தில் ஒரு உப-பர்வத்தில் முழுமையாக விளக்கப்பட்டிருக்கிறது.

**கே: மய-சபையில் ஒரு வெற்றிடத்தை தண்ணீர் நிரம்பியிருக்கிறது என்று தவறாக எண்ணி, துரியோதனன், ஆடைகளை சிறிதே தூக்கி நடந்தான். இன்னொரு இடத்தில் நிலம் என்று எண்ணி, தண்ணீரில் விழுந்தான். இந்த சமயங்களில், பீமன், திரௌபதி ஆகியோர் பலமாக சிரித்தனர். இங்கு பீமன் மற்றும் திரௌபதி ஏன் சிரிக்கவேண்டும்? துரியோதனனின் மேல் இருந்த**

**பகையே இதற்கு காரணம். அல்லது அவருக்கு அவமானம் செய்யவேண்டும் என்பதே இதன் காரணம். ஆகையால் திரௌபதி செய்தது தவறுதானே?**

ப: ஸ்ரீகிருஷ்ணன் செய்த குறிப்பினால் முதலில் சிரித்தது பீமன். கூடவே திரௌபதியும் சிரித்தார். மற்றவர்களும் பலமாக சிரித்தனர். பூமியின் பாரத்தைக் குறைக்க இது ஒரு துவக்கப்புள்ளி என்று இவர்கள் அனைவருக்கும் தெரிந்திருந்தது. ஆனால் இப்படி சிரித்ததில் அவமானப்பட்ட துரியோதனன், இவர்களை நாட்டை விட்டு துரத்தவேண்டும் என்ற கெட்ட எண்ணத்தில் இவர்களுடன் சூதாட்டம் ஆடினான். இது துரியோதனின் தவறு மட்டுமே தவிர, பீமன், திரௌபதியின் தவறு அல்ல.

**கே: சூதாட்டம், மகாபாரதத்தில் ஒரு முக்கியமான கட்டம். அந்த சமயத்தில், பரசுக்ல-த்ரயர்களில் ஒருவரான பாரதிதேவியை துச்சாதனன் முதலானோர் தொடுவதற்கு எப்படி சாத்தியம் ஆயிற்று? மற்றும் அவரை துகிலுறியும் தகுதி அவர்களுக்கு இருந்ததா?**

ப: வாயுதேவரைப் போலவே பாரதிதேவியும் 'அகணாஷ்மஸமள்' (யாராலும் வெல்லப்பட முடியாதவர்). இவரை கெட்ட நோக்கத்துடன் பார்க்கும் சக்தியும்கூட துச்சாதனர்களுக்கு இல்லை. தொடுவது என்பது சாத்தியமே இல்லை. ஆகவே, சூதாட்ட கட்டத்தின்போது, அவமானம் ஏற்பட்டது சசி முதலானவர்களுக்கே தவிர பாரதிதேவிக்கு அல்ல.

**கே: துச்சாதனன் சபைக்கு இழுத்து வந்த சமயத்தில், திரௌபதி விழுப்புடன் இருந்தார் என்றும், அந்த சமயத்தில் இருக்கவேண்டிய ஒரு ஆடையை மட்டுமே அணிந்திருந்தார் என்றும் சொல்கின்றனர். இதை எப்படி அறிந்துகொள்ள வேண்டும்?**

ப: சம்பிரதாயத்தை பின்பற்றிவரும் பெண்கள் இன்றும்கூட விழுப்பு சமயத்தில், ஒரு ஆடையை மட்டுமே அணிந்திருக்கின்றனர். அப்படியென்றால் மூன்று நாட்களும் ஒரே ஆடையை அணிந்தவராகின்றனர். ஆடையை மாற்றிக்கொள்வதில்லை. இந்த வழக்கத்தை உடையவர்களையே 'ஏகவஸ்த்ரதாரிணி' (ஒரு ஆடையை அணிந்தவர்) என்று அழைக்கின்றனர். பிறந்தது முதல் ஒரு ஆடையை அணிந்தவர்கள் என்று பொருள் கொள்ளக்கூடாது.

**கே: அணிந்திருந்த ஒரே சேலையை துச்சாதனன் இழுத்தான். அது தொடர்ந்து வளர்ந்துகொண்டே இருந்தது என்கிறார்களே. அது எப்படி?**

ப:

புன: புனஸ்சைவ விகர்ஷமாணே
து:ஷாசனேऽன்யானி ச தாத்ருஷானி |
பபூவுரந்தம் ந ஜகாம பாப:
ஷ்ராந்தோ ந்யஷேதத் ஸ்வின்னகாத்ர: ஸபாயாம்

(தாத்பர்ய நிர்ணய 21-365)

தாத்பர்ய நிர்ணயத்தில் சொல்லியிருப்பதைப் போல, துச்சாதனன் அந்த சேலையை இழுக்கத் துவங்கிய அந்த நேரத்திலேயே, திரௌபதியின் உடலில் மேல் அந்த சேலையைப் போன்றதொரு ஆடை இருந்தது. இப்படி பல சேலைகளை துச்சாதனன் இழுத்தான் என்றுதான் பொருளே தவிர, ஒரே சேலையை இழுத்தான் என்பதல்ல. மேலும் எந்த சந்தர்ப்பத்திலும், திரௌபதி ஆடையில்லாமல் இருக்கவில்லை.

**கே: பீஷ்ம, துரோணாதிகள் சேர்ந்த சபையில், 'யுதிஷ்டிரர் முதலில் தான் தோற்று, பின் என்னை பணயத்தில் வைத்தாரா? அல்லது முதலில் என்னை தோற்று பிறகு அவர் பணயமாக தோற்றுப் போனாரா?' என்று திரௌபதி கேட்டார். இது சரியான கேள்வியா? வேறுதும் கேட்கத் தோன்றாமல், இதை கேட்டாளா?**

ப: இதற்கு தாத்பர்ய நிர்ணயத்தில் அழகான பதில் உள்ளது. தன் மனைவியை பணயத்தில் வைத்து, தோற்று, அவளை மற்றவர்களிடம் ஒப்படைப்பதற்கு கணவனுக்கு என்றைக்கும் அதிகாரம் இல்லை. ஒருவேளை யுதிஷ்டிரன் சூதாட்டத்தில் தோற்றால், அவனுடன் திரௌபதியும் சேர்ந்து தோற்றாற்போலவே ஆகும். தவிர, திரௌபதியை தனியாக பணயம் வைக்க யுதிஷ்டிரனுக்கு அதிகாரம் இல்லை.

**கே: மகாபதிவிரதையான திரௌபதி, துச்சாதனனுக்கு சாபம் கொடுத்திருக்கலாம். அதன் மூலமாக தர்மத்தையும் நிலை நாட்டியிருக்கலாம். ஏன் அப்படி செய்யவில்லை?**

ப: திரௌபதியின் பதிவிரதம் உலகப் புகழ் பெற்றது. கணவர்களின் மனதிற்கிணங்க நடப்பவள். ஆகையால் எந்த சந்தர்ப்பத்திலும் திரௌபதி சாபம் கொடுப்பதில்லை. கீசகனால் தொந்தரவு கொடுக்கப்பட்ட சமயத்திலும், அவனுக்கு சாபம் கொடுக்கவில்லை. எந்த துஷ்டராலும், பாரதிதேவியை தொடுவதற்கு சாத்தியமில்லை. பாரதிதேவிக்கு அவமானம் செய்ததற்கான பாவத்தை மட்டும் அவர்கள் பெறுகின்றனர். தங்களின் பாவத்தை மேலும் அதிகரித்துக் கொள்கின்றனர். இந்த உத்தேசத்தினாலேயே இத்தகைய சம்பவங்கள் நடக்கின்றன.

**கே: வனவாச சமயத்தில் யுதிஷ்டிரருக்கும் திரௌபதிக்கும் ஒரு முறை ஒரு விவாதம் நடந்தது. அதில் ஜீவகர்த்ருத்வ விஷயம் பேசப்பட்டது. அப்போது திரௌபதி சொல்லிய ஜீவகர்த்ருத்வத்தை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப:

ப்ரத்யக்ஷமேதத் புருஷஸ்ய கர்ம
தேனானுமேயா ப்ரேரணா கேசவஸ்ய |
ஸ்நகர்ம க்ருத்வா விஹிதம் ஹி விஷ்ணுனா

தத்ப்ரேரணேத்யேவ புதோடனுமன்யதே ||

ஜீவகர்த்ருத்வ (ஜீவனால் ஒரு வேலையை செய்யமுடியும் திறன்) நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது. இதன் பின் இருக்கிற விஷ்ணுவின் நோக்கத்தையும் நாம் ஆராய்ந்து அறியவேண்டும். அவரின் வழிகாட்டுதலின் பேரிலேயே ஜீவனால் எந்த வேலையையும் செய்ய முடிகிறது என்று நிரூபித்தார் திரௌபதி.

**கே: பாரதிதேவியின் அவதாரங்களில் முக்கியமானது எது?**

ப: பாரதிதேவி பல அவதாரங்களை எடுத்திருக்கிறார். அவற்றில் முக்கியமானது திரௌபதி அவதாரம் ஆகும். மொத்த மகாபாரதத்தின் நாயகி இவரே ஆகும். இவரே வித்யாபிமானினி. இத்தகைய வித்யாபிமானினியான பாரதியின் சரித்திரமே மகாபாரதம் ஆயிற்று. திரௌபதிக்கு அவமானம் செய்தால், அது வேத வித்யைகளுக்கு அவமானம் செய்தது போன்றதாகும். இத்தகைய அவமானத்தை பாண்டவர்கள் என்றும் மறக்கவில்லை. இறுதியில் வேத வித்யைக்கு அவமானம் செய்தவர்களை கொன்றொழித்தனர். இன்றும் உலகத்தில் யாராவது வேதவித்யைக்கு அவமானம் செய்தால், அவர் அழிந்துபோவதில் சந்தேகமே இல்லை. ஆகையால் வேதவித்யைக்கு அபிமானினியான திரௌபதியின் மகிமைகளை அறிந்து, வேண்டி, வணங்கி நம் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக மாற்றிக்கொள்வோம்.

**கே: பாரதிதேவியின் அவதாரங்கள் எவ்வளவு?**

ப: பாரதிதேவி ஐந்து அவதாரங்களை எடுத்திருக்கிறார். த்ரேதாயுகத்தில் ஒரு பிராமணரிடத்தில் அவதரித்து ஷிவகன்யா என்று அழைக்கப்பட்டார். திருமணம் ஆகாமல் தபஸ்வினியாக இருந்தார். இரண்டாம் அவதாரம், நளதமயந்தியரிடம் பிறந்து இந்த்ரசேன என்று அழைக்கப்பட்டார். முத்கல்யரிடம் இருந்த வாயுதேவரை மணந்தார். மூன்றாம் அவதாரமாக த்ருபதனிடம் திரௌபதியாக அவதரித்தார். காசிராஜனின் மகளாக காளி என்ற பெயரில் அவதரித்தார். ஹிடிம்ப என்னும் ஆவேச அவதாரத்தை தரித்தார். கலியுகத்தில் சந்திரா என்னும் பெயரில் பிறந்தார். சிலர் இவரை கல்யாணிதேவி என்று அழைக்கின்றனர். இந்த அனைத்து அவதாரங்களையும் நினைத்து தன்யர் ஆவோமாக.

**கே: திரௌபதியின் கதையை சுருக்கமாகச் சொல்லவும்.**

ப: த்ருபதன் தனக்கு வாரிசு பிறக்கவேண்டுமென்று ஒரு யாகத்தை செய்ய முடிவு செய்தான். யாஜோபயாஜர் புரோகிதர் ஆனார். மகன், மகள் பிறக்கவேண்டி குடிக்கவேண்டிய ஹவிஸ்ஸை (பிரசாதத்தை) குடிப்பதற்கு அவரின் மனைவி சரியான நேரத்திற்கு வரவில்லை. அதனால் அந்த ஹவிஸ்ஸை ஹோமத்திலேயே போட்டுவிட்டனர். அதனால் ஹோமத்தின் அக்னியிலிருந்து திருஷ்டத்யும்னன் வெளியில் வந்தான். பிறகு அக்னியிலிருந்து திரௌபதி வந்தார். பிறந்தபோதே வாலிப வயது, மிகவும் அழகான உடல், பீதாம்பர

ஆபரணங்களினால் ஜொலிக்கும் அழகினைக் கொண்டிருந்தார். அழகில் இவரை மிஞ்ச வேறு யாரும் இருக்கவில்லை. துஷ்ட க்ஷத்திரியர்களின் நாசத்திற்காக அக்னிகுண்டத்திலிருந்து வெளிவந்தார்.

திரௌபதியை மணம்புரிய இந்திரன், க்ஷத்திரியர்களிடம் வந்தான். ஆனால், சுயம்வரத்தில் நடந்த போட்டியில் வென்ற அர்ச்சுனனுக்கு திரௌபதி மாலை அணிவித்தாள். பிறகு பாண்டவர்களுடன் அவளது திருமணத்தை விமரிசையுடன் செய்வித்தான் த்ருபதன். திரௌபதி ஒருவருக்கு ஐந்து பாண்டவர்களுடன் திருமணம் நடந்தது. உதாரண பதிவிரதையாக அனைவரும் மெச்சும்படியாக இருந்தார் திரௌபதி. இவரது அழகு, வீரம், குணம் இவைகளைப் பார்த்து துரியோதனாதிகள் பொறாமைப்பட்டனர். வஸ்திராபரணம் முதலான பல சமயங்களில் அவரை அவமானப்படுத்த முயன்றனர். ஸ்ரீகிருஷ்ணனின் அருள் இருந்த காரணத்தால் யாராலும் எதுவும் செய்யமுடியவில்லை. ஒவ்வொரு நொடியும் தர்மசாதனை செய்து, விஷ்ணு சர்வோத்தமத்வத்தை, வாயு ஜீவோத்தமத்வத்தை நிறுவினார். வேதாபிமானினியான திரௌபதியின் மனதை அறிந்த பாண்டவர்கள், துஷ்ட க்ஷத்திரியர்களை அழித்தனர். மகாபாரத யுத்தத்தின் மூலம் கௌரவர்களை அழித்து, அதர்மத்தை அழித்தனர். இதற்கெல்லாம் திரௌபதியே காரணம் என்பதால், அவரே மகாபாரதத்தின் கதாநாயகி எனப்படுகிறார்.

இத்தகைய திரௌபதியின் அருள் நமக்கு எப்போதும் இருக்கவேண்டும். நற்கல்வியைப் பெற்று ஸ்ரீஹரியிடம் நாம் போய் சேர அவரது அருளே உதவியாக இருக்கும்.

***

ஐந்து பரிசுத்த தேவதைகளை உரையாசிரியர்கள் '**பரசுக்ல த்ரயர்கள்**' என்று அழைக்கிறார்கள். மோட்சத்தை அடைவதற்கு இவர்களின் ஸ்வரூபத்தை தெரிந்துகொள்வது மிகவும் அவசியம். ஆகையால், பற்பல கிரந்தங்களின் ஆதாரத்தில், இந்த பஞ்சபரிசுத்த தேவதைகளைப் பற்றி பல விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவர்களின் அருளைப் பெற்று, அதன் மூலம் ஸ்ரீஹரியின் பிரசாதத்தைப் பெற்று, நமக்கு தத்வஞானம் கிடைக்கட்டும் என்று வேண்டுமோமாக.

அஸ்மத் குருஅந்தர்கத பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீராமகிருஷ்ண வேதவியாஸாத்மக லட்சுமிஹயக்ரீவாத்மக மத்வபதி ஸ்ரீகோபாலகிருஷ்ண: ப்ரியதாம்

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

***